# சிந்தாமணி டாக்கீஸ், மதுரை




வெளித்தோற்றம் (பகல்)




வெளித்தோற்றம் (இரவு)



உட்புறம்

- இந்தத் தியேட்டரில் நவீன R. C. A. High Fidelity ஒலிப் பரப்பி விண்டரும், மேன்மையான, உயர்ந்த & தாழ்ந்த Frequency யூனிட்டுகளுடன் கூடிய ஒலிப் பெருக்கிகளும், மிகுந்த பிரகாசத்துடன் கண்களுக்குக் குளிர்ச்சியைத் தருவதுமான (High Intensity) ஆர்க் விளக்குகளும் நன்கு அமைக்கப்பட்டுள்ளன.
- நவீன சுகாதார முறைப்படி அமைக்கப்பட்டதும், மிகுந்த வசதி கூடியதும், உயர்தர படங்களே காண்பிக்கப்படுவதுமான தியேட்டர் எங்களுடையது தான்.

## இப்பொழுது நடைபெறுவது ராயல் டாக்கீஸாரின்

# ஹரிதாஸ்



# சமர்ப்பணம்

வள்ளியும் தெய்வயானையும் சண்டையை நிறுத்தி அந்நியோன்யமாக வாழ்வதற்குரிய ஒரு அருமையான காரியத்தை இன்று செய்கிறோம். தமிழ்த் தெய்வமாகிய முருகனுக்கு அழகின் வடிவமான கலைத் தேவியைத் திருமணம் செய்து வைக்கிறோம். "பிரபுவே! எம்பெருமானே! எத்தனையோ இன்னல்களுக்கு இடையில் அருந்தவம் புரிந்து பெற்ற அருமைப் புதல்வி இவள். உலகிலே — தமிழ் உலகிலே — பத்திரிகை உலகிலே — இதுவரை கண்டும் கேட்டும் அறியாத அழகுடன் அறிவொளி வீசிக்கொண்டு விளங்குகிறாள். இவளை அருமையுடன் ஏற்றுப் பெருமையுடன் போற்றி மகிழுங்கள்!" என்று கேட்டுக் கொள்கிறோம்.

முருகப் பெருமானுடைய மூன்றாவது திருமணத்துக்குத் தமிழ் நாட்டார் அனைவரையும் "சேர வாரும் ஜகத்தீரே!" என்று பரிவுடன் அழைக்கிறோம்.

## பொருளடக்கம்

# இசைநயம் நிறைந்த கர்நாடக சங்கீதம்



ஸ்ரீமதி
எம். எஸ். சுப்புலக்ஷ்மி

N. 18234
காலைத் தூக்கி — யதுகுல காம்போதி

★

N. 18218
கண்ணெடுத்தாகிலும் — ஸிம்மேந்திர மத்யமம்
( இரண்டு பாகங்கள் )

★

N. 18208
மாதவை — [illegible]
( இரண்டு பாகங்கள் )

"ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்" ரிகார்டுகள்

ஸ்ரீமதி
என். ஸி. வஸந்தகோகிலம்

N. 18229
ஆர்வந் தியாகம் — [illegible]
( இரண்டு பாகங்கள் )

★

N. 18219
ஆனந்த நடனம் — காம்போதி
( இரண்டு பாகங்கள் )

★

திரு. எம். எம்.
தண்டபாணி தேசிகர்

N. 18228
கோயிலும் - சாமியும்
( இரண்டு பாகங்கள் )




M. SAMUEL

# வேலன் பாட்டு

பல்லவி

தெள்ளத் தெளிந்ததையா — உமது
கள்ளத் தனமெல்லாம்!

அநுபல்லவி

வள்ளிக் குறத்தியின்
மையலில் சிக்கினால்
எள்ளத்தனை அன்பும்
என்மீ திருக்குமோ?

சரணம்

வேட்டைக் கெனஎழுவீர் — கையில்
வேலையும் ஏந்திச் செல்வீர்
காட்டினைச் சுற்றியக்
கள்ளியின் தினைப்புன
மேட்டுக்கே ஒருமானை
விரட்டிப் பின் ஓடுவீர்!

கட்டிச் சிறை யிடுவார் — அந்தக்
காட்டுக் குறவரென்று
நட்டழிந் துன்னம்
தடுமாறி யல்லவோ
வேட்டை வெளியிலோர்
வேங்கை மரமானீர்!

—ஸ்ரீ தேசிகவிநாயகம் பிள்ளை.

# பாய்ந்தானே ஹனுமான்



-சுவாமி சுத்தானந்த பாரதி-

நமது நாட்டை ஆவேசப்படுத்திய நூல்களில் சிறந்தது இராமாயணம். வால்மீகி, கம்பர், காளி தாஸர், துளஸி தாஸர், பாஸ்கரர் ஆகிய மகாகவிகள் இராம கதையைப் பாடினர். அதைக் கீர்த்தனமாகச் செய்தவருள் தலைசிறந்தவர் அருணாசலக் கவிராயர். இவர் தில்லையாடியில் பிறந்தார். எட்டு வயதில் பெற்றோரை இழந்து, தருமபுரம் ஆதீனத்தில் அடியாராகச் சேர்ந்து தமிழும் ஆரியமும் கற்றார். இவரைக் குறளும் கம்ப ராமாயணமும் வசீகரித்தன. உலக காவியங்களில் அவையே ஒப்புயர்வற்றவை என்பது இவர் முடிபு. இவரது கல்வி ஒழுக்கங்களைக் கண்டு, தருமபுர ஆதீன கர்த்தர், இவரைத் தமது பீடத்தில் இருக்க வேண்டினார். கவிராயர் "நான் வள்ளுவர் சொல்லும் இல்லற வழியே யிருந்து, உலகிற்கு எனது வாக்கினால் பணி செய்ய விரும்புகிறேன்" என்றார். "அப்படியே செய்யும்" என்று பண்டார சந்நிதிகள் ஆசி கூறி அனுப்பினார். முப்பது வயது மட்டும் தூய பிரமசரியங் காத்த பிறகு, இவர் மனையறம் புகுந்தார். ஆர்வத்துடன் வந்தவருக்கெல்லாம் இவர் கல்வியை இனாமாகத் தந்தார். காசுக்கடை வைத்துக் குடும்பத்தைக் காப்பாற்றி வந்தார்.

அக்காலம் புதுச்சேரியில் தங்கம் வெள்ளி மலிவு. இவர் அடிக்கடி அங்கே தொழில் விஷயமாகச் சென்று வருவதுண்டு. ஒரு சமயம் வழியில், சீகாழியில், தருமபுர மடத்தில் இவர் தங்கினார். அங்கிருந்த கட்டளைத் தம்பிரான் இவருடைய பள்ளித் தோழர். இருவரும் அன்புடன் அளவளாவினர். தம்பிரான் சீகாழிப் பள்ளு பாடுவதற்காகப் பிள்ளையார் சுழிபோட்டு, நிதம் தலை எண்ணிக் கொண்டிருந்தார். தமது கருத்தை அருணாசலக் கவிராயரிடம் அவர் சொன்னார். கவிராயர் ஒரே இரவில் பள்ளு முழுதையும் பாடித் தந்துவிட்டு, புதுச்சேரிக்குச் சென்றார். திரும்பி வரும் போதும் சீகாழி மடத்திலேயே தங்கினார். இதற்குள் தம்பிரான் ஒரு பெரிய வீட்டை இவருக்கென்று வாங்கி, இவர் குடும்பத்தையும் அழைத்துவரச் சொல்லி, சீகாழியிலேயே இருக்கச் செய்தார்.

அன்று முதல் கவிராயர் தம்பிரான் விருப்பத்தின்படி பல காவியங்கள் பாடினார்.

கவிராயர் இரவில் கம்ப ராமாயணப் பிரசங்கமும் செய்து வந்தார். அதைக் கேட்டவருள் வேங்கடராமையர், கோதண்டராமையர் என்ற இரண்டு இசைப் புலவர்கள் இருந்தனர். அவர்கள் கவிராயருடைய



மாணவரானார்கள். அவர்கள் தூண்டுதலினால் கவிராயர் கம்ப ராமாயணத்தை வைத்துக் கீர்த்தனங்கள் பாடத் தொடங்கினார். அறுபதாம் வயதில் அருணாசலக் கவிராயர் இராமநாடக கீர்த்தனத்தை முடித்து ஸ்ரீரங்கத்தில் அரங்கேற்றச் சென்றார். அரங்கேற்றுவதற்கு முன்புதான் "ஏன் பள்ளி கொண்டீர், ஐயா!" என்ற மோகன கீர்த்தனம் பாடினார். அதைக் கேட்ட பட்டர்கள் கம்பர் மண்டபத்திலேயே, பங்குனி அஸ்த நாளில், கவிராயர் கீர்த்தனங்களை அரங்கேற்றச் செய்து சன்மான மளித்தனர். கவிராயரின் மாணவரான இசைப் புலவர்கள் ராமாயண கீர்த்தனங்களை நாடெங்கும் பரப்பி, நல்ல பரிசு பெற்றனர். செல்வர்கள் கவிராயர் வாக்கினாலேயே கீர்த்தனங்களைக் கேட்க விரும்பி யழைத்தனர். ஏழாண்டுகள் கவிராயர் தமிழ் நாடெங்கும் சுற்றிக் கீர்த்தனப் பிரசங்கம் செய்து வந்தார். இடை இடையே பல அற்புத சம்பவங்கள் நடந்தன. அவற்றில் ஒன்றை இங்கே சொல்லுகிறேன்.

2

அக்காலம் தமிழகத்தில் சோழபாண்டியர் அரசு மறைந்து, நாயக்கர் அரசு வந்து, அதுவும் ஒழிந்து, நவாபும் மராடியரும் கொடிபோட்டனர். இடையே ஆங்கிலேயருக்கும் பிரெஞ்சுக்காரருக்கும் போட்டா போட்டிகளும் வெட்டுச் சண்டைகளும் நடந்தன. பிரெஞ்சுக்காரரின் கை அப்போது மேலோங்கி யிருந்தது. துய்ப்ளேக்ஸ் நாடெங்கும் செல்வாக்குப் பெற்று அசல் நவாபா யிருந்தான். அவன் வலது கையாக இருந்தவர் ஆனந்த ரங்கம் பிள்ளை என்னும் சிறந்த ராஜதந்திரி. ஆனந்தரங்கம் பிள்ளை துபாஷாகவும், துய்ப்ளேக்ஸின் மந்திரியாகவும் இருந்து, சீரும் செல்வமும் செல்வாக்கும் பெற்றுச் செழித்தோங்கினார். அவர் கலா ரசிகர். பக்திரசமான பாடல்களைக் கேட்டால், மெய்ம்மறந்து போவார். கவிகளுக்கு வரையில்லாமல் பொன் அளிப்பார். ஒரு தரம் பரிசாக வந்த ஒரு கவிக்கு, வெள்ளி இலை நிரம்பப் பணம் குவித்துத் தந்தார்.

ஒரு சமயம் அருணாசலக் கவிராயர் புதுச்சேரிக்கு வந்து, ஆனந்தரங்கம் பிள்ளைக்கு ஒரு சீட்டுக்கவி அனுப்பி விட்டுக் காத்திருந்தார். அச்சமயம் தஞ்சாவூரிலிருந்து துளஜி மன்னர் ஆனந்தரங்கம் பிள்ளைக்கு அவசரமான தூதனுப்பி, "மதார் முல்லக் என் கோட்டையை வளைத்துக் கொண்டான். தங்கள் சேனையை உதவிக்கு அனுப்ப வேண்டும்" என்று வேண்டினார். அச்சமயம் கவிராயரும் பேட்டி வேண்டினார். ஆனந்தரங்கம் பிள்ளை கவிராயரை அழைத்தார். கவிராயர் தம்பூராவைத் தூக்கிக் கொண்டு ஒரு தரு பாடிக்கொண்டே தோன்றினார்.

ஆனந்தரங்கம் பிள்ளை:—கவிராயரே! உமது ராமாயணத்தைப் பற்றிக் கேட்டிருக்கிறேன். நாடு போர்க்களமாகி யிருக்கிறது. நாட்டை வீரப்படுத்த உமது பாட்டு உதவுமா?

அருணாசல:—எனது உபாசனதெய்வமான ஹனுமான் செய்த வீரப் போரைக் கேட்டால், அலிக்கும் ஆண்மை யுண்டாகுமே!

ஆனந்தரங்கம்:—எங்கே? இந்தத் தூதருக்கு வீரம் துள்ளி எழும்படி ஒரு கீர்த்தனம் நடக்கட்டும் பார்ப்போம்!

"ஆஹா!" என்றார் கவிராயர். "பாய்ந்தானே ஹனுமான்!" என்று ஆவேசமாக நாதநாமக்கிரியையில் ஒரு பிர்கா இழுத்து, பாய்ந்து பாய்ந்து பாடினார். கூடப் பாடிய இசைப் புலவர்களும் உருக்கமாகப் பொருள் விளங்கும்படி இசைத்தனர்.

"மோச நிசாசரர் நாசமதாய்விட
வீசிய வால் எம பாசம தாகப்
பாய்ந்தானே ஹனுமான்!"

என்று கவிராயர் முன்னாலே ஒரு தாவுத் தாவினார். "சபாஷ்! சபாஷ்! இதுவே பாட்டு...!" என்று ஆனந்தரங்கம் பிள்ளை சந்தோஷப்பட்டுக் கை நிரம்பப் பொன்னளித்தார். பிறகு தஞ்சைத் தூதரிடம் இவ்வாறு சொன்னார்:

"துளஜிக்கு நான் ஒரு படை தருகிறேன். அதைவிட உங்களை ஆவேசப்படுத்தி வெற்றிபெறச் செய்யும் இந்தத் தமிழிசைவாணரையும் தருகிறேன். இவரைக் கொண்டு, ஹனுமான் கதை செய்யச் சொல்லிச் சேனை வீரரைப் பக்தியுடன் கேட்கச்



செய்யும். கவிராயரே, தஞ்சையை நோக்கி ஹனுமான் வேகத்துடன் பாயும், பார்க்கலாம்!"

அவ்விதமே கவிராயர் தூதர் வெங்கண்ணாவுடன் தஞ்சை சென்றார்.

### 3

நவாப் மதார்மல்லின் சேனை வென்னாற்றங் கரைக்கு அப்புறம் பாய்ச்சலில் நிற்கிறது. வெங்கண்ணா, புதுவைப் படையுடன் கவிராயரையும் துளஸி மன்னரின் சமுகத்திற்கு அழைத்து வந்தார். அரசர் சேனையைக் கண்டு மகிழ்ந்து, கவிராயரைப் பார்த்து "இவரும் போர்வீரரா?" என்று கேட்டார். வெங்கண்ணா "இவர் வாக்கில் ஹனுமார் இருக்கிறார். இவரது இராமாயணக் கீர்த்தனங்களைக் கேட்டால் நமது படைக்குப் புதிய பலம் வரும்" என்றார். "சரி, நடக்கட்டும்" என்றார் துளஸி மன்னர்.

* * *

தஞ்சை அரண்மனை சங்கீத மஹால், தோரணங்களினால் அலங்கரிக்கப் பெற்றிருக்கிறது. மராட்டியர் "ரகுபதிராகவ ராஜாராம்" பாடுகின்றனர். வீரர் ராமாயண கீர்த்தனம் கேட்க ஆவலாகக் காத்திருக்கின்றனர். பக்க வாத்தியங்களும் பின்பாடகரும் சகிதம். அருணாசலக் கவிராயர் **ஹனுமான் விஜயம்** என்ற பொருளைக் கொண்டு சம்ஸ்கிருத சுலோகங்களும் இடையிடையே சொல்லி, தமது கீர்த்தனங்களைக் கம்பீரமான குரலிலே பாடினார். "**பாய்ந்தானே ஹனுமான்**" கீர்த்தனம் பாடியபோது, துளஸி பாய்ந்து வந்து கவிராயருக்கு ஒரு இரத்தின ஹாரம் அளித்தார்.

**"இந்த ராவணனைக் கண்டு சும்மாப் போனால்
என்ன ஹனுமான் நானே!"**

என்ற அடாணா கீர்த்தனம் பாடும்போது வீரர்கள் மீசையை முறுக்கிக் கொண்டனர்.

**"அடிக்காமலும், கைகளை
ஒடிக்காமலும், நெஞ்சிலே
இடிக்காமலும், என்கோபம்
முடிக்காமலும் போவேனா!"**

என்று பாடியபோது, சடசட வென்று கரகோஷம்.

**"ராமசாமி தூதன் நானடா-அடடா ராவணா!"**

என்ற மோஹன கீர்த்தனத்தில்,

**"காலமும் பலமும் தெரியாமல் குதிக்கிறாய்!"**

என்னும் போது ஏகக் கரகோஷம்! தமிழ் தெரிந்த மராட்டியர்களும் ரசித்து "வாஹ்வா!" என்றனர். அனுமான் இலங்கையை அழித்துவிட்டு, இராமரிடம் வந்து சூடாமணி தருகிற மட்டும் கதை நடந்தது. துளஸி "கவிராயரே, நீர் ஐந்து நாள் திருவையாற்றிலிருந்து பிறகு வாரும்" என்றார். மறுநாள் கடும் போர். தஞ்சை சேனை "பாய்ந்தானே ஹனுமான்!" என்று முணு முணுத்துக் கொண்டே போர்க்களத்தில் இடிபோல் விழுந்து மின்னல் போலத் தாவி எதிரியைப் புடைத்து விரட்டியடித்தது.

ஐந்து நாள் கழித்து, கவிராயர் தஞ்சைக்கு வந்தார். எங்கும் வெற்றி முழக்கம். துளஸி மன்னன் இராம பட்டாபிஷேக கட்டத்தைப் பாடச் சொல்லி, ஏராளமான சன்மானம் கொடுத்து, "ஸ்ரீ ராமநாமமும் ஹனுமத் பிரபாவமும் தங்கள் வாக்கிலே இருந்து போரை வென்றது" என்று உபசாரஞ் சொல்லிப் பல்லக்கில் புலவரை அனுப்பினார். இதைக் கேட்ட ஆனந்த ரங்கம் பிள்ளை, கவிராயரைப் புதுச்சேரிக்கு வரவழைத்து இராம பட்டாபிஷேகம் வரையில் அவரிடம் கேட்டுச் சன்மானமும் வழங்கினார்.

* * *

தியாகய்யரும் தீக்ஷிதரும் சியாமா சாஸ்திரியும் பிறப்பதற்கு வெகுகாலத்திற்கு முன்பே இப்படித் தமிழிசை திக்விஜயம் செய்தது. அருணாசலக்கவிராயர் 67 வயது வரையில் கீர்த்தனப் பிரசாரம் செய்து கொண்டிருந்து ஒரு நாள் "**அந்த ராம ஸௌந்தர்யம்**" என்னும் கேதார கௌள கீர்த்தனம் பாடிக் கொண்டிருக்கும்போது அனாயாசமாகச் சிவனடி சேர்ந்தார். அவர் இராம கதை செய்த போதிலும், விபூதி ருத்ராக்ஷங்களுடன் தூய சைவராகவே வாழ்ந்து வந்தார். "பாய்ந்தானே ஹனுமா"னை இக்காலத்துத் தமிழ் மக்களும் மறவாமல், தேச முன்னேற்றத் தொண்டில் பாய்வார்களாக!










உள் அறையில் கமலா மாத்திரம் இருக்கிறாள். துணைக்கு யாருமே இல்லை. "ஐயோ, கீழேயா விழுந்து விட்டாய்? அழாதே கண்ணே! வைத்தியர் இதோ வந்து விடுவார்; மருந்து போடுவார்......" என்பதாக அநுதாபத்தைக் காட்டிக்கொண்டிருக்கிறாள்.

சமாசாரம் என்ன என்று தெரிய வில்லை. உள்ளே போய்க் கொஞ்சம் எட்டிப் பார்த்தேன். குழந்தை யொன்றும் அங்கே இல்லை.

சுவரில் சாய்த்து வைத்திருந்த *நோக்கால்ச்சாவி தரையில் விழுந்து கிடந்தது. அப்படி விழுந்த மரக் குச்சியின் மேல்தான் அந்த அநுதாபத்தை யெல்லாம் கொட்டிக்கொண்டிருந்தாள் கமலா.

* * *

கமலாவின் உள்ளத்தில் ஒரு குழந்தை குடி கொண்டிருக்கிறது. ஆம்; ஒவ்வொரு பெண்ணின் உள்ளத்திலுமே ஒரு குழந்தை குடி கொண்டிருக்கிறது.

ஆனால் உள்ளத்திலிருக்கும் குழந்தையை என்ன செய்ய முடியும்? எப்படி அருமை பாராட்ட முடியும்? வெளியே கொண்டு வந்தால்தானே "கண்ணே மணியே" என்றெல்லாம் கொஞ்சலாம்? எப்படியோ ஒரு அற்புதமான வகையில் உள்ளத்திலிருந்த குழந்தை வெளியே வந்து பெண்ணின் கையிலிருந்த நோக்கால்ச் சாவியில் தங்கி விடுகிறது. ஆவாகனம் ஆகி விடுகிறது என்று சொல்லுவோமே.

அப்படி ஆவாகனம் ஆன பிறகு கமலாவுக்கு நோக்கால்ச் சாவி நோக்கால்ச் சாவி அல்ல: பச்சைக் குழந்தைதான். உச்சி முதல் உள்ளங்கால் வரை அந்தக் குழந்தையின் எல்லா அங்கங்களும் அழகை வீசிக்கொண்டிருக்கின்றன. வெறி கொண்ட முறையில் அவ்வளவு அழகையும் கமலா அநுபவிக்கிறாள்.

குழந்தையை அநுபவிக்கிற தத்துவம் இது. இனி:

குழந்தையை மாத்திரமா அநுபவிக்கிறார்கள் பெண்கள்? குழந்தை படுத்திருக்கும் பிரம்புத் தொட்டிலைக் கண்டே ரொம்ப ரொம்ப அநுபவிக்கிறார்கள்!

தொட்டிலுக்கு என்னென்ன அழகை யெல்லாமோ பெண்ணிதயம் ஏற்றிவிடும். குழந்தையைத் தன் மேல் வைத்துக்கொண்டு அந்தத் தொட்டில் அநுபவிக்கிறதாகவும் தோன்றும்.

---

* நுகத்தடியில் கோக்கும் கடை முளையைத் திருநெல்வேலியில் 'நோக்கால்ச் சாவி' என்பார்கள்.

பெண் இதயத்திலே குழந்தையை எப்படி அசைக்க முடியாதபடி பிரதிஷ்டை செய்திருக்கிறதோ அப்படியே ஒரு காதலனையும் பிரதிஷ்டை செய்திருக்கிறது. பெண்ணாய் உருவெடுக்கும்போதே — கருவில் உருவெடுக்கும்போதே இதயத்தில் பிரதிஷ்டையாய் விடுகிறான் காதலன்.

அந்த இதயக் காதலனைத்தான் வெளியே காண்கிறாள் பருவம் அடைந்தவுடன் அந்தப் பெண்.

பருவம் அடைகிறதென்றால் உடல் மாத்திரமா? அல்ல. உயிர்த் தத்துவம், உணர்ச்சி தத்துவம் எல்லாம் ஒன்று சேர்ந்து பக்குவம் அடைகின்றன. உடல் உயிர் உணர்ச்சி ஆகிய மூன்றும், என்றுமில்லாத வேகத்தோடு தொழிற்பட ஆரம்பிக்கின்றன. அது காரணமாக உள்ளத்தில் ஒரு வெறி பிடிக்கிறது; காதலனோடு ஒட்டிப் பொருள்களில் எல்லாம் அழகு தெரிகிறது. ஏன், ஏதோ உணர்ச்சிகூட அந்தப் பொருள்களுக்குள் உண்டாகி யிருப்பதாகத் தோன்றுகிறது.

* * *

கண்ணனைப் பற்றிப் பல பெண்கள் பேசிக்கொண்டே யிருக்கிறார்கள். அவனுடைய கண்தான் என்ன! மார்புதான் என்ன! என்று அவன் அழகை வருணிக்க முடியாமல் திணறுகிறார்கள். இப்படித் திணறுகிற காரியத்தைப் பருவம் அடைந்த பெண் ஒருத்தி பார்க்கிறாள். அவளுக்கு முதலில் ஒன்றும் விளங்க வில்லை. என்ன வெல்லாமோ சொல்லுகிறார்களே, எல்லாம் பொய் போலிருக்கிறதே என்று தனக்குள்ளே சொல்லிக் கொள்கிறாள்.

* * *

ஒரு நாள் கண்ணன் தெரு வழியாக நடந்து போனான். சாளரத்தின் வழியாக அவனை அந்தப் பெண் பார்த்து விட்டாள். நடந்து சென்ற அவனது உருவம் பார்வையிலிருந்து அகன்று மறைந்து போய் விட்டது. ஆனால் அவளுடைய மனசைவிட்டு மட்டும் அகலவில்லை.

உள்ளத்தில் இதுவரை இருந்து வந்த காதலன் வெளியே வந்து விட்டான். கண்ணைக் கவருகிறான். உள்ளத்தை என்ன பாடெல்லாமோ படுத்துகிறான்.

பிறகு ஒருநாள் யமுனை ஆற்றுக்குத் தண்ணீர் எடுக்கப் போகிறாள். புதர்களுக்குள்ளே நடந்து

போகிறாள். மரத்தைப் பார்த்தால் கண்ணன் உருவம் தெரிகிறது. செடியைப் பார்த்தாலும் கண்ணன் உருவந்தான்.

ஆற்றங்கரையைக் கிட்டும்போது சங்கின் நாதம் காதில் விழுகிறது. கண்ணனது சங்க நாதத்தைப் பற்றியும் தோழிகள் அபாரமாய்ப் புகழ்ந்து பேசியிருக்கிறார்கள்.

தண்ணீர்க் கரைக்கே போகிறாள். குடத்தை மெள்ளக் கீழே வைக்கிறாள். ஒரு செடி மறைவில் நின்று கொள்ளுகிறாள்.

* * *

இருபுறமும் தெள்ளத் தெளிந்த தண்ணீர் சுழித்து ஓடுகிறது. இடையிலுள்ள பாறையில் உட்கார்ந்து கொண்டு சங்கை வாயில் வைத்து வாசித்துக் கொண்டிருக்கிறான் கண்ணன். புதிது புதிதான நாதமும் இசையும் தாளமும் சங்கிலிருந்து பிறந்து வருகின்றன; பெண்ணின் காதுக்குள்ளே புகுந்து உள்ளத்தையும் உடலையுமே சங்கீத மயமாய்ச் செய்கின்றன. என்றுமறியாத இன்ப வெறியில் மூழ்கி விடுகிறாள்.

இந்த வெறியின் ஊடாகவே பார்க்கிறாள் கண்ணனது மேனியை. அப்படியே விழுங்கி விடுவது போலப் பார்த்துக் கொண்டிருக்கிறாள். எவ்வளவு நேரம் பார்த்துக் கொண்டிருந்தாளோ தெரியாது.

கடைசியாக நீலமேக வண்ணனான கண்ணன், வெண்சங்கைப் பவளவாயிலிருந்து எடுத்துக் கையில் வைத்துக் கொள்ளுகிறான்.



மேனியும் முகமும் நன்றாய்த் தெரிகின்றன. செவ்விதழ்களின் கனிவையும் நிறத்தையும் இப்படி அப்படி என்று சொல்ல முடியவில்லை. தன்னை உண்டே விடும் அந்த இதழ்கள் என்று எண்ணுகிறாள்.

என்ன சொல்லுகிறாள், கேட்போம்:

கருப்பூரம் நாறுமோ
கமலப்பூ நாறுமோ
திருப்பவளச் செவ்வாய்தான்
தித்தித்தி ருக்குமோ
மருப்(பு)ஒசித்த மாதவன்தன்
வாயமுதும் வாசமும்

யானையினுடைய தந்தத்தை முறித்த வீரனும் கண்ணன். அவனது இதழ்களின் சுவையும் வாசமும் எப்படியிருக்கும் என்று தெரிய வேண்டுமாம் அவளுக்கு. அந்த இதழ்களில் கற்பூரத்தின் மணம் வருமோ, தாமரையின் வாசம் வீசுமோ என்றெல்லாம் தோன்றுகிறது. தோழியைப் பார்த்துக் கேட்கலாம் என்றால், தோழி யாரும் அங்கே இல்லை.

பாடலை இப்போது பார்க்கலாம்.

கருப்பூரம் நாறுமோ
கமலப்பூ நாறுமோ
திருப்பவளச் செவ்வாய்தான்
தித்தித்(து) இருக்குமோ!
மருப்(பு)ஒசித்த மாதவன்தன்
வாய்அமுதும் வாசமும்—
விருப்புற்றுக் கேட்கின்றேன்
சொல்ஆழி வெண்சங்கே!!!

[மருப்பு: யானைத் தந்தம்; ஒசித்த: முறித்த; ஆழி: கடல்.]

"எங்கேயோ கடலில் பிறந்தாய் நீ: உன்னைத்தான் கேட்கிறேன், சொல்!" — காதல் வெறி எப்படியிருக்க வேண்டும், சங்கைப் பார்த்து இப்படிக் கேட்க!

பிறகு, அந்தச் சங்கின் அதிர்ஷ்டந்தான் என்ன என்பது நினைவுக்கு வருகிறது. சொல்லுகிறாள்:

உன்னோ(டு), உடனே
ஒருகடலில் வாழ்வாரை
இன்னார் இனையார்என்(று)
எண்ணுவார் இல்லைகாண்!
மன்னாகி நின்ற
மதுசூதன் வாயமுதம்
பன்னாளும் உண்கின்ற
பாஞ்ச சன்னியமே!

[மன்னாகி நின்ற மதுசூதன்: உலகங்கள் எல்லாவற்றிற்கும் தலைவனான விஷ்ணு மூர்த்தி; பாஞ்ச சன்னியம்: விஷ்ணு ஏந்திய சங்கின் பெயர்.]





கடலிலே சங்குகள் லக்ஷம் லக்ஷமாகத் தான் இருக்கின்றன. இருந்தென்ன செய்ய? அவைகளை யார் கவனிக்கிறார்கள்? அவைகளைப் பற்றிப் பிரஸ்தாபம் உண்டா? கிடையாது.

மதுசூதனனுடைய வாயமுதம் உண்ணும் பாக்கியம் உனக்குத்தானே கிட்டியிருக்கிறது! பெண்கள் பேசுகிறதெல்லாம் உன்னைப் பற்றித்தானே!



ஆனாலும் உன்னிடம் ஒரு காரியம் சொல்ல வேண்டும். பொறாமை என்று ஒன்றிருக்கத் தானே செய்கிறது? ஆகையால், ஜாக்கிரதை!

உண்பது சொல்லில்
  உலகளந்தான் வாயமுதம்!
கண்படை கொள்ளல்
  கடல்வண்ணன் கைத்தலத்தே!
பெண்படையார் உன்மேல்
  பெரும்பூசல் சாற்றுகின்றார்,
பண்பல செய்கின்ற
  பாஞ்ச சன்னியமே!

[உண்பது சொல்லில்: உன் ஆகாரம் இன்னது என்று சொல்லப் புகுந்தால்; உலகளந்தான் வாயமுதம்: திருமாலின் இதழ்களில் ஊறும் அமுதம்; கண்படை கொள்ளல்: சௌகரியமாகப் படுத்து உறங்குகிறதோ; பெண் படையார்: பல பல பெண்கள்; பெரும் பூசல் சாற்றுகின்றார்: ரொம்ப ரொம்பப் புகார் சொல்லுகிறார்கள்; பண்பல செய்கின்ற: எத்தனையோ விதமாகப் பாடுகின்ற.]

கோக்கலச் சாவியிலிருந்து பிறந்து வந்த குழந்தையைப் பார்த்துக் கமலா ஆனந்த வெறி கொள்ளுகிறாள். கண்ணன் கையிலுள்ள சங்கைப் பார்த்துப் பொறாமை வெறி கொள்ளுகிறாள் கோபிகா ஸ்திரீ!

உயிர்களுக்குள் எல்லாம் உயிராய் இருந்து ஆட்டுகிற பரம்பொருளைப் பார்த்துப் பக்தி வெறி கொள்ளுகிறார் பக்தர். அந்த பக்தரின் பக்தி வெறியும் கோபிகையின் வெறி போலத்தான். அதற்குக் கொஞ்சமும் குறைவில்லை!

• • •

ஆண்டாள் பாசுரங்கள் மூன்றும் எப்படி நம்மைக் கண்ணனுடைய பக்தியில் ஈடுபடுத்துகின்றன! நம்மை ஆனந்தான் செய்கிறாள் ஆண்டாள்!

# SAND PAPERS TO SUIT YOUR REQUIREMENTS




உங்கள் கைத்தொழிலுக்குத் தேவையாயுள்ள பட்டசீலைகள் ஷீட், டிஸ்க், ரோல்ஸ் மற்றும் எவ்விதமான வகையிலும், அளவிலும் சப்ளை செய்ய 'அஜாக்ஸ் பிராடக்ட்ஸ்' இருக்கின்றது. இந் நாட்டில் நவீன இயந்திர சாதனங்களுடன் கூடிய தொழிற்சாலை இது ஒன்றே.

சிறந்த மேற்பார்வையில் உன்னதமாகத் தயாரிக்கப்படுகின்றன




## நல்ல உயர் ரக பட்டசீலைகள் தயாரிப்பவர்கள்

அஜாக்ஸ் பிராடக்ட்ஸ் லிமிடெட், 109, அரமனைக்காரத் தெரு, ஜீ. டி. மதராஸ்.

பிராஞ்சு: 5, வெரைட்டி ஹால் ரோடு, கோயமுத்தூர்.





# தமிழ்க் கடவுள்

எங்கும் நிறைந்து அனந்த மயமாயுள்ள கடவுளின் தத்துவத்தைக் கண்டு அனுபவிக்கும் ஞானிகள் இன்றும் இருக்கிறார்கள். பண்டைப் பழைய காலத்திலோ அதிகமாகவே இருந்தார்கள்.

அந்த ஞானிகளுக்குப் பார்த்த பொருள் எல்லாம் பரம் பொருளாகவே தென்பட்டது. அந்தப் பொருள்களை இதயம் கலந்தவாறு அனுபவித்தார்கள்.

சூரியோதயம் அவர்களுக்கு ஞானோதயத்தை நினைவூட்டியது. சூரியோதயத்தைக் கூவி வரவேற்கும் சேவலும் ஞானோதயத்தோடு கலந்து கொண்டது.

தோகையை விரித்தாடும் நீல மயிலானது நீல வானத்தோடு ஒன்றி எங்கும் நிறைந்ததாயுள்ள பூரண தத்துவத்தை நினைவூட்டியது.

வேலிலும் வீரச் செயல்களிலும் அவனது செயலையே கண்டார்கள்.

எல்லாவற்றையும் விட, பச்சைக் குழந்தையிடமே இறைவனது அருளானது நிறைந்து நம்மை ஆளுகிறது என்று சொன்னார்கள்.

எனவே, எங்கும் நிறைந்து எல்லாமாய் விளக்கும் இறைவனைக் குழந்தை வடிவில் முருகன் என்ற பெயர் கொடுத்து வழி பட்டார்கள்.

அவர்களுடைய பக்தியானது சில சமயம் பாட்டாகப் பெருகிற்று.

ராகம் : நீலாம்புரி

நீலமயில் வாகனனே
நெட்டிலைவே லாயுதனே
கோலம்நிறை கோழிக்
கொடிபடைத்த சேவகனே!

செஞ்சதங்கை கொஞ்ச
சிறுகிண் கிணியாடக்
கஞ்சமலர்த் தாளுமையாள்
கண்களிக்க வந்தானே!

சமரபுரித் தேவே
தணிகைமலைத் தேனே
அமரும் பழனிமலைக்(கு)
ஆன மணிவிளக்கே!

தமிழ் நாடெங்கும் குன்றுகள் சிதறிக் கிடக்கின்றன. அந்தக் குன்றுகளில் முருகன் குதித்து எதிர்கொள்ளுகிறான். குன்றுகளின் சிகரங்களைத் திருக்கோவில்கள் அலங்கரிக்கின்றன. குன்றே வழிபாட்டுக்குரிய வஸ்துவாகிறது: பக்தர்கள் அடி வாரத்தைத் தொட்டுத் தொட்டுக் கும்பிடுகிறார்கள். காணிக்கைப் பொருள்களைக் காவடியில் முன்னும் பின்னுமாக வைத்துக் கொண்டு குன்றை நோக்கிச் செல்லுகிறார்கள்; ஆடிக் கொண்டும் பாடிக்கொண்டும் செல்லுகிறார்கள். எதற்காக? நீல மயில் வாகனனைக் காணத்தான்; நெட்டிலை வேலாயுதனைக் கண்ணாரக் கண்டு களிப்பதற்குத்தான். அவ்வாறு தோளில் காவடியுடன் ஆடிக் கொண்டும் பாடிக்கொண்டும் போகும் பக்தர்களின் மனக் காட்சியில் குன்றின் மேலுள்ள கோவிலும் கோவில் மண்டபமும் தோன்றுகின்றன. அவை மட்டுமா? நீலமயில் வாகனத்தில் வந்திறங்கும் வேலன், செஞ் சதங்கை கொஞ்ச, சிறு கிண்கிணி யாட நடந்து வருவதும், அவனைப் பார்வதி தேவி தாவி வரவேற்பதும் கூட அவர்கள் மனக் காட்சியில் தோன்றுகின்றன. அத்தகைய பக்தர்களின் பரவச மடைந்த உள்ளக் காட்சியைத்தான் நமது அட்டைப் படம் சித்திரிக்கின்றது.



# கண்ணன் பிழைத்தான்

சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார்





பாலுவுக்கு வயது ஏழுதான் இருக்கும். தாயார் இறந்து போன பையன். தகப்பனார் மாதவராயருக்கு அவன்மேல் மிக்க பிரியம். சொன்னபடி கேட்கிறதில்லை என்று மாதவராயருடைய இரண்டாம் மனைவியின் நிரந்தரப் புகார்.

தீபாவளிக்கு முதல் நாள், மத்தியானம் வீட்டை விட்டுப் போனவன் மாலை வெகு நேரமாகியும் பையன் காணவில்லை. தப்பட்டப் பின்னே எங்கேயோ அலைந்துவிட்டு வருவான் என்று வெகு நேரம் வரையில் எதிர்பார்த்தார்கள். இரவு எட்டு மணி யாகியும் வாராதபடியால் கவலைப்பட ஆரம்பித்தார்கள். தெரிந்தவர்களுடைய வீட்டுக்கெல்லாம் சொல்லியனுப்பினார்கள். ஒரு தகவலும் தெரியவில்லை. ஊரில் இங்கு மங்கும் ஆட்களை விட்டுத் தேட வைத்தார்கள். எங்கும் சிக்கவில்லை. அன்றிரவு 10 மணிக்குப் போலீஸ் ஸ்டேஷனிலும் சொல்லி எழுதி வைக்கப் போனார்கள்.

"பையன் உடம்பின்மேல் ஏதாவது நகை இருந்ததா?" என்று இன்ஸ்பெக்டர் சாத்தப்பப் பிள்ளை கேட்டார்.

"ஒன்றுமில்லை. காலில் வெள்ளிக் காப்பு தவிர வேறு ஒன்றுமில்லை" என்றார் மாதவராயர்.

"காப்பு என்ன பெறும்?" என்று இன்ஸ்பெக்டர் கேட்டதற்கு, "போலவில்லை; மூன்று ரூபாய்கூட இருக்காது" என்றார் மாதவராயர்.

★

பக்கத்து வீடுகளிலெல்லாம் பட்டாசு சுடும் ஓசை. மாதவராயருக்கு இது பொறுக்க முடியவில்லை. இரவு முழுதும் யாராவது துப்புக் கொண்டு வரமாட்டார்களா என்று ஆசைப்பட்டுக்கொண்டு தூக்கமில்லாமல் கழித்தார்.

"இந்த வேலைக்காரனை வேண்டாம் என்று நான் எவ்வளவு சொல்லியும் நீங்கள் பிடிவாதம் செய்தீர்கள். அவன் தான் ஏதோ செய்து விட்டிருப்பான். அவனைக் கண்டால் எனக்குப் பிடிக்கவில்லை" என்றாள் சீதம்மா.

"அவன்பேரில் ஏன் வீணாகச் சந்தேகப்படுகிறாய்? அவன் ராத்திரி எட்டு மணி வரையில் வீட்டில்தானே இருந்தான்? குழந்தையை நாலு மணி முதல் காணவில்லையே?" என்றார் மாதவராயர். கவலையும் குழப்பமுமாக இருக்கிறவர்கள் இவ்வாறு அர்த்தமில்லாத மணிக் கணக்குகளை எடுத்துச் சொல்வது வழக்கம்.

"தினம் மத்தியானம் மூன்று மணிக்கு வருகிறவன் இன்று ஐந்து மணிக்குத்தான் வீட்டுக்கு வந்தான். 'ஏனடா இவ்வளவு நேரம்?' என்று கேட்டதற்கு, 'நோன்புக்குச் சாமான் வாங்கக் கடைக்குப் போயிருந்தேன்' என்று ஏதோ சாக்குச் சொன்னான். எனக்கு அவன் பேரில் சந்தேகமாகத் தான் இருக்கிறது" என்றாள் சீதம்மா.

"மாதவராயரே! அவனைப் பற்றிச் சந்தேகிக்க வேண்டியதுதான். வீட்டிலுள்ள வேலைக்காரர்களின் உளவு இல்லாமல் ஏதும் நடக்கிறதில்லை" என்றார் பக்கத்து வீட்டுக் கோபாலய்யர்.

"கண்ணன் இருப்பது மேலைத்தம் பள்ளத் தெரு. போலீஸில் சொல்லிப் பார்க்கலாம்" என்றார் வக்கீல் குமாஸ்தா வாசுதேவய்யர்.

இரவு முழுதும் இம்மாதிரி கழிந்தது. காலையில் ஊரெல்லாம் தீபாவளி



ஓசை. படார் படார் என்று வெடிகள் வெடிப்பதும் பக்கத்து வீடுகளில் தண்ணீர் எடுத்து ஊற்றும் பாத்திரங்களின் ஓசையுமாக இருந்தது. மாதவராயர் விம்மி விம்மி அழுது, இறந்து போன முதல் மனைவியை பற்றிப் பேச ஆரம்பித்தார்.

"ஐயோ! குழந்தை எந்தப் பாதகன் கையில் அகப்பட்டு என்ன கஷ்டப்படுகிறதோ?" என்று துயரம் தாங்காமல் கத்தினார்.

"வந்து விடுவாள், அழாதீர்கள்! பகவான் காப்பாற்றுவார்" என்று சேதம்மா சமாதானம் சொன்னாள்.

★

போலீஸாருக்கு ஏதோ துப்புக் கிடைத்ததாக மத்தியானம் 12 மணிக்குச் சமாசாரம் தெரிந்தது. "ஸ்டேஷனுக்குப் போய் விசாரித்து வாருங்கள்" என்றாள் சேதம்மா.

மாதவராயருடைய வீட்டில் தோட்ட வேலை செய்து வந்த கண்ணனைப் போலீஸார் லாக்கப்பில் வைத்திருந்தார்கள். அவன் வீட்டைச் சோதனை போட்டு ஏதோ சில துணிகளும் ஒரு பட்டாசுக் கட்டும் கைப்பற்றியிருந்தார்கள். துணிகளில் எதுவும் பானுவினுடையது இல்லை என்று மாதவராயர் பார்த்துச் சொல்லிவிட்டார்.

பட்டாசுக் கட்டைப் பற்றி மட்டும் பானுவின் தாய் மாமன் ராமச்சந்திர ராயர் திட்டமாக அது பானுவுக்குத் தாம் முதல் நாள் வாங்கித் தந்த கட்டு என்றார். இது போலீஸ் இன்ஸ்பெக்டருக்கு பெரு திருப்தி தந்தது.

இன்னும் சில விஷயங்கள் போலீஸார் செய்த விசாரணையில் பிறகு வெளியாயின. மாலை நாலு மணிக்குக் கடை வீதியில் பானுவும் கண்ணனும் சேர்ந்தாற்போல் கிழக்குப் பக்கமாகப் போய்க்கொண்டிருந்ததைச் சிலர் பார்த்ததாகச் சாட்சியம் கிடைத்தது. பானுவின் கையில் அப்போது ஒரு பட்டாசுக் கட்டு இருந்ததைப் பார்த்ததாகவும் சிலர் சொன்னார்கள். கண்ணன் குழந்தைக்கு வாழைப் பழம் தந்ததைப் பார்த்ததாகப் பெண் பள்ளிக்கூடத்துச் சேவகக் கிழவன் வேலுப் பிள்ளை சாட்சியம் சொன்னான்.

கண்ணனைக் கேட்டதில் தனக்கு ஒன்றும் தெரியாது, பானுவுடன் கடைத் தெருவில் அன்றைய தினம் போனதே கிடையாது என்றான். வேலுப் பிள்ளையின் சாட்சியத்தைப் பற்றிக் கேட்டதற்கு, "அது பொய்; அவன் ஏனோ அப்படிச் சொல்லுகிறான்!" என்று சாதித்தானே யொழிய, ஒரு சமாதானமும் சொல்லவில்லை. ரொம்ப சந்தேகத்துக்கு இடம் என்று போலீஸ் இன்ஸ்பெக்டர் அபிப்பிராயப்பட்டார்.

★

"நாலு உதை கொடுத்தால் எல்லாம் வெளியாகும்" என்றாள் சேதம்மா.

"அது எல்லாம் போலீஸார் சரியாகச் செய்வார்கள்" என்றார் வக்கீல் குமாஸ்தா வாசுதேவய்யர்.

மாதவராயர் ஒன்றும் சொல்லவில்லை.

"ஆண்டவனே!" என்றாள் வேலைக்காரி குஞ்சம்மா, வீட்டைக் கூட்டிப் பெருக்கிக்கொண்டே.

★

"ஐயோ! என் மகனை அநியாயமாகச் சித்திரவதை செய்கிறார்களே! விரலில் ஊசி ஏற்றுகிறார்களாமே!" என்று கூச்சலிட்டாள் மாதவராயருடைய வீட்டு வாசலில் நின்றுகொண்டு ஒரு கிழவி. கூட அவள் சேலையைப் பிடித்துக் கொண்டு ஒரு குழந்தை நின்றுகொண்டிருந்தது.

"அப்படி யெல்லாம் ஒன்றும் செய்ய மாட்டார்கள். சும்மா விசாரிப்பார்கள், அவ்வளவுதான். உண்மையைச் சொல்லி விடுங்கள்" என்றார் வக்கீல் குமாஸ்தா வாசுதேவய்யர்.

"ஐயோ சாமி! ஒரு பாவமும் எனக்குத் தெரியாது. என் மகனைக் கொன்று விடுவார்களே; நீங்கள்தான் காப்பாற்ற வேண்டும். எங்களுக்கு வேறு யாரும் இல்லை. இதோ அவன் குழந்தையின் தலைமேல் கையை வைத்துச் சத்தியம் பண்ணிச் சொல்லுகிறேன்" என்றாள் கிழவி. உரக்க அழவும் ஆரம்பித்தாள்.

"சும்மா கத்தாதே! இல்லாவிட்டால் உன்னையும் லாக்கப்பில் அடைத்து விடுவார்கள், தெரியுமா?" என்றார் வாசுதேவய்யர்.

"ஆண்டவனே!" என்று கிழவி அழுதுகொண்டு போலீஸ் ஸ்டேஷன் பக்கம் போனாள்.

*

மறுநாள் காலை எட்டு மணிக்கு ஊருக்கு வடக்கே ஒரு குட்டையில் பையனுடைய பிரேதம் தண்ணீரில் மிதந்து கொண்டிருந்ததை மாடு மேய்க்கும் பையன்கள் கண்டு போலீஸாருக்குத் தெரியப்படுத்தினார்கள். பிரேதத்தை எடுத்து விசாரணை செய்யப் போலீஸார் மாதவராயரையும் அழைத்துச் சென்றார்கள்.

கழுத்தில் கயிறோ துணியோ சுருக்குப் போட்டு இறுக்கிய அடையாளம் காணப்பட்டது. உடம்பில் வேறு ஒரு காயமும் இல்லை. காலில் காப்புகள் இல்லை; கறுப்பு அடையாளம் மட்டும் நன்றாகக் காணப்பட்டது.

"மூன்று ரூபாய் பெறுமான வளைக்காகப் பச்சைக் குழந்தை மாண்டதே!" என்று கூட்டத்தில் எல்லாரும் துயரப்பட்டார்கள்.

குழந்தை சுருக்கிடப்பட்டு இறந்ததாகவும் வயிற்றில் ஜீரணமாகாத வாழைப்பழம் இருந்ததாகவும் அப்பயச் சோதனையில் ஏற்பட்டது. கண்ணன் மேல் சந்தேகம் பலப்பட்டது. போலீஸார் தீவிரமாக விசாரணை நடத்தினார்கள். புதிய பல சாட்சிகளையும் பிடித்தார்கள்.

*

"பையனுக்கு வாழைப் பழம் வாங்கிக் கொடுத்தாயே, பிறகு அவனை எங்கே விட்டு எங்கே போனாய்? சொல்" என்று போலீஸார் அதட்டியும் திட்டியும் கண்ணனை ஸ்டேஷனில் விசாரித்தார்கள். கண்ணன் மிரண்ட விழி விழித்தானே யொழிய ஒரு வார்த்தையும் சொல்லவில்லை.

"சரி, இவனை இப்படி நல்ல வார்த்தையில் கேட்டால் சொல்லமாட்டான்; கொண்டுபோய்க் கொட்டடியில் அடை, ராத்திரி நான் வந்து விசாரிக்கிறேன்" என்றார் ஹெட்டு சண்முகம்.

ஹெட்டு சண்முகத்தைப் பற்றி ஊரில் பிரசித்தம்.

"சோன்புக்குப் பழம் கடையில் வாங்கினேன். குழந்தை கேட்டதனால் ஒரு பழம் தந்தேன். அவனை வீட்டுக்குப் போகச் சொல்லிவிட்டு நான் அவசரமாகக் கடையில் வெல்லமும் எண்ணெயும் வாங்கிக் கொண்டு நேராக என் வீட்டுக்கு மேலாத்துக்குப் போய் விட்டேன். பிறகு எஜமானர் வீட்டுக்கு வந்தேன். ஏன் நேரமாயிற்று என்று அம்மாளும் கேட்டார்கள். சோன்புக்குச் சாமான் வாங்கக் கடைக்குப் போயிருந்தேன், பொழுது ஆய்விட்டது என்று சொன்னேன். வேண்டுமானால் அம்மாளைக் கேளுங்கள்" என்றான் கண்ணன்.

*

போலீஸ் லாக்கப்பில் கண்ணன் பதினைந்து நாட்கள் இருந்தான். பிறகு குற்றப் பத்திரிகை தாக்கல் செய்யப்பட்டுக் கேஸ் விசாரணையாயிற்று.

மாஜிஸ்திரேட்டு ஊருக்குப் புதியவர். இளைஞர். பத்துச் சாட்சிகள் வாக்குமூலம் கொடுத்தார்கள். குறுக்கு விசாரணையில் தடுமாறாமல் நன்றாய்ச் சொன்னார்கள். கண்ணன் குழந்தையுடன் மாலை நாலு மணி வரையில் கடைத் தெருவில் இருந்ததும், பையனுக்கு அவன் வாழைப் பழம் கொடுத்ததும், பிறகு பையன் காணாமற் போனதும் எல்லாம் ருசுவாயிற்று. வேலுப் பிள்ளையின் சாட்சியம் மிகவும் திட்டமாக இருந்தது. பாலுவுக்குத் தாம் தந்த பட்டாசுக்கட்டே கண்ணன் வீட்டில் சோதனையில் கைப்பற்றின பட்டாசுக் கட்டு என்று ராமச்சந்திர ராயரும் உறுதியாகச் சத்தியம் செய்தார். இதன்மேல் வக்கீல்கள் எல்லாரும் கண்ணனை செஷன் கோர்ட்டுக்கு அனுப்பித்தான் ஆகவேண்டும் என்று எதிர்பார்த்தார்கள்.

மாஜிஸ்திரேட்டு நாலு நாள் கழித்துச் சொன்ன தீர்ப்பில், "சாட்சியம் போதாது; தாழ்ந்த ஜாதியைச் சேர்ந்த ஒருவனுடைய உயிரைப் பற்றி உதாசீனமாகச் சாட்சிகள் உண்மையுடன் பொய்ச் சரக்குக் கொஞ்சம் சேர்த்துச் சொல்லி யிருக்கிறார்கள்; குழந்தை சாகடிக்கப்பட்டதே என்கிற ஆத்திரத்தினால் இவ்வாறு வாக்கு மூலம் கொடுத்திருக்கிறார்கள்" என்று எழுதிக் கண்ணனை விடுதலை செய்து விட்டார்.

இந்தத் தீர்ப்பைக் கொடுத்ததும் ஊரில் பெரிய மனிதர்கள் எல்லாருக்கும் மாஜிஸ்திரேட்டு பேரில் அதிருப்தி. ஜாதித் துவேஷத்தினால் இவ்வாறு செய்ததாகத் தாவித்துப் பேசினார்கள். கண்ணனுக்கு வக்கீலாக நின்று வாதாடிய வீரராகவய்யங்காரைக் கூட எல்லாரும் இகழ்ச்சியாகப் பேசினார்கள்.

*

செஷன் கோர்ட்டில் மறு விசாரணைக்காக விண்ணப்பம் போடப்பட்டது. "இறந்த குழந்தை திரும்பி வரப் போகிறதா, வேண்டாம்" என்று மாதவராயர் சொன்னார். ஆனால் நண்பர்கள் வற்புறுத்தியதன் பேரில் மனுப் போட்டார். அதன் மேல் கோர்ட்டில் வாதம் நடந்தது.

முடிவில், மாஜிஸ்திரேட்டு கேஸைத் தள்ளியது பிசகு, செஷனுக்கு அனுப்பியிருக்க வேண்டியது என்று ஜட்ஜு உத்தரவிட்டார். ஊரார் எல்லாருக்கும் சந்தோஷம். மறுபடியும் போலீஸார் கண்ணனைக் கைது செய்தார்கள்.

*

மூன்று மாதம் கழித்து செஷன் கோர்ட்டில் பூரண விசாரணை நடந்தது. ராமச்சந்திர ராயர் சாட்சிக் கூண்டேறி வாக்குமூலம் கொடுத்தபோது, முதலில் நன்றாகத்தான் சொன்னார். கண்ணன் வீட்டில் கிடைத்த பட்டாசுக் கட்டு பாலுவுக்குத் தாம் கொடுத்த கட்டுத்தான் என்று உறுதியாகச் சொன்னார். பிறகு பல பட்டாசுக் கட்டுகளைக் கலந்து அவருக்குக் காட்டியதும் தடுமாறினார். கோர்ட்டில் வேடிக்கை பார்க்க வந்தவர்களில் சிலர் சிரித்தார்கள். ஜட்ஜு, "ஸைலன்ஸ்" என்று கத்தினதும் சிரிப்பை நிறுத்தினார்கள்.

முடிவில் கேஸில் பலம் இல்லை என்று ஜட்ஜு சொன்னதை ஜூரிமார்களும் ஒப்புக்கொண்டு குற்றம் ருசுவாகவில்லை என்று அபிப்பிராயம் சொன்னார்கள். "நீங்கள் சொன்னது சரி; ஒரு மனிதன் பேரில் குற்றம் என்னளவும் சந்தேகமின்றி ஏற்பட்டாலொழியத் தண்டிக்கலாகாது. ஊகம்

"மட்டும் போதாது" என்று கண்ணனை செஷன் ஜட்ஜு விடுதலை செய்து விட்டார்.



மூன்று வருஷம் கழிந்தது. ஊரில் விஷயம் வெகுவாக மறந்து போய் விட்டது. மாதவராயர் வீட்டிலும் கூடப் பையன் இறந்த துக்கத்தை மறக்கக் காலம் ஏற்பட்டது. சீதம்மாவுக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. "பாலு திரும்பி வந்து விட்டான்" என்று சீதம்மாவின் தாயார் பிரசவ அறையிலிருந்து மாதவராயருக்குச் சொன்னது வீட்டிலுள்ள எல்லாருக்கும் பெரும் சந்தோஷம் உண்டாக்கிற்று.



ஒரு நாள் உள்ளூர்ப் போலீஸாருக்குத் திருச்சி போலீஸ் ரிபோர்ட் ஒன்று வந்தது. அதில் ஒரு பழைய திருட்டுக் கூட்டம் லால்குடி பக்கம் பிடிபட்டதாகவும், அவர்கள் பல இடங்களில் நகைகளைத் திருடுவதற்காகக் குழந்தைகளை ஏமாற்றிய ஆசாமிகள் என்றும், அந்தக் கூட்டத்தில் ஒருத்தி மூன்று வருஷத்துக்கு முன் இருட்டின இரவில் தீபாவளியன்று கடைத் தெருவில் தனியாகப் போய்க் கொண்டிருந்த ஒரு பையனைக் கூட்டிப் போய்த் தன் சகாக்களிடம் விட, அவனை அவர்கள் கொன்று கால் காப்புக்களை எடுத்துக்கொண்டு தண்ணீரில் போட்டு விட்டதாக வாக்குமூலம் கொடுத்தாள் என்றும் கண்டிருந்தது.

இந்த விஷயம் மாதவ ராயருக்குப் போலீஸார் சொன்னதும், "பார்த்தாயா, சீதா! கண்ணன் ஒரு பாவமும் அறியாதவன் என்று நான் சொன்னேனே? இப்போது அப்படியே நிச்சயமாச்சு. பாவம், அவனை ரொம்ப இம்சை செய்தோம்" என்றார்.

"ஆமாம்! அவன் குழந்தைக்கு வாழைப்பழம் கொடுத்தானே, அதற்கு என்ன சொல்லுகிறீர்கள்?" என்றாள் சீதம்மா.

"தன் வீட்டுக் கென்று அவன் வாங்கின வாழைப் பழத்தில் குழந்தைக்கு ஒன்று கொடுத்தான். அதில் என்ன தப்பு? பிறகு அவன் பாட்டுக்கு அவன் தன்னுடைய வீட்டுக்குப் போய் விட்டான். குழந்தை இந்தப் பாதகர்கள் கையில் அகப்பட்டுக் கொண்டது. ஏமாற்றி அழைத்துக் கொண்டு போய்க் கொன்று விட்டார்கள்" என்றார் மாதவராயர்.

"குழந்தையின் பட்டாசுக் கட்டு அவன் வீட்டில் அகப்பட்டதே, அது எப்படி?" என்றாள் சீதம்மா.

"அதே பட்டாசுக் கட்டுதான் என்பது என்ன நிச்சயம்? ராமச்சந்திரன் விஷயம் தெரியுமே!" என்றார் மாதவ ராயர்.

பக்கத்தில் இருந்த ராமச்சந்திர ராயரும் பேச்சில் கலந்து கொண்டார்.

"கோர்ட்டுக்குப் போனால் சந்தேக மாகவா பேசுகிறது? சொல்லுவதை அழுத்தமாகத்தான் சொல்ல வேண்டும். ஒரு பட்டாசுக் கட்டைப் போல்தான் இன்னொரு கட்டு என்று அதிகாரியே பார்த்துக் கொள்வான். நான் ஏன் வழவழா என்று சொல்ல வேண்டும்?" என்றார்.

"அப்படியல்ல, ராமச்சந்திர ராயரே! விஷயம் வேறே. அந்த ரகசியம் யாருக்கும் தெரியாது" என்றார் வீரராகவய்யங்கார். இவரும் மாதவராயர் வீட்டுக்கு அன்று வந்திருந்தார்.

"என்ன ரகசியம்? சொல்லும் பார்க்கலாம்" என்றார் ராமச்சந்திர ராயர்.

"உண்மையில் கண்ணன் வீட்டில் கைப்பற்றிய பட்டாசுக் கட்டு பாலு வைத்திருந்ததுதான். கண்ணன் பாலுவுக்குப் பழம் கொடுத்து மெள்ள ஏமாற்றிப் பட்டாசுக்கட்டை வாங்கிக்கொண்டு போனது உண்மை. என்னிடம் ஜெயிலில் அவன் இதை ஒப்புக்கொண்டான். 'ஏண்டா இப்படிச் செய்தாய்? ஒரு பட்டாசுக் கட்டுக்காகக் குழந்தையைக் கொல்வாயா?' என்று நான் கேட்டதற்கு, 'குழந்தையை நான் கொல்லவில்லை. பட்டாசுக் கட்டு வேண்டும் என்று என் குழந்தை கேட்டது. அதற்காக அந்தப் பட்டாசுக் கட்டை நான் வாங்கிக் கொண்டு, குழந்தையை வீட்டுக்குப் போ என்று கையில் பழம் கொடுத்து அனுப்பிவிட்டு, நான் நாடக மேளத்துக்கு அவசரமாகப் போய் விட்டேன்' என்று சொன்னான். அவன் சொன்ன கதையை அப்போது நான் நம்ப வில்லை. ஏமாற்றுகிறான் என்றும் அவனே கொலைக்குக் காரணம் என்றும் எண்ணினேன். 'இதைக் கோர்ட்டில் சொன்னாயானால் கேஸ் பலப்பட்டுப் போகும். கோர்ட்டில் இந்த மாதிரி சொல்லாதே. பட்டாசுக் கட்டைப் பற்றிக் கேட்டால் ஒன்றும் தெரியாது என்று போலீஸாரிடம் சொன்னதைப் போலவே கோர்ட்டிலும் சொல்லு' என்று நான்தான் அவனுக்குச் சொல்லிக் கொடுத்தேன்."

இவ்வாறு வீரராகவய்யங்கார் சொன்னதும் சீதம்மா, "அட, பாவிகளா! இப்படித்தான் வக்கீல்கள் செய்கிறதா? உண்மையை மறைப்பது ஒரு தொழிலா?" என்றாள்.

"இந்த விஷயங்கள் உனக்கு என்ன தெரியும்? வக்கீலிடம் குற்றவாளிகள் என்னவெல்லாமோ சொல்லுவார்கள்; அதை யெல்லாம் கோர்ட்டில் சொல்லி விட்டால் பிறகு வக்கீலுக்கும் கட்சிக்காரனுக்கும் பேச்சே கிடையாது" என்றார் ராமச்சந்திர ராயர்.

"நல்ல காரியம் செய்தீர், வீரராகவய்யங்காரவாள்!" என்றார் மாதவ ராயர். "பட்டாசுக் கட்டைப் பற்றிக் கண்ணன் ஒப்புக் கொண்டிருந்தால் அவனுக்குத் தூக்குத் தண்டனையே கிடைத்திருக்கும். அநியாயமாக நிரபராதி உயிர் இழந்திருப்பான்" என்றார்.

"பார்த்தீர்களா? என்னை எல்லாரும் வேடிக்கை செய்தீர்களே? அந்தப் பட்டாசுக் கட்டுதான் என்று நான் சொன்னது உண்மையாச்சா, இல்லையா?" என்றார் ராமச்சந்திர ராயர்.



"பெரிய வீட்டிலே வேலைக்கு இருப்பதே அபாயமுங்கோ" என்றாள் குஞ்சம்மா.

"என்ன அபாயம்? வேலை பொல்லாததாக இருந்தால் எல்லாம் அபாயம் தான்" என்றாள் சீதம்மா.

"காலுக்கும் கைக்கும் இந்தக் காலத்தில் ஏதும் போடலாகாது அம்மா" என்றாள் வேலைக்காரி. அவ்வாறு சொல்லி விட்டுச் சீதம்மாவின் குழந்தையை எடுத்து முத்தம் கொடுத்தாள். பிறகு, "நான் போயிறேனம்மா! வீட்டைப் பார்த்துக் கொள்ளுங்கள்" என்று சீதம்மாவிடம் சொல்லி விட்டுக் குஞ்சம்மா தன் வீட்டுக்குப் போனாள்.



குஞ்சம்மா சொன்னது ரொம்ப உண்மை. பெரிய வீடுகளில் ஏழைகள் வேலைக்கு இருப்பது ரொம்ப அபாயம். சிறு காரணங்களுக்கெல்லாம் வேலைக் காரர்கள் மீது சந்தேகப் படுவார்கள். அபாயம் என்று வேலைக்குப் போகா திருந்தால் ஜீவனத்துக்கு வழியில்லை. ஆண்டவன்தான் காப்பாற்ற வேண்டும்!

# புவனி ஓங்கி வாழுமே!

நாமக்கல் ராமலிங்கம் பிள்ளை

வெட்டி வெட்டிக் கொல்லுவார்
வீரம் என்று சொல்லுவார்
சுட்டுச் சுட்டுத் தள்ளுவார்
சூரம் என்று துள்ளுவார்

திட்டித் திட்டி ஏசுவார்
தீரம் என்று பேசுவார்
கட்டு வார்த்தை தீரும்முன்
காலம் வந்து சேருமோ!

வீரம் மூட்டி விட்டவர்
வீட்டில் நின்று விட்டவர்;
தீரம் சொல்லித் தந்தவர்
தெருவில் பேச வந்தவர்;

சூரம் கூறிச் சென்றவர்
சொன்ன தோடு நின்றவர்;
நேர்ந்த போரில் சிக்கினோர்
தீர பாரதி மக்களே!

குண்டு போட யுத்தமா?
கொல்லக் கூட வித்தையா?
மண்ட லத்தில் போரையே
மறந்து போக நேருமா?

வெற்றி வெற்றி என்பரேல்
வெற்றி பெற்ற தென்னவோ?
சுற்று முற்றும் பாரெலாம்
சூறை யான ஊர்களும்

பெற்ற தாய்கள் ஓலமும்
பேய் புகுந்த கோலமும்
இற்றொ ழிந்த சுற்றமும்
இவைக ளேதும் வெற்றிகாண்!

துன்பம் வெற்றி பெற்றது
துயரம் வெற்றி பெற்றது;
வம்பு தும்பு வாதுசூது
வறுமை வெற்றி பெற்றது;

அன்பின் வெற்றி அல்லவே
அறிவின் வெற்றி அல்லவே;
இன்பம் என்று நாமறிந்த
எதுவும் வெற்றி பெற்றதா?

யுத்தம் என்ற மோகமும்
உலகை விட்டுப் போகுமா?
பித்தன் என்று நம்மையே
பேசு வார்கள் பேசின்னன்!

புத்தர் வந்து போனதும்
புனிதன் காந்தி வந்ததும்
பொய்த்துப் போக ஒண்ணுமோ?
புவனி ஓங்கி வாழுமே!







# எல்லோராச் சிற்பங்கள்



எல்லோராவிலுள்ள எத்தனையோ மனமோகனச் சிற்பங்களில் ரதியும் மன்மதனும் தலை சிறந்து — விளங்குகின்றன —

•

நம்மைப்போலவே பரவசத்துடன் இந்தத் துவாரபாலகரும் சிற்பங்களைப் பார்த்து ரஸிக்கிறார் — போலும்! —





# எல்லோராச்





சிவபெருமான் காலனைக் காலால் உதைத்த காட்சியைச் சித்தரித்த — எல்லோராச் சிற்பிகள், —





கோபச் சிரிப்பால் திருபுரத்தை எரித்த சிவபிரானையும் நம் கண் முன்னால் கொண்டு வருகிறார்கள்.

# சிற்பங்கள்

சுமார் பதினைந்து அடிக்கு மேல் உயரமுள்ள கபால பைரவரின் பயங்கரத் தோற்றத்தைக் காட்டி நம்மைப் பயப்படுத்திய பிறகு,






பார்வதி பரமசிவனின் திருக் கல்யாணக் கோலத்தையும் காட்டி நம்மை ஆனந்தப்படுத்துகிறார்கள்.





# எல்லோராச் சிற்பங்கள்

எல்லோரா கைலாஸ நாதர் கோவிலில், ஹிரண்ய சம்ஹாரத்தின் ரௌத்ராகாரக் காட்சி.

•

துவார பாலகருக்குக் காவலாகத் துவார பாலகியும் நிற்பதைக் காணலாம்.








# VINCENT FOR TOPPING QUALITY & TIP TOP SERVICE

திவ்வியமான பழ ரஸ பானங்களுக்கும்
முதல் தரமான கேக் பிஸ்கோத்துகளுக்கும்

# வின்ஸெண்ட்

**VINCENT & CO LTD.** TRICHINOPOLY.

BRANCHES
COIMBATORE–MADURA–TINNEVELLY–SALEM
KARAIKUDI–KUMBAKONAM–TUTICORIN

# அன்று கண்ட ராஜாஜி



டாக்டர் ராஜன்

★

"சேலம் வரையில் போய் வரலாமா?" என்றார் எனது நண்பர் பசுபதி அய்யர். அவருடைய ஒப்பற்ற உதவியால் நான் சீமை சென்று மூன்று வருடம் உயர்தர வைத்தியப் படிப்புப் படித்துக் கீர்த்தியுடன் முடித்து வந்து ஸ்ரீரங்கத்தில் இன்னது செய்வதென்று தெரியாமல் மனோ ராஜ்யம் செய்துகொண்டிருந்த காலம். 1911 ஆம் ஏப்ரல் மாதம் ஒருநாள் இரவு வண்டியில் நானும் பசுபதி அய்யருமாகப் புறப்பட்டு விடியற் காலையில் சேலம் ஜங்ஷன் போய்ச் சேர்ந்தோம். பிரபல வக்கீலும், முனிஸிபல் சேர்மனுமான சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் அவர்களுடைய மனைவியார் நோயுற்றிருப்பதாகத் தெரிந்து அவர்களை என்னைக் கொண்டு பரிசீலனை செய்து அபிப்பிராயம் தெரிந்து கொள்வதற்காக என்னை எனது நண்பர் கூட்டிச் சென்றார்.

சேலம் ஜங்ஷனில் குதிரை வண்டி அமர்த்திக் கொண்டு மூன்று மைல் தூரத்திலுள்ள சேலம் டவுனுக்குச் சென்றோம். பாதி வழியில் இராஜகோபாலாச்சாரியார் ஒரு சிறிய மோட்டார் காரைத் தாமே ஓட்டிக் கொண்டு எங்களை அழைத்துப் போவதற்காக வந்து கொண்டிருந்தார். நாங்களும் வண்டியை விட்டுக் கீழே இறங்கி, அவருடைய காரில் ஏறிக்கொண்டு வீடு சேர்ந்தோம்.

இராஜகோபாலாச்சாரியார் தோற்றமே தனிச் சிறப்பு வாய்ந்தது. சிறிய உருவம்; பெரிய கீர்த்தி. காலைக் குளிருக்காகக் கம்பளிச் சட்டை தரித்திருந்தார். தலையில் சிறிய குடுமியாக இருந்தாலும், அடர்ந்து நீண்டு முடியைப் பெற்றிருந்தது. கோட்டின் மேல் சலவை செய்த உத்தரீயம். பருத்த கண்ணாடிகள் பொருந்திய கூர்மையான கண்கள். சதைப் பிடிப்பற்ற மெல்லிய உடல். கச்சம் கட்டிய வேஷ்டி. வைதிக பிராமணர் தோற்றம். பிடிவாதமும், விடா முயற்சியும் கொண்ட முகம். இவைகளை உடையவர்தான் அன்று நான் கண்ட பெயர் பெற்ற கிரிமினல் லாயர் இராஜகோபாலாச்சாரியார்.

வீட்டிற்குச் சென்றோம். காப்பி பலகாரம் சாப்பிட்டோம்.

சிறு பிள்ளைகள் சிலர் அரையில் கட்டிய சிறிய துண்டுடன் அங்கு மிங்கும் ஓடிக் கொண்டிருந்தார்கள். நெற்றியில் நீர்க்கமான வடகலைத் திருமண் சாற்றிய பெரியவர்— இராஜகோபாலாச்சாரியாரின் தகப்பனார்—அந்தப் பையன்களைக் கூப்பிட்டுக்கொண்டிருந்தார். அறிமுகப் படுத்துதல், குசலப் பிரச்னைகள் முடிந்ததும், நோயாளியைப் பார்க்கச் சென்றேன். பரிசோதனை செய்தேன். நான் கேட்ட கேள்விகளுக்கு உரிய பதிலை இராஜகோபாலாச்சாரியார் கொடுத்து வந்தார்.

நான் எட்டு வருஷங்களுக்கு மேலாக வைத்திய சாஸ்திரம் படித்து, வைத்தியத்தில் பெரிய மேதாவி என்னும் நற்பெயர் சென்னையிலும், லண்டனிலும் பெற்றுத் திரும்பிய போதிலும், அன்றையதினம் சேலத்தில் முதன் முதலாக ஒரு பெரிய இடத்தில் எனது சாமர்த்தியத்தை நிலை நிறுத்தச் சந்தர்ப்பம் கிடைத்ததென்றே எண்ணினேன். எனது முழு கவனத்தையும் செலுத்தி நோயின் கூற்றைக் கவனித்து எனது அபிப்பிராயத்தை வெளியிட முயன்றேன். பரீக்ஷை காலங்களில் பெரிய பெரிய டாக்டர்கள் கேள்வி கேட்ட போதும், எனது படிப்பின் தன்மையையும் தரத்தையும் பரிசீலிக்க வேண்டிய சோதனை காலத்திலும் கூட நான் அஞ்சியதில்லை. ஆனால் அன்று இராஜகோபாலாச்சாரியார் என்னைச் செய்த குறுக்கு விசாரணையில் நான் இணைறிய உணர்ச்சியை இன்றுவரை மறக்கவில்லை. முப்பத்து மூன்று வருஷங்கள் கழித்து இன்று யோசனை செய்து பார்த்தாலும் அன்று அவருடைய மனப்பான்மை எவ்விதம் இருந்திருக்கலாமென்று ஊகிக்க முடிகிறது.

மனைவியின் நோயினால் அவர் மனம் எவ்வளவு கவலையுற்றிருந்தது என்பதை அவர் கேட்ட நுட்பமான கேள்விகளிலிருந்து ஒருவாறு அறிய முடிந்தது. நோயின் போக்கை எவ்வளவு கூர்மையாகக் கவனித்து வந்திருந்தால் அத்தகைய விவரம் தெரிந்த கேள்விகள் கேட்டிருக்க முடியும்? பொறுமையே வடிவாக அமர்ந்திருந்த அம்மையார் ஒரு வார்த்தையும் சொன்னதாக எனக்கு ஞாபகமில்லை. புதுப் படிப்புப் படித்து வந்த முறுக்கில் எனக்குத் தெரிந்த மட்டில் நோயின் விவரத்தை எடுத்துரைத்தேன். ஆனால் எனது முடிவை இராஜகோபாலாச்சாரியார் ஏற்றுக் கொண்டதாக எனக்குத் தோன்றவில்லை. இந்தச் சந்திப்பில் முடிவான எண்ணம் ஒன்று என் மனதில் உண்டாயிற்று. அது, மனைவியாரிடம் இவர் கொண்டுள்ள அன்பும் பற்றும் அளவு கடந்தது என்பது தான். ஏறக்குறைய இளம் பிராயத்திலேயே மனைவியை இழந்தும், மறு மணம் புரிய மனம் இடங் கொடாமல், ஏக பத்தினி விரதம் கைக் கொண்டு, வாழ்வை நடத்தும் இவருடைய பண்பின் மேன்மையை அறியாதாரில்லை.

இவர் கேட்ட கேள்விகளிலிருந்து இன்னுமொரு விஷயமும் தெரிய வந்தது. தீராத ஒரு நோய் வாய்ப்பட்டு வருந்துபவர் இவர் என்பதும், பல டாக்டர்கள் கையில் சிக்கிக் கொண்டு அவர்கள் சொல்லியவற்றை யெல்லாம் நம்பி, ஓயாது மருந்துகள் உண்டு, பயன் படாமல் போய், ஆங்கில வைத்திய முறையிலும், அதைக் கையாள்பவரிடத்தும் நம்பிக்கைக் குறைவு ஏற்பட்டிருக்கலாமெனவும் நினைத்தேன். 'ஆஸ்த்மா' எனப்படும் காச நோய், வைத்தியர்களுக்கு வரும்படியையும், வருவாயையும் இடை விடாது கொடுத்து வருவது. சில சமயங்களில் வைத்தியர்களையும் மீறித் தானே குணமடைந்தும் விடுவதுண்டு. அதிர்ஷ்டமுள்ள ஒருவன் அந்த யோக காலத்தில் வைத்தியம்

செய்ய முயன்றால் விபரீத குணமான சேர்ந்தி அவனுக்குக் கிடைத்து விடுகிறது. இம் முறையில் வைத்தியமும் ஒரு செப்பிடு வித்தைதான். இருந்த போதிலும் நோய்வாய்ப் பட்ட உலகம் வைத்தியர்களையே நம்பி வருகிறது. உண்மை வைத்தியம், நோய் வராமல் காப்பாற்றுவதுதான். இயற்கை முறையில் வாழ்வை நடத்த முடியாமல், பொருளீட்டும் துறையில், இயற்கை அவசியங்களைக் காலா காலங்களில் கவனியாமல் நோயைத் தருவித்துக் கொள்வது வியாதிகளுக்கு அடிப்படையான காரணம். நாக்கு ருசியைப் பசியைத் தீர்த்துக் கொள்வதற்கு உதவியாக நடாது, வயிறு புடைக்க அறுசுவை யுண்டு, பல நோய்களை நாம் வரவேற்கிறோம். சுக வாழ்விற்கு இன்றியமையாத பலவித ஆசார அனுஷ்டானங்களைப் புறக்கணித்து அல்லல் உறுகின்றோம். நோயுற்றவர்கள் மருந்துண்ண வேண்டியது மருத்துவ முறையென மக்கள் கருதுகிறார்கள். மருந்தில்லாமல் பழக்க வழக்கங்களைத் திருத்தி அமைப்பதால் நோய் தீர்ந்து விடுமென்றும், மருந்து தேவையில்லையென்றும் வைத்தியர் சொல்வாரானால், வெகு சீக்கிரத்தில் அவர் பிழைப்பு நடைபெறாமல் போய் விடும். ஆகையால் நோயின் மூலம் வைத்தியர்களும் வைத்தியர்களின் மூலமாக நோயும் உலகத்தில் சிரஞ்சீவிகளாக வாழ்ந்து வருவது இயற்கையாகி விட்டது. இதற்கெல்லாம் சுமார் பதினேழு வருஷங்கள் ஓயாது மருந்துண்டு, வைத்தியர்களை நம்பி அவர்கள் கொடுமைகளுக்கு உட்பட்டுக் கடைசியாக நோயின் காரணத்தை அகஸ்மாத்தாகக் கண்டு, நிவர்த்தியைச் சுலபமாகக் கண்டுகொண்ட இராஜகோபாலாச்சாரியாரின் காச நோய் - தக்க உதாரணமாகும். காச நோயானது உண்மையில் உடலைச் சேர்ந்த நோய் தானா அல்லது பல காரணங்களால் ஏற்பட்ட குடல் சிக்கலா என்பது யோசிக்க வேண்டிய விஷயம். தோலும் எலும்புமாக வைரம் பாய்ந்த சரீரத்தில் நோய் அணுக இடமில்லை. சம்பாத்யத்தில் குறைவா, சந்தோஷத்தில் குறைவா, சீரிய கொள்கையை அடிப்படையாகக் கொண்டு நடத்தும் புனித வாழ்விலேதான் மாக, மறு உண்டா? ஒன்றுமேயில்லை. இராஜகோபாலாச்சாரியார் நோய் இல்லாமல் நோய் வாய்ப் பட்டுத் தற்சமயம் 'சுகமடைந்திருக்கும் கதை இன்னும் அநேகருக்குப் பொருந்தும்.

சேலம் சென்ற அன்றைய தினம் சாயங்காலம் சேலம் "லிடாரி ஸொஸைடி" என்று பெயர் பெற்ற பொழுதுபோக்கு மிடத்திற்குப் போனேன். அங்கு வந்திருந்தவர்களில் பெரும்பாலோர் வக்கீல்கள். இராஜகோபாலாச்சாரியாரிடம் அவர்களுக்கு உள்ள நன்மதிப்பு எனக்கு நன்கு புலப்பட்டது. இராஜகோபாலாச்சாரியார் வக்கீல் தொழிலில் ஈடுபட்டு அதிக வருஷம் ஆகவில்லை. எனினும் சேலம் வக்கீல்களுள் திறமை பெற்றவரென்றும், தொழில் முறையில் மிகவும் ஒழுங்காக நடந்து கொள்பவரென்றும் புகழ் அடைந்திருந்தார். வைதிகச் சின்னங்களான ஸ்நானம், பஞ்சகச்சம், திருமண் அணிதல் முதலியவைகளைத் தவறாது பின்பற்றி வந்திருந்தும், அவ்வூர்க் குருட்டு வைதிகர்களுக்கு இவர் பேரில் கடுங் கோபம். அந்தக் காலத்திலேயே முற்போக்கான ஆசார சீர்திருத்தக்காரர் என்கிற பெயரையும் பெற்று விட்டார். அந்த நாளில் அரசியல் துறையில் காங்கிரஸின் போக்கானது அதிகாரிகளைத் தோத்திரம் செய்து, இராஜ விசுவாசப் பிரமாணத்தை முன்னணியாகக் கொண்டு வருடமொரு முறை கூடி விண்ணப்பங்கள் தயாரிக்கும் முறையிலே இருந்தது. பேச்சு வன்மை, அதிலும் ஆங்கிலத்தில் பேச்சு வன்மை அடைந்தவர்களே தேசபக்தர்களாகக் கருதப்பட்ட காலம். அன்னிய நாட்டு உடையைத் தரித்துக் கொண்டு சுதேசிப் பொருள்களை எல்லாரும் வாங்கி ஆதரிக்க வேண்டுமென்று பிரசங்கம் நடக்கும் காலம். தேசத்தொண்டு என்று சொல்லக்கூடிய முறையில் அவரவர்கள் பரோபகார சிந்தையுடன் செய்துவரும் ஆத்ம சாதகமான சில வேலைகளைத் தவிர வேறு ஒன்றும் நடக்கவில்லை. அடிமைநாடு என்ற உணர்ச்சி, விடுதலை அடைய முயற்சி, அதற்கான முறை இவைகளைப் பற்றிப் பேசுபவர்களே கிடையாது. அப்படி ஒருசிலர் பேசினாலும் பிரசங்க மேடைத் திறன் என்று சொல்வதைத் தவிர வேறில்லை. நான் அன்று சேலத்தில் கண்ட பெரியார்களின் ஐக்யத்தையும், உணர்ச்சியையும் கண்டு சேலம் தேசிய உணர்ச்சி கொண்ட ஒரு பட்டணம் என்று முடிவு செய்தேன். நான் வசித்து வந்த ஸ்ரீரங்கத்தைக் காட்டிலும், பொது விஷயங்களில் அதிக முன்னேற்றம் சேலத்தில் அன்றிருந்ததைக் கண்டேன். அதில் இராஜகோபாலாச்சாரியாரின் பங்கு எவ்வளவு என்று நிர்ணயிப்பது கஷ்டம். எனினும் அது சொல்பமாக இருந்திருக்க முடியாது.



தியாகம், தயை, பொறுமை, புத்தி, தீவிர தேசபக்தி, ஆட்சித் திறன், வாக்கு வன்மை, தாய்மொழித் தொடர்பு இவை யெல்லாம் பொருந்தி, தன்னடக்கமே அணிகலனாக விளங்கும் இன்றைய ராஜாஜியின் அறிகுறிகள் அன்று அவரிடம் என் கண்ணிற்குப் புலப்படவில்லை. எனினும் அவர்பால் நட்புக் கொள்ளும் ஆவலும், அவருடைய நன்மதிப்பைப் பெற வேண்டுமென்னும் ஊக்கமும் அன்றைக்கே தோன்றி விட்டது.




# 6,000 யூனிட்களுக்குமேல் விற்பனையாகி விட்டன

T. V. S. கியாஸ் பிளாண்டுகள் மூன்று வருஷ காலமாக விற்பனையாகி வருகின்றன. இந்தியாவில் இன்று 6,000-க்கு மேல் உபயோகத்திலிருக்கின்றன. இதன் சிறந்த உழைப்பையும், சிக்கனச் செலவையும் கண்டு, கார், டிரக் சொந்தக்காரர்கள் பூரண திருப்தி அடைந்திருக்கின்றனர். தமது வெகு நாளைய அனுபவத்தால்தான் T. V. S. இஞ்சினியர்கள் தலை சிறந்த கியாஸ் பிளாண்டுகளைத் தயாரிப்பது சாத்தியமாகிறது.

## பிரதான அம்சங்கள்

- **ஸ்டார்டிங் அதி சுலபம்:**—சீக்கிரத்தில் ஸ்டார்ட் ஆகிவிடும்.
- **மும்முறை வடிகட்டும் வசதி:**—சுத்தமான கியாஸ் கிடைக்கிறது.
- **இலவச சர்வீஸ்:**—இந்தியாவின் பல பாகங்களிலுள்ள எங்கள் டிஸ்ட்ரிப்யூட்டர்கள் இலவச சர்வீஸ் எப்பொழுதும் அளிப்பார்கள்.
- **குறைந்த கனம்:**—சம கனமாக இருப்பதால் டயர் தேய்வு குறைவு. பிரேக்கிற்கு பந்தோபஸ்து அதிகம்.
- **நேர்த்தியான தோற்றம்:**—சிறந்த அமைப்பு. அழகான தோற்றம்.

இந்தப் பிளாண்டின் திறமையைப் பிரத்யக்ஷமாக காண்பிக்கும்படி டிஸ்ட்ரிப்யூட்டர்களிடம் கேளுங்கள்.

வாங்குமுன் மாதிரிகளைப்  கியாஸ் பிளாண்ட் பாருங்கள்



(கார், லாரிகளுக்கு ஏற்றவை)

**T. V. சுந்தரம் அய்யங்கார் & சன்ஸ், லிமிடெட்**

மதுரை :: சென்னை

TVSK-5 TM.



தக் கடலுள் அமுதன்ன தேவகி
கோதைக் குழலா ளசோதைக்குப் போத்தந்த
பேதைக்குழவி பிடித்துச் சுவைத் துண்ணும்
பாதக் கமலங்கள் காணீரே! பவளவாயீர் வந்து காணீரே!

— பெரியாழ்வார்

போட்டோ : ஆர். என். [illegible]



கல்கி தீபாவளி மலர்
1944

## மாயம் வல்ல

'வரும்இவள் மாயம்வல் ல
வஞ்சனை அரக்கி; நெஞ்சம்

தேர்விலன்; தேறும்தன் மை,
சீரியோய்! செயகிற்றன் றுள்;

## சீதை வந்தாள்!

உருவிது மெய்யதன் றும்;
ஊன்நுகர் வாழ்க்கையா னை
வெருவினேன்! எய்திடா மல்
விலக்குதி, வீர!' என் றாள்.

— கம்பர்



# புடவைக் கண்



மனைவி:—ஆஹா! அந்த அம்மாள் கட்டிக் கொண்டிருக்கும் புடவை என்ன கலர், என்ன உடல், என்ன பார்டர்! என்ன அழகு!

புருஷன்:—யார்? எந்த அம்மாள்? இந்த இருட்டில் நீ நிற்கிறதுகூட என் கண்ணுக்குத் தெரியவில்லை; நீ யார் புடவையையோ வர்ணிக்க ஆரம்பித்து விட்டாயே!



"என் குடை இங்கே இருந்ததோ, ஸார்?"



"கொஞ்சம் இருங்கள்; இதோ வந்து விட்டேன்."



"உங்கள் குடை இது தானே?" "ஆமாம்."



"கையெழுத்துப் போட்டு விட்டு எடுத்துக் கொள்ளும்."



"ரொம்ப சந்தோஷம்; போய் வருகிறேன்." "அப்படியே."



ம. ந. தி. மகாலிங்கம் பிள்ளை நிச்சயம் திரும்பி வருவார்!

**தீபாவளி!** தீப உத்ஸவநாள்! இவ்விசேஷ தினத்திற் கிறுதி உங்கள் வீட்டை அலங்கரிக்கும் பல்லாயிரக் கணக்கான சிறிய தீபங்களும், பட்டாசு மத்தாப்புகளின் ஒளியும், குழந்தைகளின் சந்தோஷ சிரிப்பு விளையாட்டும், பிரிந்தவர் கூடுதலின் ஆனந்தமுமே. இச்சந்தோஷ சமயத்திற் கேற்றாற்போல, இப்பண்டிகை காலில் மிக முக்கியமானது, ஒவ்வொருவருக்கும், ஆனந்தமளிக்கும் ஒரு கோப்பை டீ அளிப்பதே. உங்கள் உற்றார் உறவினரை ஒவ்வொரு விசேஷ சமயத்திற்கும் உகந்த உயர்ந்த பானமான டீ அளித்து உபசரியுங்கள்.

# இந்தியன் டீ

**விசேஷ சமயத்திற் குகந்த உயர்ந்த பானம்**



இந்தியன் டீ மார்க்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டாரால் வெளியிடப்பட்டது IK 151 A




# உங்கள் மனதிற்குகந்தது

டி லக்ஸ் டெனார் சிகரெட்டின் நறுமணத்தை நீங்கள் மிகவும் விரும்புவீர்கள். உத்தரவாதமுள்ள 100% பொருக்கின வர்ஜீனியா புகையிலேதான் டெனார் செய்ய உபயோகிக்கப்படுகிறது. இதுவே எல்லோரும் விரும்பி ரஸிப்பதற்கும், தொண்டைக்கு கெடுதல் செய்யாதிருப்பதற்கும் காரணம். மனோரம்மியமான இந்த சிகரெட்டை வாங்கி உபயோகியுங்கள்

**டி லக்ஸ் டெனார் சிகரெட்ஸ்**
**ஜேம்ஸ் கார்ல்டன் லிட்.,லண்டன்**

**tenor** is truly a de Luxe Cigarette

JAMES CARLTON LTD., LONDON, EASTERN LICENCEES. POST BOX NO. 9029, CALCUTTA

# பத்மினியின் தியாகம்

கிரிஜா



பி. ஏ. என்ற இரண்டு புனிதமான சொற்களைச் சம்பாதித்துக் கொள்வதற்காகப் படாத பாடுபட்டுப் பரீட்சை கொடுத்துவிட்டு, கிராமத்தை நோக்கிச் சென்ற என் மனத்தில் அளப்பரிய ஆனந்தம் நிரம்பி யிருந்தது. காரணம் என் பால்யத் தோழி பத்மினியைக் காணப்போகும் ஆவலே.

பத்மினி என் அத்தை மகள். அவள் இவ்வுலகில் பிறந்த அன்றே, அவளை என் வாழ்க்கைத் துணைவியாக்குவது என்று முடிவு செய்யப்பட்டது.

பத்மினி வளர வளர அவள் அன்பும், அழகும் வளர்பிறைபோல் வளர்ந்தது; எனக்கு வயது ஏற ஏற இவ்வுலகமே பத்மினி மயமாகத் தோன்றியது.

"உன் அம்மாஞ்சி தானேடி? என்ன வெட்கம்?" என்ற என் அத்தையின் குரல் கேட்டு திரும்பினேன். தலை கவிழ்ந்த வண்ணம் வாயிற்படியருகில் பத்மினி நின்று கொண்டிருந்தாள். "சௌக்கியமா அம்மாஞ்சி?" என்ற வார்த்தைகள் அவள் வாயினின்றும் மெள்ள வெளி வந்தன.

பத்மினியைப் பார்த்த நான் ஆச்சரியத்தால் திகைத்தேன். அவள் எவ்வளவு அழகாக வளர்ந்து விட்டாள்! இடையில் கொஞ்ச காட்களே நான் அவளைப் பிரிந்திருந்தேன். அதற்குள் இவ்வளவு அற்புதமான வளர்ச்சியை நான் எதிர்பார்க்கவில்லை. லஜ்ஜையால் ஒருவருடன் ஒருவர் பேசவே தயங்கினோம்; ஆனால், அந்த மாலைக்குள்ளேயே எங்கள் தெய்வீக அன்பிற்கு முன் நிற்க மாட்டாமல் லஜ்ஜை, லஜ்ஜைப் பட்டுக்கொண்டு ஓடிவிட்டது.

அச்சமயம், உபகாரச் சம்பளம் பெற்று வந்த என் தந்தை தபால் இலாகாவில் உத்தியோகம் வகித்தவர். 'போஸ்டு மாஸ்டர்' மகன் என்ற மதிப்பால் எனக்கும் வெகு சீக்கிரமே அந்த இலாகாவில் உத்தியோகம் கிடைத்தது.

என் உத்தியோகத்தை ஒப்புக் கொள்ளும் நிமித்தம் புறப்பட்ட நான், பத்மினியின் பிரிவை எவ்விதம் சகிப்பது என்று கலங்கினேன். ஆனால், பொறுமையும் நிதானமும் கொண்ட பத்மினி, தன் கலக்கத்தை வெளிக் காட்டவில்லை.

என் மனத்தை அறிந்தவர்போல் என் தந்தை, "அடுத்த வருஷம் இந்த நாளில் நீ பத்மினியுடன் குடித்தனம் நடத்தலாம். அதுவரை பொறுத்துக் கொள்" என்றார்.

அச்சமயம் என் அத்தை, "இல்லை, அண்ணா! இவர்கள் விவாகத்தைக் கொஞ்சம் ஒத்திப் போட்டுத்தான் செய்யணும்; இல்லாவிட்டால் இவர்கள் அன்பு கசந்து விடும்!" என்றாள். உடனே 'கொல்'லென்று எல்லோரும் சிரித்தனர்.

"அத்தை! ஒருகாலும் எங்கள் அன்பு கசந்து போகாது; நீ வேண்டுமானால் பார்!" என்றேன் நான்.

*

பங்களூர் தந்திப் பரீக்ஷை, வேலைப் பரீக்ஷை இவைகளில் வெற்றி பெற்று, அதிகாரிகளின் நன் மதிப்பையும் பெற்றேன். என் படிப்பின் உதவியால் தபால் இலாகாவின் சட்டப்புத்தகங்களையெல்லாம் நன்கு ஆராய்ந்து அனுபவத்தால் மறைந்திருந்த சட்டங்களையெல்லாம் புதுப்பித்தேன். என் அறிவு நுட்பத்தைக் கண்ட மேலதிகாரி என்னிடம் அளவற்ற அன்பு கொண்டார். அதன் காரணமாக, சீக்கிரமே சிறிய ஊர்களில் 'சப்-போஸ்ட் மாஸ்டர்' உத்தியோகமும் கொடுத்தார். ஆனால், அவருக்குப் பின் வந்த அதிகாரிக்கு என் சட்ட நுட்பம் அதிகப் பிரசங்கித் தனமாகப் பட்டது. அதை அவர் என்னிடம் நேரிலும் சொன்னார். அந்த கர்வம் பிடித்த அதிகாரிக்கு என் மேல் கோபமும், வெறுப்பும் ஏற்பட்டது. என் இளமை முறுக்கில் அவர் கோபம் எனக்கு ஒரு பொருட்டாகத் தோன்றவில்லை. நான் அப்போது பொதியமலைச் சாரலில் உள்ள ஒரு சின்ன ஊரில் 'சப்-போஸ்ட் மாஸ்ட'ராக இருந்தேன்.

அம்மலையின் அழகும், ஜில்லென்ற குளிர்ந்த காற்றும் என் மனதில் எல்லையற்ற ஆனந்தத்தைக் கொடுத்தது. "இப்போது பத்மினியும் நம் அருகில் இருந்தால்?" என்ற எண்ணம் அடிக்கடி என் மனதில் தோன்றும். அதற்கனுசரணையாக ஒருநாள் என் தந்தையிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. தமக்கு உடம்பு தள்ளாமையாயிருப்பதால், சீக்கிரமே என் விவாகத்தை நடத்திப் பார்க்க விரும்புவதாயும், முகூர்த்தம் வைத்தவுடன் எழுதுவதாயும், உடனே ஒரு மாத லீவுக்கு எழுதி விடும்படியும் அவர் தம் கடிதத்தில் எழுதி யிருந்தார்.

அன்று என் மனதில் குதூகலம் பொங்கிக் கொண்டிருந்தது. "இன்னும் சில தினங்களில் பத்மினியைப் பார்க்கப் போகிறோம். முதலில் அவளிடம் இந்த மலையில் புலி, காடிகள் இருப்பதாகப் பயமுறுத்த வேண்டும்! அப்புறம்தான் அவளுக்கு உண்மையைச் சொல்ல வேண்டும்" என்றெல்லாம் எண்ணிக் கொண்டு மகிழ்ச்சியுடன் வேலையைப் பார்க்கத் தொடங்கினேன்.

"கட்டு கட கட, கட்டு கட கட்டு கட, கட்டு கட்டு" என்ற சத்தம்

கேட்டு கோட்டையும், பென்சிலையும் எடுத்துக் கொண்டு தந்தியை வாங்கத் தொடங்கினேன். அந்தத் தந்தி பாரையில் முதலில் என் விலாசம் வரவே, அப்பாதான் முகூர்த்தம் வைத்துத் தந்தி கொடுத்திருப்பார் என்ற எண்ணத்தால் என் மனத்தில் ஆனந்தம் பொங்கிற்று. அடுத்த கிஷணம் விஷயத்தை எழுதிய என் கரம் நடுங்கிற்று. உடம்பு முற்றும் குப்பென்று வியர்த்தது! 'அப்பாவுக்கு உடம்பு அதிகம்! உடனே புறப்படு' என்பதே அத் தந்தியில் வந்த விஷயம். அத் தந்தியின் சகலுடன், உடனே எனக்கு லீவு கொடுக்கும்படி என் மேலதிகாரிக்குத் தந்தி கொடுத்தேன். என் தந்திக்குப் பதிலையும், பதிலானையும் எதிர்பார்த்துக் கொண்டே இயந்திரம் போல் வேலைகளைச் செய்து கொண்டிருந்தேன். மறு நாள் மாலைவரை என் மேலதிகாரியிடமிருந்து எவ்விதத் தகவலும் வரவில்லை! என் தலை சுழன்றது. விஷயம் ஒருவாறு விளங்கிற்று. என் மேல் கோபம் கொண்டிருந்த மேலதிகாரி வேண்டுமென்றே லீவு கொடுக்கத் தாமதம் செய்கிறார். இரவு ஒன்பது மணிக்கெல்லாம் கடைசிக் காரும் கிளம்பி விடும்; அதன் பிறகு மறுநாள் இரவு வரை அந்த மலையிலிருந்து கிளம்ப எவ்வித ஏதுவும் கிடையாது. அதுவும் குறுக்குப் பாதை வழியாக இரண்டு மைல் நடந்து சென்றால்தான் அந்தக் காரைப் பிடிக்கலாம்.

நிசப்தத்தைக் கிழித்துக் கொண்டு மணியும் எட்டு முறை அடித்து ஓய்ந்தது. அப்போது என் மனத்தில் அசாதாரணமான துணிச்சல் ஏற்பட்டது. 'புறப்பட்டு விட்டேன்' என்று அம்மாவுக்கும், என் வேலையை ராஜினாமாச் செய்து மேலதிகாரிக்கும் தந்திகளைக் கொடுத்தேன். ஆபீஸ் பணத்தையெல்லாம் இரும்புப் பெட்டியில் வைத்துப் பூட்டினேன். என் பணப் பையை மட்டும் எடுத்துக்கொண்டு, ஆபீஸையும் பூட்டி 'ஸீல்' வைத்து விட்டுத் தலை தெறிக்க ஒற்றையடிப் பாதையில் காட்டுக்குள் புகுந்து ஓடி, அப்பொழுதுதான் புறப்படத் தயாராய் நின்ற பஸ்ஸைப் பிடித்து ஏறினேன்.

மறுநாள் மாலை ஆறு மணிக்கு என் கிராமத்தை யடைந்து, தெருவிற்குள் நுழைந்தவன் அப்படியே ஸ்தம்பித்து நின்று விட்டேன்! ஆம்;




## பருமனைக் குறையுங்கள்!






அப்போது என் எதிரில் வந்துகொண்டிருந்தது என் தந்தையின் இறுதி ஊர்வலமே. முட்டிக்கொண்டு கதறினேன். என் தந்தை, "சந்திரா!", "சந்திரா!" என்று சொல்லிக் கொண்டே உயிரை விட்டார் என்ற செய்தி என் இருதயத்தைப் பிளந்தது. என் மேலதிகாரியைத் திட்டினேன். அந்த இருதயமற்ற பாவியின் குடும்பத்திற்குப் பல சாபங்களைக் கொடுத்தேன்.

என் தந்தையின் ஈமக்கடன் முடிவு முன்பே, ஆபீஸை முன் அறிவிப்பு இன்றி மூடிவிட்டு வந்த குற்றத்திற்காக நான் கைது செய்யப்பட்டேன். சில தினங்களில் விசாரணையும் நடந்தது. நீதிபதியின் முன் கைதிக் கூண்டில் நின்ற நான், அதிகார வர்க்கத்தின் செல்வாக்கையும், என் பலவீனத்தையும், அது 'கோர்ட்' என்பதையும் மறந்தேன். ஆத்திரம் பொங்கப் படபடப்புடன் நடந்த விஷயங்களை யெல்லாம் ஆதியோடந்தமாகச் சொல்லி, எனக்குத் தெரிந்த ஆங்கிலச் சொற்கள் அத்தனையும் உபயோகித்து என் மேலதிகாரியைத் திட்டினேன். அதன் பலன் எனக்கு எட்டு மாதச் சிறைவாசம்!

"எப்போது விடுதலை யடைந்து வெளியுலகைக் காணப் போகிறோம்?" என்று ஏங்கித் தவித்துக் கொண்டிருந்த எனக்கு, எட்டு மாதத்திற்கும் பிறகு விடுதலை கிடைத்தது.

"இனி இந்த அடிமை உத்தியோகம் பார்ப்பதில்லை!" என்று தீர்மானித்தேன். எப்படியாவது வைத்தியக் கல்லூரியில் சேர்ந்து படித்துச் சுயமே சம்பாதிக்கத் தீர்மானித்தேன். ஆனால், என் தந்தையால் வைக்கப்பட்டிருந்த ஆஸ்தி என் எண்ணத்திற்குப் போதுமானதாயில்லை. கிராமக் கணக்குப் பிள்ளை உத்தியோகம் பார்க்கும் என் அத்தை புருஷரிடமிருந்தும் எவ்வித உதவியையும் எதிர்பார்க்க முடியாது. ஆகவே, பம்பாயில் நல்ல உத்தியோகத்தில் இருப்பவரும், என் தாயின் தூர பந்துவுமான ராஜாராம் என்பவருக்கு என் குடும்ப நிலையையும், என் ஆவலையும் விளக்கி ஒரு நீண்ட கடிதம் எழுதினேன். சில தினங்களில் நான் எதிர்பாராத விதமாக அந்த ராஜாராம் என்பவரே எங்கள் வீட்டிற்கு வந்து சேர்ந்தார். எங்கள் குடும்பத்தில்

அடுத்தடுத்து சேர்ந்த துக்க சம்பவங்களை எல்லாம் கேட்டு வருந்தினார். அவர் தம்முடன் பம்பாய்க்கு வந்தால் என் படிப்பிற்கு வேண்டிய உதவியனைத்தும் செய்வதாகச் சொன்னார்.

சில தினங்களில் நானும் என் தாயாரும் சாஜாராமுடன் பம்பாய்க்குப் புறப்பட்டோம். பத்மினியின் தந்தை, "நீ படித்துப் பட்டம் பெற்று வரும் வரை உன் பத்மினியைக் கன்னிகையாகவே வைத்திருப்பேன்!" என்று உறுதி யளித்தார்.

பதுமைபோல் அசைவற்று நின்ற பத்மினி தன் அழகிய விழிகளை உயர்த்தி என்னை நோக்கினாள். அவள் கண்களில் நீர் துளித்தது.

★

வருஷங்கள் பல ஓடி மறைந்தன. சாஜாராமின் உதவியால் வைத்தியக் கல்லூரியில் ஐந்து வருஷப் படிப்பையும் வெற்றியுடன் பூர்த்தி செய்தேன். ஒரு 'ஸர்ஜ'னிடம் உதவி டாக்டராக இருந்து தனியே தொழில் செய்வதற்குரிய மதிப்பையும் பெற்றேன். எஞ்சியிருந்த பணத்துடனும், சாஜாராமின் உதவியுடனும் சொந்த 'டிஸ்பென்ஸரி' ஒன்றை அமைத்து வெற்றியுடன் தொழிலை ஆரம்பித்தேன்.

நான் பம்பாய் வந்தபின் சுமார் மூன்று வருஷம் வரை பத்மினியின் தந்தையிடமிருந்து அடிக்கடி கடிதம் வந்து கொண்டிருந்தது. அப்புறம் பல நாள் வரை கடிதமே வரவில்லை. கவலை கொண்ட நான் பல கடிதங்கள் எழுதினேன். வெகு நாட்களுக்குப் பிறகு பத்மினியால் எழுதப்பட்ட கடிதமொன்று வந்தது. அதில், அப்பாவுக்கு உடம்பு குணமில்லாமல் போய்விட்டதால் கடிதம் எழுத முடியவில்லை என்றும், இனித் தானே அடிக்கடி எழுதுவதாயும், கவலையின்றிப் படிக்கும் படியும் அவள் எழுதியிருந்தாள். ஆனால், அப்புறமும் இரண்டு, மூன்று மாதங்களுக்கொரு முறைதான் அவளிடமிருந்து கடிதம் வந்தது. அதுவும் இரண்டே வரிகள்தான். "சௌக்கியம்; கவலையின்றிப் படி; பத்மினி." —இதைப் பற்றி நான் அதிகம் கவலைப் படவில்லை. ஏனெனில், என் பத்மினியின் கையால் எழுதப்பட்ட அந்த இரண்டு வார்த்தைகளே எனக்கு அளவற்ற உற்சாகம் அளித்து வந்தன.

"குழந்தாய்! என் கஷ்டங்களுக்குக் காரணமான அந்தக் கிராமத்திற்கு வர எனக்கு இஷ்டமில்லை. நீ மட்டும் போய் உன் அத்தை, அத்திம்பேர், பத்மினி எல்லாரையும் அழைத்துக் கொண்டு வா. இங்கேயே கல்யாணத்தை நடத்தி விடலாம்" என்றாள் ஒரு நாள் என் தாய். இவ்வுத்தரவுக்காகவே காத்திருந்த நான் அன்றே மகிழ்ச்சியுடன் பம்பாயினின்றும் புறப்பட்டேன்.

புறப்பட்ட மூன்றாம் நாள் எங்கள் கிராமத்தை யடைந்தேன். என் அத்தை வீட்டு வாசலில் வண்டியை நிறுத்தச்



சொல்லி, அதினின்றும் இறங்கி ஆவலே வடிவாய் வீட்டின் உட்புறம் நோக்கினேன். என்ன ஆச்சரியம்! அவ் வீட்டில் நான் ஆவலுடன் காண வந்த பத்மினியோ, அத்தையோ இல்லை! முகமறியாத வேறு பலர் இருப்பதைக் கண்டேன். அப்பொழுது அவ்வீட்டினின்றும் வெளியே வந்த ஒருவர் மூலமாகப் பின்வரும் திடுக்கிடத்தக்க விஷயத்தை அறிந்தேன் :—

"என் அத்தை புருஷர் சுமார் இரண்டு வருஷங்களுக்கு முன் இறந்து விட்டார்! அவர் இறந்தவுடன் குடும்பத்தைக் கடன்காரர்கள் சூழ்ந்து கொண்டனர். அப்போது அக்கடன்களையெல்லாம் தீர்த்து, பத்மினியையும் இரண்டாந்தாரமாக மணந்து கொண்டார் ஒரு பணக்காரர். இப்போது அக்குடும்பம் சென்னையில் இன்ன தெருவில், இன்ன பங்களாவில் இருக்கிறது!"

★

சென்னையில் அவர்கள் பங்களாவைக் கண்டு பிடிக்க நான் அதிகக் கஷ்டப்படவில்லை. பங்களாவுக்குள் நுழைந்து முன்புறத் தோட்டத்தை யடைந்த நான் அப்படியே பிரமித்து நின்று விட்டேன். காரணம் அத் தோட்டத்தின் மத்தியிலிருந்த மேடையில் அமர்ந்திருந்த பத்மினியைக் கண்டதே. நான் வந்து நிற்பதுகூடத் தெரியாமல் ஆழ்ந்த சிந்தனையுடன் உட்கார்ந்திருக்கும் அவள் உடம்பில் ஏராளமான வைர ஆபரணங்கள் சுடர் விட்டுப் பிரகாசித்தன. "பத்மினி!" என்றேன் கடுமையான குரலில்.

என் கோபத்தைக் கண்டு நடுங்கி நின்றாள் பத்மினி. அவள் முகத்தில் வியர்வை அரும்பிற்று. பதுமைபோல் அசைவற்று நின்ற அவள் உதடுகள் லேசாக அசைந்தன. கெஞ்சும் குரலில், "அம்மாஞ்சி!......" என்றாள். ஆனால், மேலும் அவள் சொல்லியவைகளைக் கேட்க நான் அங்கு நிற்கவில்லை.

அளவற்ற ஏமாற்றத்தால் கொதித்துக் குமுறியது என்னுள்ளம். பயித்தியம் கொண்டவனைப் போல் பட்டணத்து வீதிகளில் சுற்றி அலைந்தேன். அப்போது என் அறிவு தெளிவாக இல்லை. வெகு நேரத்திற்குப் பின் நான் ஒரு பங்களா முன் நின்றிருந்த காரைக் கவனித்தேன். அந்தக் காருக்குள் பத்மினி உட்கார்ந்திருந்தாள். அவள் பக்கத்தில் அமர்ந்திருந்த ஆசாமியைக் கண்டு நான் திக்பிரமை யடைந்தேன். என் கழுத்திலிருந்து தலை வேறாகப் பிரிந்து எங்கேயோ பறந்து செல்வதுபோல் தோன்றியது. இவ்விதம் என் மூளையைச் சுழல வைத்த அந்த ஆசாமி வேறு யாரு மல்ல; என் வாழ்வைப் பாழ் செய்த அந்த மேலதிகாரிதான்!

அவர்களும் என்னைப் பார்த்து விட்டனர். உடனே அந்த ஹிருதயமற்ற பாவி என்னைப் பற்றிப் பத்மினியிடம் ஏதோ சொல்ல ஆரம்பித்தான். அதற்கு மேல் நான் அங்கே எதற்கு நிற்க வேண்டும்?

அன்றே பம்பாய்க்குப் பிரயாண மானேன். "குழந்தை எங்கேடா?" என்று கேட்ட என் தாயிடம் விஷயத்தைச் சொன்னேன். "நாம் கொடுத்து வைத்தது அவ்வளவுதான்!" என்று அவள் பெருமூச்சு விட்டாள்.

★

மூன்று வருஷங்கள் ஓடாமல், உருளாமல் மிக நிதானமாகவே சென்றன. இந்த மூன்று வருஷ காலத்தில் பம்பாய் நகரத்தின் ஒரு பாக முற்றிலும் டாக்டர் சந்திரனின் பெயர் எதிரொலித்தது. இந்த நாட்களில்தான் என் வாழ்க்கையே மாற்றக்கூடிய ஒரு சம்பவம் நடந்தது!

ஒரு நாள் நடு நிசி யன்று, தன் அப்பாவுக்கு உடம்பு அதிகமா யிருக்கிறது என்பதற்காக, ஒரு யுவதி என்னை வந்து அழைத்துப் போனாள். அங்கே என் இருண்ட வாழ்விற்குக்

காரணமான பத்மினியின் கணவர், "தேவி! தேவி!" என்று முனகிக் கொண்டே கட்டிலில் படுத்துக் கொண்டிருந்தார். என்னை அழைத்து வந்த யுவதி அவரை நெருங்கி, "இதோ, டாக்டர் வந்து விட்டார், அப்பா!" என்றாள். அவர் தம் கண்களைத் திறந்து என்னை நோக்கினார். "சந்திரன்! அப்படியே திரும்பிப் போய் விடாதே! இப்படி உட்கார். என்னை நீ மன்னிக்க மாட்டாய்! ஆயினும், பத்மினிக்காக நீ என்னை மன்னிக்கத்தான் வேண்டும். நான் உன் சத்துரு என்பதை அறிந்த பின் பத்மினி வேண்டுமென்றே தன் கைகளை வெறுத்து விலக்கினாள்.



அதன் பலனும் அவள் சீக்கிரமே மரணப் படுக்கையில் வீழ்ந்தாள். அவள் கடைசி வேண்டுகோள் இது தான்: 'நீங்கள் என் அம்மாஞ்சிக்கு இழைத்த கொடுமைக்குப் பிராயச்சித்தம் செய்து கொள்ள விரும்பினால், பம்பாயில் அவரைத் தேடிப் பிடித்து அவர் மனதை மாற்றி, நான் அவருக்கென்றே வளர்த்த தேவியை, அவருக்கு விவாகம் செய்து வையுங்கள். அப்பொழுதுதான் என் ஆத்மா சாந்தியடையும். இதை என் அம்மாஞ்சியிடமும் சொல்லுங்கள்' என்று வேண்டினாள். என்னால், துன்பத்திற்காளான அவள் கடைசி வேண்டுகோளை நிறைவேற்றவே நான் பம்பாய் நகரத்திற்கு வந்தேன். தேவி என் பெண் என்பதற்காக நீ அவளை ஏற்க வேண்டாம். பத்மினியின் வளர்ப்புப் பெண்; பத்மினியின் உபதேசத்தால் உன்னைத் தெய்வமாக நினைப்பவள்; அவளைப் பற்றி உனக்குப் பத்மினி எழுதியிருக்கும் இந்தக் கடிதத்தைப் படித்துப் பார்!" என்று சொல்லிக் கொண்டே அவர் தம் தலையணையின் கீழ் வைத்திருந்த கடிதத்தை எடுத்து என்னிடம் கொடுத்தார். அதில் பத்மினியால் பின் வருமாறு எழுதப்பட்டிருந்தது:—

"அம்மாஞ்சி! சென்று போனதை மறந்து விடு. நீ என்மேல் வைத்த அன்பு உண்மையாயின், என் அன்பின் பரிசாக லக்ஷ்மி தேவியை ஏற்றுக்கொள். அவளைச் சாதாரணமாக எண்ணாதே. அவள் இளம் உள்ளத்தை என் உபதேச மொழிகளாலும், உன் புகைப்படத்தினாலும் கனியச் செய்து, உன்னை அவள் என்றும் மறக்க முடியாமல் செய்து விட்டேன்! மரணப் படுக்கையிலிருக்கும் உன் பத்மினியின் வேண்டுகோளை மறுக்க மாட்டாய் என்ற நம்பிக்கையுடனேயே போகிறேன். கடவுள் உங்களை ஆசீர்வதிப்பார். —பத்மினி."

இந்தக் கடிதத்தைப் படித்து முடித்ததும், எனக்கு என்ன சொல்வதென்று ஒன்றும் தோன்றவில்லை. மறு நாள் வந்து முடிவைச் சொல்வதாகச் சொல்லி விட்டு வந்து விட்டேன்.

அடுத்த நாள் தேவியின் தந்தையைக் கண்ட நான் திடுக்கிட்டேன். அப்பொழுது அவர் மிக்க அபாயகரமான நிலையில் இருந்தார். நான் சட்டெனக் 'கோராமின் ட்யூபை' உடைத்து 'இன்ஜெக்ஷன்' செய்தேன். சற்று நேரத்தில் கொஞ்சம் தெளிவை யடைந்த அவர், ஜாடை மூலம் தேவியை அருகில் அழைத்து அவள் கையைப் பற்றி ஆவலே வடிவாய் என் முகத்தை நோக்கினார். அவர் விருப்பத்தை உணர்ந்த நான் என் கையை நீட்டினேன். எங்கள் இருவர் கைகளையும் சேர்த்து, மிக்க சிரமத்தோடு அவர் ஆசி கூறினார்.

★

அன்று தூக்கம் வாராததால் காற்றிற்காகத் தோட்டத்தை யடைந்தேன். அத் தோட்டத்தில் நான் கண்ட காட்சி என்னைத் திகைக்கச் செய்தது. அத் தோட்டத்தின் மத்தியிலுள்ள பவழ மல்லிகை மரத்தின் கீழிருந்த மேடையில், தேவி உட்கார்ந்திருந்தாள்! பின்னப் படாத அவளுடைய கருமேகம் போன்ற கூந்தல் காற்றில் தவழ்ந்து விளையாடிக்கொண்டிருந்தது. சோகமே வடிவாய் உட்கார்ந்திருந்த அவள் கண்கள் நீரைச் சொரிந்தன.

பால் போன்ற அந்நிலவில், பவழ மல்லிகை மரத்தின் கீழ் இருந்த அவள் ஒரு 'மோகினி' போலவே தோன்றினாள். அத் தோற்றம் என் உள்ளத்தில் பெரியதோர் கிளர்ச்சியை உண்டுபண்ணிற்று. என் மன மலர் மெல்ல விரியத் தொடங்கிற்று.

அப்போது, பவழ மல்லிகை மரம் மன்மதனாகவும், அதன் மலர்கள் அவன் விடும் பாணங்களாகவும் என்மேல் பொழிந்தன! இயற்கைத் தேவி தன் வலிமை மிகுந்த கரத்தை, என் சிரசில் வைத்து, "குழந்தாய்! என் சக்தியை யாராலும் மீற முடியாது! உன் அருளுக்காகக் காத்து நிற்கும் இம்மலரை, உன் அன்பு என்னும் பனித்திவலைகளால் மலரச் செய்!" என்று ஆசி கூறினாள். இவை யெல்லாவற்றிற்கும் மேலாக என் இருதய வானத்தில், "என் அன்பின் பரிசாக லக்ஷ்மி தேவியை ஏற்றுக் கொள்" என்ற பத்மினியின் சொல் மிகத் தெளிவாக எதிரொலித்தது!

வியாதியஸ்தரின் படுக்கையை நாடி நாடிச் சென்று அலுப்படைந்திருந்த என் கால்கள், துள்ளி எழுந்து தேவியின் அருகில் சென்றன. நாடித் துடிப்பை ஆராய்ந்து, ஆராய்ந்து சோர்ந்திருந்த என் கரம், உற்சாகத்துடன் தேவியின் கரத்தைப்பற்றி அதன் மிருதுத் தன்மையை ஆராய்ந்தது! கசப்பான மருந்துகளைச் சொல்லிச் சொல்லிக் கசப்படைந்திருந்த என் நாக்கு மிக்க இனிமையாக, "தேவி! என் பத்மினியின் அன்புப் பரிசான உன்னை இன்றே என் தேவியாக ஏற்றுக் கொண்டேன்!" என்றது.

என்னை நிமிர்ந்து நோக்கினாள் தே அவள் விழிகள் என்னை விழுங்கி விடுவதுபோல் விரிந்து நின்றன. அதே சமயம் பத்மினியின் ஆசிச் சொற்களே போல், பொல பொல வென்று பவழ மல்லிகை மலர்கள் உதிர்ந்தன!



முகாம் சித்ராதியேட்டர் திருவனந்தபுரம்,

# மதுரை தேவி பால வினோத சங்கீத சபா.















எமது
உரிமை பெற்ற
நாடகங்கள்

இன்பசாகரன்
ஏசு நாதர்
பிரேமகுமாரி
பிரபலச்சந்திரா
— மற்றும் —
ராமதாஸ்
ரீமாயணம்
ஞானசவுந்தரி
பிரஹலாதா
முதலியன



நவாப். T. S. ராஜமாணிக்கம் கம்பனி

"என்னைப் பரிபாலிப்பதற்கு இந்தனை தூரம் நடந்து வந்தனையோ?" என்று ஸ்ரீ ராமபிரானை நேருக்கு நேர் தரிசித்து உள்ளமும் ஊனும் உருகிப் பாடிய பரம பக்தர் ஸ்ரீ தியாகய்யர் மீண்டும் இந்தப் புண்ணிய பூமியிலே புனர் அவதாரம் எடுக்கப் போகிறார். வெள்ளித் திரையிலே எழுந்தருளிக் காட்சி தரப் போகிறார். பாடப் போகிறார்; பக்தி பரவசத்தில் ஆடவும் போகிறார்.

இவ்வாறு நூறு வருஷத்துக்குப் பிறகு ஸ்ரீ தியாகப் பிரம்மத்தைத் திரும்பவும் பூலோகத்திற்குக் கொண்டுவரும் புண்ணிய கைங்கரியத்தை ஸ்ரீ நாகய்யா தமது சொந்தப் பொறுப்பாக ஏற்றுக் கொண்டிருக்கிறார்.

தென்னாட்டின் தலைசிறந்த நடிகரான ஸ்ரீ நாகய்யா, மற்ற அம்சங்களில் தியாகய்யராக நடிப்பதற்குப் பொருத்தமானவர்தான்; ஆனால் வேஷம் அவ்வளவு பொருத்தமாயிருக்குமா என்று சந்தேகப்பட்டவர்களுக்கு, இந்தப் படத்தைப் பார்த்ததும், அந்த சந்தேகமும் தீர்ந்து விடுமென்று நம்புகிறோம்.



நாகய்யாவின் தியாகய்யா





## வேய்ங் குழல்

காற்றினிலே வரும் கீதம்

கண்கள் பனித்திடப் பொங்கும் கீதம்
கல்லுங் கனியும் கீதம்

பட்ட மரங்கள் தளிர்க்கும் கீதம்
பண்ணொளி கொஞ்சிடும் கீதம்
காட்டு விலங்கும் கேட்டே மயங்கும்
மதுர மோகன கீதம்
நெஞ்சினில் இன்பக் கனலை எழுப்பி
நினைவழிக்கும் கீதம்



பொழி கீதம்

கலை வண்டுடன் சோலைக் குயிலும்
மனம் குளிர்ந்திடவும்
வான வெளிதனில் தாரா கணங்கள்
தயங்கி நின்றிடவும்
ஆ! என் சொல்வேன்! மாயப் பிள்ளை
வேய்ங் குழல் பொழி கீதம்

நிலா மலர்ந்த இரவினில் தென்றல்
உலா விடும் நதியில்
நீல நிறத்துப் பாலகன் ஒருவன்
குழல் ஊதி நின்றான்
கால மெலாம் அவன் காதலே என்னை
உருகுமோ என் உள்ளம்!



## ஸ்வர்க்க சீமா

வந்தேமாதரம், சுமங்கலி, போதனா முதலிய படங்களைப் பார்த்தபோது, "இந்த வாஹினி கம்பெனியார் இன்னும் என்ன வேலைதான் செய்யப் போகிறார்களோ?" என்று நாம் வியந்தோமல்லவா? அதற்குத் தகுந்தாற் போல், அவர்கள் இப்போது பூலோகத்திலே "ஸ்வர்க்க பூமி"யைக் கொண்டு வந்து விடுகிறோம் என்று ஆரம்பித்திருக்கிறார்கள். செய்யக்கூடியவர்கள்தான், சந்தேகமில்லை. சொர்க்கத்தைக் கொண்டு வந்தால் என்ன? இதுதான் சொர்க்கம் என்று காட்டினால் என்ன?

கவிதையை உத்தாரணம் செய்யப் போகிறேன் என்று ஆரம்பிக்கும் ஆசிரியர் ஒருவர் தாமே எப்படி வீழ்ச்சியடைந்து விடுகிறார் என்பதையும், அவர் பிறகு புனருத்தாரணம் ஆவதையும் கதையாகக் கொண்ட இந்தப் படத்தில் "கணவனும் மனைவியும் ஒத்து வாழும் வீடே சொர்க்கம்" என்று எடுத்துக் காட்டப் படுகிறதாம். வாஹினியின் சிருஷ்டி என்பது ஒரு புறமிருக்க, ஸ்ரீ நாகய்யா, ஸ்ரீமதி ஜயம்மா முதலிய பிரபல நட்சத்திரங்கள் மின்னுகிறார்கள் என்றும், 'ஸ்வர்க்க சீமா' பிரகாசத்துடன் விளங்குவதற்குக் கேட்பானேன்?





# அதிசயங்கள்

## 1

"மலடிவயிற்று மகவ்போலே—ஒரு
புதையல் எடுத்த தனம்போலே"

என்று அருணகிரியாரோ, வேறு யாரோ பாடியிருக்கிறார்கள். புதையல் எடுத்த தனம் எதனாலோ அவ்வளவு மகிழ்ச்சி அளிப்பதாகிறது. அதிலும், எங்கேயோ ஓரிடத்தில் புதையல் இருப்பதாகத் தெரிந்து அதைக் கஷ்டப்பட்டுத் தேடி அடைந்தால் அப்போது உண்டாகும் ஆனந்தத்துக்கு அளவேயில்லை. இங்கிலீஷ் கதைகளில் படித்திருக்கிறோம்: எங்கேயோ சமுத்திரத்தின் மத்தியில் உள்ள தீவில் ஏதோ ஒரு மலைக் குகையில் யாரோ புதைத்து வைத்த கணக்கில்லாத செல்வம் இருக்கிறது என்று ஒருவனுக்குத் தெரிந்து விடுகிறது. அதைக் கண்டு பிடித்து எடுத்து வருவதற்காக அவன் யாத்திரை கிளம்புகிறான். பிரயாணத்தின் போது அவனுக்கு எத்தனை எத்தனையோ இடையூறுகள் நேரிடுகின்றன. கடைசியாக, குறிப்பிட்ட தீவை அடைகிறான்.

தீவிலே, பொக்கிஷக் குகையைத் தேடி அலைகிறான். அலைந்து அலைந்து அலுத்து எல்லா நம்பிக்கையும் ஏறக்குறையப் போய்விட்ட சமயத்தில் பொக்கிஷக் குகை அகப்பட்டு விடுகிறது. அதற்குள்ளே நுழைவதற்கு எவ்வளவோ சொல்ல முடியாத கஷ்டங்கள். உள்ளே நுழைந்ததும் பெரிய ஏமாற்றம். குகை காலியாயிருக்கிறது. பைத்தியம் பிடித்தவனைப் போல் குகைச் சுவர்களைக் கையினால் அடித்துத் தரையிலும் மோதிக் கொள்கிறான். ஓரிடத்தில் சுவரில் விநோதமான சத்தம் உண்டாகிறது. மறுபடியும் உயிர் வருகிறது. படாத பாடுபட்டு இரகசியக் கதவைத் திறக்கிறான். உள்ளே பார்த்தால் ஜாஜ்வல்யமான முத்துக்களும் மணிகளும் இரத்தினங்களும் வைரங்களும் குப்பல் குப்பலாகக் குவிந்து கிடக்கின்றன! அப்போது அந்த மனிதனுக்கு எப்படி இருக்கும்?

எனக்குத் தெரியாது! ஏனெனில், அந்த மாதிரி அநுபவம் எனக்கு ஏற்பட்டதில்லை. ஏற்பட்டிருந்தால் திரும்பி வந்து உங்களுக்குச் சொல்லமாட்டேன்.

அம்மாதிரி கதைகள் எழுதியிருக்கும் இங்கிலீஷ் ஆசிரியர்களுக்கும் மேற்படி அநுபவம் நிச்சயமாய் ஏற்பட்டிராது. ஏற்பட்டிருந்தால் அவர்களும் கதை எழுதியிருக்க மாட்டார்கள். இரத்தினங்களையும் வைரங்களையும் கையிலும் அள்ளிக் கொண்டே பைத்தியம் பிடித்துச் செத்துப் போயிருப்பார்கள்!

ரா.கி.

ஆனால் அந்தமாதிரி அபாயம் ஒன்றுமில்லாமல், நாமும் அநுபவித்துப் பிறருக்கும் சொல்லி நாள் கணக்காகவும் வருஷக் கணக்காகவும் ஆயுள் பூராவுமே நினைத்து நினைத்துச் சந்தோஷப் படக்கூடியதான இரகசிய பொக்கிஷம் ஒன்று நமது பாரத நாட்டில் இருக்கிறது. நைஜாம் ராஜ்யத்திலுள்ள அவுரங்காபாத் ரயில் ஸ்டேஷனுக்கு வடக்கே அறுபது மைல் தூரத்தில் மலைகளுக்கு மத்தியில் மனிதர்கள் இலேசில் கண்டு பிடிக்க முடியாத இரகசியமான இடத்தில் இருக்கிறது! அந்தப் பொக்கிஷந்தான், அஜந்தா குகை மண்டபங்களும் அவற்றிலுள்ள அதி ஆச்சரியமான அழியாத வர்ண சித்திரங்களும்.

ஆம்; அந்தப் பழைய காலத்தில் இந்த அஜந்தா குகைகளைத் தேடி அடைவது எவ்வளவோ சிரம சாத்தியமாயிருக்க வேண்டும். ரயில் பாதைகளும், தார் ரோடுகளும், கார் வண்டிகளும் வந்துவிட்ட இந்தக் காலத்தில் அவ்வளவு கஷ்டமில்லை. ஏறக்குறைய அஜந்தா குகைகளின் அடிவாரத்துக்கே மோட்டார் வண்டி போய் நின்று விடுகிறது.

இன்னும் கொஞ்சம் முன்னாலிருந்து கதையை ஆரம்பிக்கிறேன்.

## 2

சென்னையிலிருந்து பம்பாய்க்கும் பம்பாயிலிருந்து அவுரங்காபாத்துக்கும் ரயிலில் சென்றோம். அவுரங்காபாத்திலிருந்து 120 ரூபாய்க்கு டாக்ஸி பேசிக் கொண்டு அதி காலையில் அஜந்தாவுக்குக் கிளம்பினோம். அஜந்தா சாலை நல்ல சாலையானபடியால் கார் பிரயாணம் வெகு சுகமாயிருந்தது. வழியில் இரண்டு மூன்று சிறு வாய்க்கால்களைப் பார்த்தோம்; அவற்றில் தண்ணீர் இல்லை. அந்த வாய்க்கால்களில் ஒன்றுதான் கோதாவரி நதியின் மூல உற்பத்தி ஸ்தானம்.

இது எப்படித் தெரிந்தது என்றால், ஸ்ரீ ரவி சங்கர் ராவல் என்பவர் எழுதியுள்ள "அஜந்தா கலா மண்டபம்" என்னும் சித்திர புத்தகத்தைப் பார்த்



தாகத் தெரிந்தது. இந்த ரவி சங்கர் ராவல் என்பவர்தான், நமது பிரசித்தி பெற்ற சித்திரக்காரர் ஸ்ரீ கனுதேசாய் அவர்களின் சித்திரக்கலை ஆசிரியராம். அஜந்தா சித்திரங்களையும் விசித்திரங்களையும் பார்த்து அநுபவிப்பதற்கு மேற்படி புத்தகம் எங்களுக்கு மிகவும் ஒத்தாசையாயிருந்தது.

சுமார் ஒன்பது மணிக்கு எங்களுடைய கார், அஜந்தாவுக்கு மூன்று மைல் தூரத்திலுள்ள 'பிரயாணிகள் விடுதி'யின் வாசலில் போய் நின்றது. நின்றதும், டிரைவர் முதலில் கீழே இறங்கினான். இறங்கியவன் காரைச் சுற்றி வந்து பார்த்தான். பிறகு எங்களைப் பார்த்தான். வெடிகுண்டு போடுவதைப்போல் ஒரு கேள்வி போட்டான்.

"ஸ்டெப்னி எங்கே?" என்றான்.

அந்த டாக்ஸியில் நாலு டயரும் மோசமாயிருந்தபடியால் ஆபத்துக்கு உதவ அவன் இரண்டு ஸ்டெப்னி டயர் கொண்டு வந்திருந்தானாம். அதில் ஒன்று வண்டியின் இடப் பக்கத்தில் கட்டப்பட்டிருந்ததாம். "அந்த டயர் எங்கே?" என்று கேட்டான்.

"ஆடாடா! எங்களுக்குத் தெரியாதே!" என்றோம்.

டிரைவர் அதை நம்பவில்லையென்று தோன்றியது. நாங்கள் அதைத் திருடியிருக்க வேண்டும் என்றே அவன் சந்தேகப்பட்டதாகத் தோன்றியது. நாங்கள் பெட்டி, பேட்டி ஒன்றும்



கொண்டு வரவில்லை. எனவே, சட்டைப் பைகளை உதறிக் காட்டினோம். அப்படியும் அவன் நம்பவில்லை. ஒருவேளை நாங்கள் அந்த டயரை வழியில் சாப்பிட்டிருப்போம் என்று நினைத்தானோ என்னமோ தெரியவில்லை! பிறகு, அவன் எங்கேயோ சத்தியாக்கிரகம் செய்யத் தொடங்கினான். என்ன கேட்டாலும் பதில் கிடையாது! மத்தியானம் எங்களுடன் சாப்பிடவும் மறுத்து விட்டான்!

நாங்கள் கொண்டுவந்திருந்த கட்டுச் சாதத்தைச் சாப்பிட்டுவிட்டு, பங்களாக் காவல்காரனிடம் மத்தியானச் சாப்பாடு தயார்ப் பண்ணச் சொல்லி விட்டு, அஜந்தா குகைகளுக்குக் கிளம்பினோம். அஜந்தாவின் வளைந்து வளைந்து சென்ற மலைப் பாதைகளில் கார் சென்றபோது, எங்களில் சிலருக்கு 'வீட்டிலே சொல்லிக்கொண்டு வரவில்லையே!' என்று தோன்றி விட்டது! 'ஸ்டெப்னி டயர்' போன துக்கத்திலும் எந்த நிமிஷத்தில் நம்மைக் காருடன் பள்ளத்தில் தள்ளி விடுகிறானோ என்று பதை பதைப்பாயிருந்தது. எனக்கு மட்டும் ஒரு சந்தோஷம். செத்தாலும், அஜந்தாவில் வந்து சாகிறோமல்லவா? கைலாசத்தையும் வைகுந்தத்தையும் விட அஜந்தா எந்த விதத்தில் மட்டமானது?......

## 3

கைலாசமும் வைகுந்தமும் எப்படி எளிதில் அடைய முடியாததாய், எங்கே இருக்கிறதென்று கூட அறிய முடியாததாய் இருக்கிறதோ, அப்படித்தான் அஜந்தாவும் இருக்கிறது. மலைப் பாதையில் போகும்போது எதிரே ஒரு பெரிய மலை குறுக்காக நிற்கிறது. இதோடு பாதை முடிந்தது, இனிமேல் போக முடியாது என்று தோன்றுகிறது. ஆனால் உண்மையில் அந்த மலையை வளைத்துக் கொண்டு பாதை போகிறது. மறுபடியும் எதிரே ஒரு மலை; இனிமேல் வழி கிடையாது என்ற பிரமை. மறுபடியும் பாதையில் ஒரு வளைவு. இப்படியாக எழெட்டுத் தடவை, வழிமறித்து நிற்கும் மலைகளை வளைந்து வளைந்து தாண்டி, கடைசியில் அஜந்தா குகை மண்டபங்களின் அடிவாரத்துக்கு வருகிறோம்.

பிறகு, நெஞ்சு பதை பதைக்க, ஆயம் தடி தடிக்க, அங்குள்ள படிகளின் மேல் ஏறுகிறோம். எல்லாவற்றிற்கும் மேற் படியில் கால வைத்ததும், இத்தனை தூரம் தேடி வந்த அற்புதக் காட்சி நம் கண் முன்னால் தென்படுகிறது. மேலே போக முடியாமல் அங்கேயே நின்று பார்க்கிறோம். பார்க்கப் பார்க்க ஒரே திகைப்பாயிருக்கிறது.

அர்த்த சந்திர வடிவமாக வெகு தூரத்துக்கு வெகு தூரம் வளைந்து செங்குத்தாக உயர்ந்திருக்கும் பாறை முகத்தில் ஆங்காங்கே குகை வாசல்கள் சித்திர விசித்திரமான பெரிய தூண்களுடன் காணப்படுகின்றன. அந்தப் பாறைச் சுவரை யொட்டிக் கீழே கிடு கிடு பள்ளத்தில் 'பாகோரா' நதி அதே அர்த்த சந்திர வடிவமாய் ஓடுகிறது. நதிக்கு மறு கரையில் மறுபடியும் மலைப்பாறை செங்குத்தாக உயர்ந்து நிற்கிறது. அஜந்தா மலையிலே இந்த கைய பாதிமதி வடிவமான இரண்டு செங்குத்தான பாறை முகங்களை உண்டாக்குவதற் கென்றே அந்த இடத்தில் 'பாகோரா' நதியானது மலையை அப்படி வளைவாகக் கிழித்துக் கொண்டு போவதாகத் தோன்றுகிறது. முதன் முதலிலே இந்த இடத்துக்கு வந்த புத்த முனிவர்களும் மகா சிற்பிகளும் மலைக்கு வெளியே வரும் நதி முகத்தைப் பிடித்துக் கொண்டு அதன் வழியாகவேதான் வளைந்து வளைந்து ஏறிக் கடைசியில் இந்த அதிசயமான இடத்துக்கு வந்து சேர்ந்திருக்க வேண்டும்!

எனவே, அஜந்தா அதிசயங்களுக்குள்ளே முதலாவது அதிசயத்தைப் பல்லாயிரம் வருஷங்களுக்கு முன்பே 'பாகோரா' நதி அமைத்து விட்டது!

அவுரங்காபாத்துக்கு அருகிலுள்ள எல்லோரா மலையிலுந்தான் குகை மண்டபங்களும், அதிசயமான சிற்பங்களும் இருக்கின்றன. அவற்றில் சிலவற்றை இந்தத் தீபாவளி மலரில் காணலாம். (எல்லோராச் சிற்பங்கள் பற்றிய கட்டுரை 15-10-44 "கல்கி" இதழில் வெளியாகிறது.) ஆனால் எல்லோரா மலையை அடைவதில் எவ்விதக் கஷ்டமும் இல்லை. மலையின் வெளிப்புறத்து முகப்பிலேயே குகை மண்டபங்களையும் சிற்ப அதிசயங்களையும் பகிரங்கமாக அமைத்து விட்டார்கள்.

ஆனால், அஜந்தாவிலே மட்டும் இவ்வளவு இரகசியமான கஷ்ட சாத்திய

மான இடத்தைத் தேர்ந்தெடுத்ததின் காரணம் என்ன?

சிற்பக் கலைக்கும் சித்திரக் கலைக்கும் உள்ள முக்கியமான வித்தியாசந்தான் காரணம். அதாவது, சிற்பக் கலையை விட சித்திரக் கலைக்கு பந்தோபஸ்து அதிகமாக வேண்டும் என்பதுதான். அதைக் காட்டிலும், அஜந்தாவைத் தேர்ந்தெடுத்த புத்த பிக்ஷுக்கள் "உலகத்திலேயே மிக அதிசயமான ஒரு காரியத்தை நாம் செய்யப் போகிறோம். இரண்டாயிரம் வருஷத்துக்கு மேல் நீடித்திருந்து எத்தனையோ வருங் கால சந்ததிகளை எல்லையற்ற ஆச்சரியத்தில் மூழ்கடிக்கப் போகிற அற்புதமான வர்ண சித்திரங்களை எழுதுவிக்கப் போகிறோம்" என்பதை உணர்ந்திருந்ததே காரணமாயிருக்க வேண்டும். அதற்காகவே, மகான்களாகிற அந்தப் புத்த முனிவர்கள், மலைகளுக்கு உள்ளே, இன்னும் உள்ளே, மேலும் உள்ளே, மனிதர்கள் சுலபத்தில் புகுந்துவிட முடியாததும், கலை உணர்ச்சியற்ற மூடர்கள் வந்து நாசம் செய்ய முடியாததுமான இந்த இரகசியப் பிரதேசத்தைத் தேர்ந்தெடுத்திருக்க வேண்டும்!

இந்த எண்ணத்தினால் ஏற்பட்ட அதிசயத்தை நாங்கள் அதிக நேரம் அநுபவிக்க முடியாதபடி ஏப்ரல் மாதத்து வெய்யல் செய்து கொண்டிருந்தது! வெய்யலாவது வெய்யல்! உடம்பை அப்படியே தகித்து வறுத்துப் பொசுக்கிக் கொண்டிருந்தது. எனவே, இடத்தைப் பார்த்து அதிசயிப்பதைக் கொஞ்சம் அவசரமாகவே நிறுத்திக் கொண்டு அஜந்தாவின் முதல் நம்பர் குகையில் நுழைந்தோம்!

## 4

அப்பாடா! இது என்ன? இவ்வளவு குளிர்ச்சியும் ஜிலு ஜிலுப்பும் எங்கிருந்து வந்தது? ஐஸ் வைத்துக் குளிர்ந்த அறை மாதிரி அல்லவா இருக்கிறது?

குளிர்ச்சியின் இனிமையை அநுபவித்த பிறகு, சித்திரங்களின் அழகை அநுபவிக்க ஆரம்பித்தோம்.

"ஆஹா! என்ன சித்திரம்?" என்றார் ஒருவர்.

"என்ன அற்புதம்?" என்றார் இன்னொருவர்.

"என்ன அழகு! என்ன அழகு!"

"சகிக்கவில்லையே?"

"கொல்லுகிறதே?"

"எப்பேர்ப்பட்ட வர்ணங்கள்!"

"ஆஹா! என்ன பளபளப்பு?"

"ஐயையோ! என்ன ஜிலுஜிலுப்பு?"

உடனே, எல்லாரும் சேர்ந்து கொல்லென்று சிரித்தோம்.

உண்மை என்னவெனில், அந்தக் குகை மண்டபத்திற்குள் கும்மிருட்டுச் சூழ்ந்திருந்தது. அதிலும் வெளியில் வெய்யலில் நின்று விட்டு வந்த எங்களுக்கு ஒன்றுமே தெரியவில்லை. எனவே, அந்தக் கும்மிருட்டைத்தான் மேற்கண்டவாறெல்லாம் வர்ணித்து மகிழ்ந்தோம். அத்தகைய அந்தகாரத்திலே என்ன சித்திரத்தைப் பார்த்து நாசமாய்ப் போவது என்பதை எண்ணியபோது சிரிப்பாய் வந்தது!

ஆனால் சில நிமிஷங்களுக்குள்ளே இந்த ஏமாற்றமெல்லாம் தீர்ந்தது. நைஜாம் சமஸ்தான வில்லைச் சேவகன் ஒருவன் வந்தான். அவனை விசாரித்ததில், எலெக்டிரிக் வெளிச்சம் போட்டுச் சித்திரங்களைப் பார்ப்பதற்கு மூன்றரை ரூபாய் கட்டணம் என்று தெரிந்தது.

"கொண்டு வா எலெக்டிரிக் வெளிச்சத்தை! எடுத்துக் கொள் ரூபாயை!" என்றோம்.

சற்று நேரத்துக்கெல்லாம் அவன் திரும்பி வந்து, "எலெக்டிரிக் இயந்திரம் வேலை செய்யவில்லை" என்றான்.

எங்கள் நாடி விழுந்து விட்டது.

"அதனால் பரவாயில்லை; சூரிய வெளிச்சத்துக்கு ஒன்றரை ரூபாய்!" என்றான் அந்தச் சேவகன்.

"ரொம்ப நல்லதாய்ப் போச்சு! ஒன்றரைக்கு இரண்டரை ரூபாயாக வாங்கிக் கொள். கொண்டு வா சூரியனை!" என்றோம்.

ஐந்து நிமிஷத்துக்கெல்லாம் அந்தச் சேவகன் சூரியனைக் கொண்டு வந்தான்! ஆமாம்; குகைக்குள்ளே சூரியனைக் கொண்டு வந்தான்! சுவர்களின் ஓரமாகச் சூரியனைத் தூக்கிப் பிடித்து வெளிச்சம் போட்டான். அந்தச் சூரிய வெளிச்சத்தில் உலகத்திலேயே வேறெங்கும் காணமுடியாத அதிசயச் சித்திரங்களை — இரண்டாயிரம் வருஷத்துக்கு முன் எழுதிய ஒப்பற்ற உயிர்ச் சித்திரங்களை — நாங்கள் பார்த்தோம்!

குகைக்குள்ளே சூரியனைக் கொண்டு வந்தது எப்படி என்றால், குகை வாசலில் வெய்யலில் வெள்ளியைப் போல் பிரகாசித்த ஒரு பெரிய பளபளப்பான தகட்டைக் கொண்டுவந்து அதில் சூரிய கிரணங்கள் விழும்படியான கோணத்தில் சாய்த்து வைத்தான். சற்றுமுன் இருள் சூழ்ந்திருந்த குகை மண்டபம் பளிச்சென்று வெளிச்சமாயிற்று. எங்களுடன் குகைக்குள்ளே இருந்த இன்னொருவன் அந்த வெளிச்சத்துக்குக் குறுக்கே ஒரு வெள்ளைத் துணியைப் பிடித்தான். வெளிச்சம் ஒரு பக்கமாகத் திரும்பிக் குகைச் சுவரின் ஒரு பகுதி முழுவதிலும் நன்றாக விழுந்து, அதிலுள்ள சித்திரங்களையெல்லாம் தெளிவாகப் புலப்படச் செய்தது!



இந்த அதிசயத்தைக் கண்ட பின், இன்னொரு மகத்தான அதிசயத்தின் இரகசியம் எங்களுக்கு விளங்கிற்று. அதாவது, இப்படி இருளடைந்த குகைக்குள்ளே எப்படி அந்தக் காலத்தில் அந்த அதிசயச் சிற்ப வேலைகளையெல்லாம் செய்தார்கள்? எப்படி வர்ண சித்திரங்களை எழுதினார்கள்? — அந்தக் காலத்தில் மின்சார விளக்கு இல்லையே? எண்ணெய் விளக்கு அல்லது தீவர்த்தி போட்டிருந்தால், குகையெல்லாம் ஒரே புகையாய்க் கரியாய்ப் போயிருக்குமே? பிறகு சித்திரம் எழுதுவது எப்படி? வர்ணங்கள் தீட்டுவதுதான் எப்படி? எல்லாம் ஏகமான கறுப்பு வர்ணமாகவே அல்லவா போயிருக்கும்?

இந்தக் கேள்விகளுக்குப் பதில், எலெக்டிரிக் இயந்திரம் கொஞ்ச நேரம் கெட்டுப் போயிருந்த காரணத்தினால், எங்களுக்குக் கிடைத்தது! நாங்கள் சித்திரம் பார்ப்பதற்கு என்ன முறையைக் கையாண்டோமோ, அதே முறையைத்தான் அந்த நாளில் சித்திரம் எழுதுவதற்கும் கையாண்டார்கள். சூரியனைக் குகைக்குள்ளே கொண்டு வந்து வெளிச்சம் போடச்சொல்லி அந்த ஜீவ சித்திரங்களை எழுதினார்கள்!

இந்த விஷயத்தை நாங்கள் தெரிந்து கொள்வதற்கு ஒத்தாசை செய்த பிறகு, எலெக்டிரிக் கரண்டும் வந்து விட்டது! பிறகு, அநேகமாது 'காண்டில் பவர்' உள்ள மின்சார விளக்கின் உதவியாலும், அனுமார் வால்போல் நீண்ட கம்பியின் உதவியாலும், சித்திரங்களைப் பார்த்தோம். சுற்றிச் சுற்றிப் பார்த்தோம். முதல் நம்பர் குகை, இரண்டாம் நம்பர் குகை, பதினாறும் நம்பர் குகை, பதினேழாம் நம்பர் குகை — இவற்றிலுள்ள ஆச்சரியமான சித்திரங்களையெல்லாம் பார்த்தோம். அப்போது ஆச்சரியமாகவும், அதிசயமாகவும், ஆனந்தமாகவுந்தான் இருந்தது. ஆனால், மேற்படி சித்திரங்களின் அதிசயமான அம்சங்களில் எதைச் சொல்வது, எதை விடுவது என்று நிர்மாணிப்பதில் உள்ள சிரமத்தை எண்ணுகையில், இப்போது அழுகையாக வருகிறது!

ஆமாம்; எதைச் சொல்கிறது? அந்த அதிசயச் சித்திரங்களின் பிரம்மாண்ட வடிவங்களைச் சொல்வதா! அந்த வடிவங்களின் முக பாவங்களைச் சொல்வதா? பெரிய பெரிய கதைகளை ஒரு சில காட்சிகளிலே சித்திரித்து விடும் மேதா விலாசத்தைச் சொல்வதா? நூற்றுக் கணக்கான மனிதர்களும் ஸ்திரீகளும் பிராணிகளும் வரும் சம்பவங்களைத் தத்ரூபமாய்க் காட்டும் கற்பனா சக்தியைச் சொல்வதா? தேவர்களையும் தேவிகளையும் ஒத்த ஆண் பெண் உருவங்களின் மேனி அழகைச் சொல்வதா? தெய்வீக சௌந்தரியம் பொருந்திய காமினிகளின் கண் அழகைச் சொல்வதா? அவர்களுடைய கை விரல்களின் அழகைச் சொல்வதா? அவர்கள் அணிந்திருக்கும் அற்புதக் கலைத் திறமை வாய்ந்த ஆபரணங்களின் அழகைச் சொல்வதா? இவ்வளவு சித்திரக் காட்சிகளிலும் ஊடுருவி நிற்கும் தார்மிக போதனையையும், ஆத்ம பாவசாந்திப் பிரகாசத்தையும் சொல்வதா?

இடையிடையே காணப்படும் நூதனமான காட்சிகளின் கவர்ச்சியைச் சொல்வதா? இப்படி எதை நினைத்தாலும் ஒரே திகைப்பாய்த்தா னிருக்கிறது.

எனினும், உதாரணத்துக்குச் சில சித்திரங்களைப் பார்ப்போம்:

## 5

நமது இதழ் சித்திரக்காரர் மணியம் பெயர்த்து எழுதியுள்ள அஜந்தா வர்ண சித்திரங்களில் ஏழாவது சித்திரத்தைப் பாருங்கள். சிரத்தைச் சுற்றிலும் ஞான ஒளி வட்டத்துடனே கருணாமூர்த்தியான பகவான் கௌதம புத்தர் திருக்கரத்தில் பிக்ஷா பாத்திரம் ஏந்திக்கொண்டு நிற்கிறார்.

அவருக்கு எதிரே வீட்டின் வாசலில் கையில் பிக்ஷையுடனே வந்து நிற்பவர்கள் யார் தெரியுமா?

பூர்வாசிரமத்தில் புத்த பெருமானின் பத்தினியா யிருந்த யசோதரையும், அவர்களுடைய செல்வக் குமாரன் ராகுலனுந்தான்!

கௌதம புத்தரின் அருள் கனிந்த கண்களையும் கருணை வடியும் திருமுகத்தையும் பாருங்கள்.

யசோதரையின் முகத்திலும் ராகுலன் முகத்திலும் பொங்கித் ததும்பும் சொல்ல முடியாத ஆர்வத்தையும் பக்தியையும் பாருங்கள்!

அவர்களுடைய கண்களுக்குப் புத்தர் பெருமான் எவ்வளவு பெரியவராய், பெருமை வாய்ந்தவராய், எளிதில் எட்ட முடியாதவராய்த் தோன்றுகிறார் என்பதையும் பாருங்கள்!

இந்தச் சித்திரம் அஜந்தாவிலுள்ள 17-ம் நம்பர் குகையில், கர்ப்பக் கிரஹத்தின் வெளிப்புறச் சுவரில் காணப்படுகிறது. அதில், யசோதரையும் ராகுலனும் சாதாரண மனித உருவத்தின் தத்ரூபமான அளவில் சித்திரிக்கப்பட்டிருக்கிறார்கள்.

அப்படி யென்றால், அந்த புத்தர் வடிவம் எவ்வளவு பெரிய பிரம்மாண்ட சித்திரமா யிருக்க வேண்டும் என்பதைச் சிந்தித்துப் பாருங்கள். அவ்வளவு





பெரிய வடிவத்தில் அவ்வளவு சிறந்த முக பாவத்தை வெளிப்படுத்தியிருக்கும் சித்திரத் திறமையை என்னவென்று சொல்வது?

புத்தருடைய பெருமையைத் தூக்கிக் காட்டுவதற்காக அவருடைய உருவத்தை அவ்வளவு பெரியதாகவும் ராகுலன் யசோதரை உருவங்களைச் சாதாரண அளவிலும் எழுதியிருக்கும் கற்பனா சக்தியையும் கொஞ்சம் கவனித்துப் பாருங்கள்.

உருவங்களின் அளவில் இவ்வளவு வித்தியாசம் இருந்தும், பார்க்கும்போது பொருத்தக் குறைவு எதுவும் தோன்றாமலிருப்பது என்ன விந்தை!

பகவான் புத்தரின் வாழ்க்கையில் வரும் இந்த ஒரு முக்கிய சம்பவத்தின் மூலம், அவருடைய புனிதமான தியாக வாழ்க்கை முழுவதுமே நமது மனக் கண்ணின் முன்னால் வரும்படி செய்திருப்பதையும் உன்னிப் பாருங்கள்.

இந்த ஒரு சித்திரத்தைப் பார்த்து அதிசயித்துக் கொண்டே அநேக நாட்கள் போக்கி விடலாம் போல் தோன்றுகிறதல்லவா?

அஜந்தா குகை மண்டபங்களுக்கும் அவற்றிலுள்ள சிற்ப சித்திர அதிசயங்களுக்கும் காரணமானவர்கள் முழுமையும் புத்த பிக்ஷுக்கள்தான். சைவம் வைஷ்ணவம் ஜைனம் முதலிய மதங்களின் கலப்பே இங்கே கிடையாது. ஆகவே, சிற்பங்கள், சித்திரங்கள் எல்லாம் புத்த மத சம்பந்தமானவையே. கௌதம புத்தரின் பூர்வ அவதாரங்களின் வரலாற்றைக் கூறும் எத்தனையோ கதைகள் இருக்கின்றன. ஹிந்து சமயக் கதைகள் பலவும் அவற்றில் கலந்திருக்கின்றன. உதாரணமாக, புறாவுக்காகச் சதையை அறுத்துக் கொடுத்த சிபிச் சக்கரவர்த்தியைப் புத்தரின் பூர்வ அவதாரங்களில் ஒருவராகச் சொல்லியிருக்கிறது. இம்மாதிரியான எத்தனையோ கதைகளை அஜந்தா குகைச் சுவர்களில் சித்திரித்திருக்கிறார்கள்.

புத்தரின் பூர்வ அவதாரங்களில் ஒருவராகிய அவலோகித போதி ஸத்துவரின் சித்திரம் அஜந்தாவில் உள்ள அபூர்வ சித்திரங்களில் ஒன்று. (அஜந்தா வர்ண சித்திரம் 3.) இந்தக் கம்பீர உருவத்தின் முகத்திலே ஜீவகளை ததும்புகிறது. கண்களின் கீழ் நோக்கானது இந்த தேவ புருஷர் பூலோக வாசிகளிடம் கொண்டிருக்கும் கருணையைக் குறிப்பிடுகிறது. அருகிலுள்ள தேவியைப் பாருங்கள். அவருடைய மேனி நிறம் கருமை என்பதையும் கவனியுங்கள். கருநிற மேனியுடைய மாதர்களும் திவ்ய சௌந்தரியவதிகளாயிருக்க முடியுமென்பது அஜந்தா சித்திரக்காரர்களின் அபிப்பிராயம் என்று அங்குள்ள அநேக சித்திரங்கள் மூலம் வெளியாகிறது.

அஜந்தா சித்திரக்காரர்கள் பௌத்த சமயக் கதைகளையே பெரும்பாலும் சித்திரித்தார்களாயினும், அப்படிச் சித்திரிக்கும்போது அந்தக் காலத்துப் பாரத நாட்டின் மக்கள் எவ்வளவு ஆனந்தமான வாழ்க்கையை நடத்தினார்கள் என்றும் காட்டியிருக்கிறார்கள். அவர்கள் எப்படிச் சங்கீதம், நடனம் ஆகிய கலைகளில் தேர்ந்திருந்தார்கள், அவற்றை எப்படியெல்லாம் அனுபவித்தார்கள், அந்தக் காலத்துப் புருஷர்களும் ஸ்திரீகளும் எவ்வாறெல்லாம் அழகழகான ஆடைகளை உடுத்திக் கொண்டார்கள், எவ்வளவு வேலைப்பாடான ஆபரணங்களை அணிந்து கொண்டார்கள், விருந்தாளிகளை எப்படியெல்லாம் வரவேற்று உபசரித்தார்கள், மொத்தத்தில் எவ்வளவு நாகரிகமான உயர் வாழ்க்கை நடத்தினார்கள் என்பதையெல்லாம் சித்திரித்துக் காட்டியிருக்கிறார்கள்.

“இராஜோபசாரம்” என்னும் படத்தைப் பாருங்கள். அதில் காசி தேசத்து ராஜா நாகலோகத்து ராஜாவை வரவேற்று உபசரிக்கும் காட்சி காணப்படுகிறது. அந்த ராஜாக்களும் ராணிகளும் ராஜ குமாரிகளும் எத்தகைய கோமளமான சரீரம் உடையவர்களாயிருக்கிறார்கள்? உபசரிக்கிறவர், உபசரிக்கப்படுகிறவர் இருவருடைய முகங்களிலும் தோன்றும் பரஸ்பர சிநேக பாவத்தை நோக்குங்கள். அவர்களுடைய சல்லாபத்தை மற்றப் பரிவாரங்கள் எவ்வளவு ஆவலோடு பார்த்துக்கொண்டிருக்கிறார்கள்? அவர்கள் தங்களை அலங்கரித்துக் கொண்டிருக்கும் நேர்த்திதான் என்ன?

ஆஹா! அந்தக் காலத்தில் பாரத நாட்டில் வாழ்ந்த நாரீமணிகள் தங்களை அழகு செய்து கொள்வதற்கு என்னென்ன முறைகளையெல்லாம் கையாண்டார்கள், தெரியுமா? இந்தக் காலத்து அமெரிக்க ஹாலிவுட் நட்சத்திரங்கள் எல்லாரும் அழகுக் கலையில் அவர்களிடம் பிச்சை வாங்க வேண்டும்! அம்மம்மா! அவர்கள் கண்ணாடியில் அழகு பார்த்துக் கொண்டதும், கண்ணுக்கு மை தீட்டிக் கொண்டதும், புருவத்தைத் திருத்தி அழகு செய்து கொண்டதும், கைவிரல் நகங்களை அழகு படுத்திக் கொண்டதும், கூந்தலைக் கொண்டை போட்டுக் கொண்டதும், தலையில் மலர் சூட்டிக் கொண்டதும், அம்மம்மா! ஒன்றும் சொல்வதற்கில்லை போங்கள்!





மேலே கூறிய அழகுக் கலைச் சிறப்புக்களை வர்ண சித்திரங்களில் பார்ப்பதோடு, இந்தக் கட்டுரையோடு வெளியாகியிருக்கும் சில ரேகைச் சித்திரங்களிலும் காணலாம்.

பாரத நாட்டில் அந்தக் காலத்தில் எல்லா ஸ்திரீ புருஷர்களும் இம்மாதிரி மேலான சௌகரிய வாழ்க்கையை நடத்தினார்கள் என்று சொல்லவில்லை. ஓரளவு சித்திரக்காரர்களின் கற்பனையும் சேர்ந்திருக்கலாம். ஆனால் அழகுக் கலைகள் விஸ்தாரமாக நாட்டில் பரவியிருந்தாலன்றி இம்மாதிரி யெல்லாம் அவர்கள் கற்பனை செய்திருக்க முடியாது. அத்தகைய அழகிய ஆனந்த வாழ்க்கையைக் கற்பனை செய்யக்கூடிய மகா சித்திரக் கலைஞர்கள் வாழ்ந்த நாட்டில், பொது ஜனங்களின் வாழ்க்கை அழகும் ஆனந்தமும் நிறைந்ததாய்த் தான் இருந்திருக்க வேண்டும் என்று முடிவு செய்யலாமல்லவா?

6

உணர்ச்சி பாவங்களை முகத்திலும், அவயவங்களின் அமைப்பிலுங்கூடக் கொண்டுவரக் கூடிய அதிசயத் திறமை அஜந்தா சித்திரக்காரர்களுக்கு இருந்ததில் வியப்பு ஒன்றுமில்லை. கல்லிலேயே உணர்ச்சி பாவங்களைக் காட்டக்கூடியவர்களுக்குச் சித்திரத்தில் காட்டுவது தானா பிரமாதம்? எத்தனையோ விதமான உணர்ச்சிகளை யெல்லாம் காட்டியிருக்கிறார்கள். உதாரணமாக, துக்கச் செய்தி கொண்டு வந்திருக்கும் அந்த மனிதனின் முக பாவத்தைப் பாருங்கள்; அவன் கையையும் பாருங்கள்; தடியை ஊன்றிய கை முகவாய்க் கட்டையைத் தாங்கி நிற்கும் அவனது தோற்றம் முழுவதும் பாருங்கள். "எல்லாம் போய்விட்டது; சர்வ நாசம் ஆகிவிட்டது!" என்னும் பாவம் எவ்வளவு ஸ்பஷ்டமாக வெளியாகி யிருக்கிறது?

மனிதர்களுடைய மன உணர்ச்சிகளை மட்டுந்தானா அஜந்தா சித்திரக்காரர்கள் முகத்திலும் தோற்றத்திலும் தெரியப் படுத்தி யிருக்கிறார்கள்?

பிராணிகளைக்கூடக் கண்களினாலும், சிற்றும் சிலைகளினாலும் பேசும்படி செய்திருக்கிறார்கள்! இதற்கு எத்தனையோ உதாரணங்கள் இருக்கின்றன. எல்லாவற்றிலும் சிறந்தது வெள்ளை யானையின் கதை. புத்த பகவான் பூர்வ ஜன்மம் ஒன்றில் இமாலயத்தில் வெள்ளை யானையாக அவதரித்திருந்தார். பிரயாகை ராஜாவின் ஆட்கள் அந்த வெள்ளை யானையைப் பிடித்துக் கொண்டு வந்து விட்டார்கள். யானை உணவு எடுக்காமலும் தண்ணீர் குடிக்காமலும் இருந்ததைக் கண்டு ராஜா அதை அவிழ்த்து விட்டு, அதன் பின்னால் தானும் குதிரை மேல் சென்றான்.

அந்த வெள்ளை யானையானது நதியோரச் சேரியில் இருந்த தன் வயதான தாய் தந்தையரை அடைந்து, அவர்களைத் தாமரை மலர்களால் அர்ச்சிக்கின்றது.

இந்தக் கதையைச் சித்திரிக்கும் யானைச் சித்திரங்களில், சோகம், கோபம், பரபரப்பு, அன்பு, ஆனந்தம், முதலிய எத்தனை வகை உணர்ச்சிகளைக் கொண்டு வந்திருக்கிறார்கள்? யானையின் சின்னஞ் சிறு கண்களிலே யல்லவா அவ்வளவு உணர்ச்சிகளையும் வெளியிடச் செய்திருக்கிறார்கள்? சிறைப்பட்டுச் செல்லும் யானையின் கண்ணிலே கோபம் கலந்த சோகமும், விடுதலையான யானையின் கண்ணில் மகிழ்ச்சி கலந்த பரபரப்பும், பூஜை செய்யும்போது பக்தியும் திருப்தியும் வெளியாகின்றன. தாய் யானை தன் தும்பிக்கையால் மகன் காலைத் தழுவிக் கொண்டிருப்பதைப் பாருங்கள். குருட்டுத் தந்தை யானை தும்பிக்கையினால் தடவுவதையும் கவனியுங்கள்!

இது மட்டுமல்ல. சித்திரங்களிலும் சிற்பங்களிலும் உருவங்களை நின்ற நிலையிலோ, உட்கார்ந்த நிலையிலோ, பலவிதச் செயல்கள் புரியும்படியும், பலவித உணர்ச்சிகளை வெளியிடும் படியும் செய்து விடலாம். ஆனால், மேலிருந்து மேலே பறந்து செல்வது போன்ற தோற்றத்தைப் பார்ப்பவர்கள் மனதில் உண்டு பண்ண முடியுமா? "முடியும்" என்று அஜந்தா சித்திரக்காரர்கள் நிரூபித்திருக்கிறார்கள். அதோ இந்திரனும் அவனுடைய பரிவாரங்களும் ககன மார்க்கத்தில் மேக மண்டலத்தை ஊடுருவிக் கொண்டு பறந்து மேலே மேலே மேலே செல்லும் காட்சியைத் தயவு செய்து கவனித்துப் பாருங்கள்!

கதைகளையும் சம்பவங்களையும் தேவர்களையும் தேவிகளையும் மன்னர்களையும் மல்லர்களையும் ராணிகளையும் சேடிகளையும் முனிவர்களையும் திருடர்களையும் பிராணிகளையும் பட்சிகளையும் எத்தனையோ விதமாகச் சித்திரித்தவர்கள், எவ்வளவோ விதமாகப் பேசச் செய்தவர்கள், வெறும் கோலம் போடுவதிலும் அளவற்ற கலைத் திறமை காட்டியிருக்கிறார்கள். பெரும்பாலும் சித்திர மண்டபங்களின் மேல் தளங்களைச் சித்திர விசித்திரமான புஷ்பக் கோலங்களினால் அலங்கரித்திருக்கிறார்கள். கோலமில்லாத ஒரு அங்குல இடத்தைக்கூடக் காண முடியாது. அந்தக் கோலங்களிலே தான் எத்தனை வித வர்ணங்கள்! அந்த வர்ணங்களுக்குத்தான் என்ன பள பளப்பு?

ஆம்; அஜந்தா சித்திர அதிசயங்களுக்குள்ளே மிக மிக அதிசயமான விஷயம் வர்ணங்களின் அதிசயந்தான்!

சிவப்பு, நீலம், பச்சை, மஞ்சள், ஊதா, கருப்பு, பொன்னிறம் ஆகிய இவ்வளவு வர்ணங்களும், நீட்டி ஆயிரத்தைந்நூறு வருஷத்துக்கும் பிறகும் நேற்றுத் தீட்டியவைபோல் மெருகுடன் விளங்குகின்றன!

மண்டபங்களின் வெளி முகப்புச் சுவர்களில், ஆயிரம் வருஷத்துக்கு மேலாக மழையிலும் காற்றிலும் வெய்யிலிலும் அடிபட்ட பிறகும் அந்த வர்ணங்கள் அழியாமல் இருக்கின்றன!

தயவு செய்து கவனியுங்கள். வர்ணங்கள்தான் அழியாமல் அன்று போலவே இன்றும் விளங்குகின்றனவே தவிர, சித்திரங்கள் எல்லாம் அப்படியே இருக்கவில்லை. பல இடங்களில் சிதைவு பட்டுத்தான் இருக்கின்றன. இதற்குக் காரணம் என்ன? வர்ணம் என்னவோ அழியா வர்ணந்தான். ஆனால் அந்த வர்ணம் எதன் மேல் தீட்டப்பட்டதோ, அந்தப் பாறைச் சுவர்மேல் பூசிய காரைத்தளமானது ஆங்காங்கு பெயர்ந்து விழுந்திருக்கிறது.

அஜந்தா சித்திரக்காரர்கள், பாறைச் சுவரில் எப்படிச் சித்திரம் எழுதினார்கள் என்பதைச் சிறிது தெரிந்து கொள்ள வேண்டும். முதலில், பாறைச் சுவரைச் சமமாகச் செய்து கொண்டார்கள். பிறகு, அம்மி பொளிவதுபோல் சுவரைப் பொளிந்தார்கள். அதற்குப் பிறகு மண்ணும் சாணமும் சுண்ணாம்பும் சேர்த்துச் சுவர்மேல் தடவினார்கள். பொளிந்த சுவரின்மேல் காரை நன்றாய்ப் பிடித்துக் கொண்டது. பிறகு அதைத் தேய்த்துத் தேய்த்து வழுவழுப்பாய்ச் செய்தார்கள். அதன்மேல் வர்ணம் குழைத்துத் தடவிச் சித்திரம் எழுதினார்கள்.

அப்படிச் சித்திரம் எழுதப் பெற்ற காரைப் பூச்சானது வெகு வெகு வயதாகி விட்ட காரணத்தினால் ஆங்காங்கு பெயர்ந்து விழுந்திருக்கிறது. ஆனால், காரை பெயர்ந்து விழாத இடங்களில் வர்ணப் பூச்சு மட்டும் பளபள வென்று அப்படியே இருக்கிறது.

இத்தகைய அழியாத சொகுசிவி வர்ணத்தின் இரகசியந்தான் என்ன?

இந்தக் காலத்தில் சேலைகளுக்கு ஏற்றும் சாயம் ஆறு மாதத்தில் பல்லை இளித்து விடுகிறதே? புஸ்தகத்தில் அச்சடிக்கும் வர்ணங்கள் வெகுசீக்கிரத்தில் மங்கி விடுகிறதே? அஜந்தா வர்ணம் மட்டும் அப்படியே அழியாமல் இருக்கும் இரகசியம் என்ன?

பல புத்தகங்களில் ஏதேதோ காரணம் ஊகித்து வெளியிட்டிருக்கிறார்கள். அவையெல்லாம் அவ்வளவு பொருத்தமாகத் தோன்றவில்லை. ஆனால், அஜந்தாவில் இப்போது சித்திரப் பாதுகாப்புக்காக நியமிக்கப் பட்டிருக்கும் அதிகாரி கூறிய காரணம் தான் பொருத்தமாய்த் தோன்றுகிறது. அது இதுதான்:

பச்சிலைகளைக் கொண்டோ, மிருகங்களைக் கொண்டோ, அல்லது இரசாயனச் சேர்க்கையினாலோ செய்யும் வர்ணம் எல்லாம் உரிய காலத்தில் மங்கத்தான் செய்யும். ஆனால், மலைப் பாறைகள் சில இயற்கையிலேயே வர்ணம் கொண்டவையாயிருக்கின்றன. அந்த வர்ணங்கள் மங்குவதுமில்லை; மறைவதுமில்லை. சிவப்பு நிறக் கல்லானது எத்தனை வருஷமானாலும் சிவப்பாய்த்தானிருக்கும். அஜந்தா சித்திரக்காரர்கள் அத்தகைய இயற்கை வர்ணப் பாறைகள் உள்ள இடங்களைக் கண்டு பிடித்து வர்ணக் கற்களைக் கொண்டு வந்தார்கள். அவற்றைப் பொடி செய்து ஏதோ ஒரு இரகசிய முறையினால் பச்சிலைச் சாற்றுடன் கலந்து விட்டபடி செய்தார்கள். அப்படிச் சேர்த்த வர்ணமானது இயற்கை வர்ணமானபடியால், எப்போதுமே அழியாமல் இருக்கிறது!

இதை எங்களுக்குத் தெரிவித்த அதிகாரி, அஜந்தா குகைச் சுவர்களில் இன்னும் பெயர்ந்து விழாத இடங்களையெல்லாம் ஒரு புது முறையினால் கெட்டிப் படுத்துவதில் ஈடுபட்டிருக்கிறார். அதற்காக ஏதோ ஒரு திராவகத்தைச் சுவர்களுக்கும் தூண்களுக்கும் 'இன்ஜெக்ட்' செய்து வருகிறார். இதாலியிலிருந்து இதற்காகத் தருவிக்கப்பட்ட ஒரு பிரசித்தி பெற்ற விஞ்ஞானி மேற்படி முறையைக் கற்றுக் கொடுத்து விட்டுப் போனாராம்.

இவ்வளவு தூரம் அஜந்தா சித்திரங்களைப் பாதுகாப்பதற்கு அரிய முயற்சி எடுத்துக் கொண்டிருக்கும் நைஜாம் சர்க்காரை மனமார வாழ்த்துகிறேன். அவர்கள் நன்றாயிருக்கட்டும்: க்ஷேமமாக நன்றாயிருக்கட்டும்.

## 7

அஜந்தா சித்திரங்களைப் பார்க்க ஆரம்பித்தபோது, பஞ்ச பாண்டவர்களைப் போல் நாங்கள் ஐந்து பேர் ஒரே கூட்டமாயிருந்தோம். அப்புறம், கட்டுக் கலைந்து, மூன்று ஆகி இரண்டு ஆகித் தனித் தனியே பிரிந்துவிட்டோம். மொத்தமுள்ள இருபத்தாறு குகைகளில் யார் எந்தக் குகையில் இருக்கிறார்கள் என்பது தெரியாமல் போய் விட்டது. முக்கியமாக, நமது சித்திரக்



காரர் "மணியம்" காணாதது கண்டவரைப் போல் கையில் நோட்டையும் பென்ஸிலையும் ஒளித்து ஒளித்து வைத்துக் கொண்டு, அங்கு மிங்கும் ஓடிக் கொண்டிருந்தார். இரண்டாம் குகையில் ஒரு பெண்ணின் சித்திரத்தைப்பார்த்து அதன் கண்ணை எழுதிக்கொள்வார். பிறகு, பதினாறாம் நம்பர் குகைக்கு ஓடோடியும் போய் அங்கேயுள்ள குரங்கின் சித்திரத்தைப் பார்த்து ஒரு மூக்கை எழுதிக்கொள்வார்!

டாக்டர் எல்வின் ஆர். டங்கன் மட்டும் வேடிக்கையாக ஒரு காரியம் செய்தார். "நான் இந்த அஜந்தா சித்திரங்களில் உள்ள நட்சத்திரங்களை வைத்துக் கொண்டு ஹாலிவுட்டில் ஒரு பத்து லட்சம் டாலர் படம் எடுப்பதாகக் கனவு காணப்போகிறேன். அதற்காக இந்தக் குளிர்ந்த மண்டபத்தில் அரை மணி நேரம் தூங்கித்தான் ஆக வேண்டும்" என்று சொல்லி விட்டுப் படுத்தவர், அடுத்த நிமிஷமே தூங்கிப் போய் விட்டார்! ஆகையால் அவர் இருக்கும் இடம் மட்டும் நிச்சயமா யிருந்தது. மற்றவர்கள் திசைக்கு ஒரு பக்கமாக அலைந்து திரிந்து கொண்டிருந்தார்கள்.

கடைசியாக, திரும்பிப் போக வேண்டிய நேரம் நெருங்கவே, ஒருவரை யொருவர் கஷ்டப்பட்டுத் தேடிப் பிடிப்பதற்குள் பிராணனுக்கு வந்து விட்டது. எல்லாரையும் திரட்டிச் சேர்க்க வேண்டிய பொறுப்பு எங்களில் எல்லாம் இளையவரான செஞ்சி அனந்த நாராயணனுக்கு ஏற்பட்டது. அஜந்தா அதிசயங்களில் மூழ்கி உலகத்தை மறந்திருந்த எங்களுக்கு "எல்லாரும் வந்து சேர்ந்து விட்டோமா?" என்பதே நிச்சயப்படவில்லை. எதற்கும் ஒரு புகைப்படம் எடுத்துக் கொண்டால் நல்லது என்று தீர்மானித்தோம். ஊருக்குப் போன பிறகாவது புகைப் படத்தைப் பார்த்துச் சந்தேகம் தீரலா மல்லவா?

அதற்கு ஒரு இடையூறு ஏற்பட்டது. ஐந்து பேரில் ஒருவர் காமிராவைக் கையாண்டால் தானே மற்றவர்கள் படத்தில் விழுவார்கள்? கெட்டிக்கார போட்டோக்காரரான ஸ்ரீ நாகராஜ ராவ் அதற்கு ஒரு யுக்தி செய்தார். எங்களை நால்வரையும் பாறை விளிம்பில் உட்காரச் செய்து விட்டுச் சற்றுத் தூரத்தில் காமிராவை நாட்டினார். அதன் இயந்திரத்தை முடுக்கி விட்டு விட்டு, ஓட்டமாக ஓடி வந்து எங்களுக்கு மத்தியில் காலியாக விட்டிருந்த இடத்தில் உட்கார்ந்தார். அவர் உட்கார்ந்ததும் காமிராவில் 'கிளிக்' என்ற சத்தம் கேட்டது.

"விழுந்து விட்டோம்!" என்றார்.

படத்தில் விழுந்து விட்டோமோ, இல்லையோ, பின்னாலிருந்த பாதாள நதியில் நல்ல வேளையாய் விழவில்லை!

அவ்வளவுதான்; அஜந்தாவின் அதிசய சொப்பன உலகத்திலிருந்து கிளம்ப மனமின்றிக் கிளம்பினோம். அந்தக் கனவு லோகத்தில் ஜீவ சித்திரங்களாக வாழ்ந்த சௌந்தரிய வடிவமான தேவர் தேவியர்களிடமிருந்தும், மனுஷர் மனுஷிகளிடமிருந்தும் விருப்பமின்றி விடை பெற்றுக் கொண்டு ஊருக்குப் புறப்பட்டோம்.

## 8

சாயங்காலம் அவுரங்காபாத் சாலையில் கார் திரும்பிப் போய்க் கொண்டிருந்த போது உயிரைக் கையிலே பிடித்துக் கொண்டுதான் போனோம். ஐந்தாறு இடங்களில் டயர் கிழிந்து கார் நின்று விட்டது. ஒரு 'ஸ்டெப்னி' இல்லாமற் போன படியால், கிழிந்த டயரை ரிப்பேர் செய்து போட்டுக் கொண்டுதான் கிளம்ப வேண்டி யிருந்தது. இதை யெல்லாம், எங்களைப் பழி வாங்குவதற்காக வேண்டுமென்றே அந்த டிரைவர் மகானுபாவன் செய்த வேலை யென்றே கருதினோம். நல்ல வேளையாக, பாதி வழி போன பிறகு ஒரு போலீஸ்காரன், காணாமற் போன டயரைச் சாலையில் கிடந்ததென்று எடுத்து வைத்திருந்து கொடுத்தான். அவன் மகாராஜனா யிருக்கட்டும்! அடுத்த ஜன்மத்தில் அவன் ராஜாவாகப் பிறக்கட்டும்! அவனால்தான் அவுரங்காபாத்துக்கு நாங்கள் பத்திரமாய்ப் போய்ச் சேர்ந்து அன்றிரவு ரயிலைப் பிடிக்கவும் முடிந்தது.

அஜந்தாவில் சித்திரக்காரர் "மணியம்" எங்களுக்குக் கொடுத்த தொந்தரவை முன்னிட்டு, அவரையும் செஞ்சி அனந்த நாராயணனையும் அவுரங்காபாத்திலேயே விட்டுவிட்டு வந்து விட்டோம். அவர்களும் எல்லோராவிலும் அஜந்தாவிலும் ஒரு வாரம் அலைந்து திரிந்து விட்டுப் பத்திரமாகத் திரும்பி வந்து சேர்ந்தார்கள்.

அவர்களை அங்கே விட்டிருந்ததின் பலனைத்தான் இந்தத் தீபாவளி மலரெங்கும் நேயர்கள் பார்க்கிறீர்கள்!









# சமூகமும் சாஸ்திரமும்

மானிட சமூகத்தின் சகல தேவைகளையும் நவீன விஞ்ஞான வழிகளால் மட்டும் பூர்த்தி செய்விக்க முடியாது. இந்தியாவின் பல்லாயிரக் கணக்கான ஜனத் தொகையில் ஏழ்மைத்தனம் மிகவும் வெளிப்படையானாலும் அதைப் பொருளாதார சாஸ்திரத்தினால் மட்டும் நிவர்த்தி செய்து சுக மடையச் செய்விக்க முடியாது.

நூற்றுக் கணக்கான வருஷங்களுக்கு முன் எழுந்த சகல சமூகப் பிரச்னைகளையும் நம் முன்னோர்கள், நமது புராதனக் கல்வி பீடங்களிலுள்ள சாஸ்திரங்களில் பொதிந்து கிடக்கும் அநுபவ ஞானத்தினால் சுலபமாய்த் தீர்த்தார்கள். அந்த ஞானத்துடன் நவீன இயந்திர சாதனங்களைக் கொண்டு பொருள்களை உற்பத்தி செய்யவும், அவைகளை விநியோகம் செய்யவும் வேண்டிய போதனா முறைகளைக் கற்பதில் இப்போது இந்தியா ஈடுபட்டு ஒருமுகப் படல் வேண்டும்.

தொழில் துறையிலும் வியாபாரத் துறையிலும் மேனாட்டுச் சாதனங்களுடன், இந்தியாவுக்கே தனிப் பெரும் சிறப்பான புராதன ஆராய்ச்சி அறிவையும் உபயோகித்து பிர்லா பிரதர்ஸ் சிறந்து முன்னணியில் விளங்குகிறார்கள்.

## பிர்லா பிரதர்ஸ் லிமிடெட்

8, ராயல் எக்ஸ்சேன்ஜ் ப்ளேஸ், கல்கத்தா

மானேஜிங் ஏஜெண்டுகள்:

★ கேசோராம் காட்டன் மில்ஸ் லிமிடெட் ★ ஜியாஜிராவ் காட்டன் மில்ஸ் லிமிடெட் ★ பிர்லா காட்டன் ஸ்பின்னிங் & வீவிங் மில்ஸ் லிமிடெட் ★ சட்லெஜ் காட்டன் மில்ஸ் லிமிடெட் ★ ஓரியண்ட் பேப்பர் மில்ஸ் லிமிடெட் ★ பிர்லா ஜூட் மானுபாக்சரிங் கம்பெனி லிமிடெட் ★ இந்தியன் ஷிப்பிங் கம்பெனி லிமிடெட் ★ ஹிந்துஸ்தான் மோட்டார்ஸ் லிமிடெட் ★ ஹிண்ட் சைக்கிள்ஸ் லிமிடெட் ★ டெக்ஸ்டைல் மெஷினரி கார்பொரேஷன் லிமிடெட் ★ மில்ஸ் ஸ்டோர்ஸ் சப்ளையிங் கம்பெனி லிமிடெட் ★ இந்தியன் பிளைவுட்ஸ் லிமிடெட். ★ ஹிண்ட் கார் கம்பெனி லிமிடெட்.

காட்டன் ஏஜென்ட்ஸ் லிமிடெட் —
மானேஜிங் ஏஜெண்டுகள்:

★ அப்பர் காஞ்சஸ் ஷுகர் மில்ஸ் லிமிடெட் ★ பாரத் ஷுகர் மில்ஸ் லிமிடெட் ★ நியூ இந்தியா ஷுகர் மில்ஸ் லிமிடெட் ★ நியூ சுதேசி ஷுகர் மில்ஸ் லிமிடெட் ★ ஓத் ஷுகர் மில்ஸ் லிமிடெட் ★ பிர்லா லாபரட்டரீஸ் (புரொப்ரைட்டர்கள்: அப்பர் காஞ்சஸ் ஷுகர் மில்ஸ் லிமிடெட்.)

இன்ஷ்யூரன்ஸ்:

நியூ ஏஷியாடிக் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்., ரூபி ஜெனரல் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்.

# எங்கள் சங்கு மார்க்கு

கைத்தறி
லுங்கி -
ஷர்ட்டிங் -
&
கைகுட்டைகள்






நீடித்து
உழைக்கும்

எல்லா
வியாபாரிகளிடமும்
கிடைக்கும்

P.S.M.Co.

## மதராஸ் பளயகாட் கம்பெனி லிமிடெட்.

31, அரண்மனைகாரத் தெரு, மதராஸ்.

218, கீழ மாரட் வீதி, மதுரை.

பிராஞ்சுகள் கொழும்பு, கண்டி.

# பேசப் போகிறார்!

பகீரதன்

★

"இந்திய விவசாயி" என்ற ஆங்கிலத் தினசரியின் ஆசிரியர் ஆல்பர்ட் லிங்கனைப் பற்றி அறியாதவர் யாரும் இருக்க முடியாது. சுமார் இருபது வருஷங்களுக்கு முன் ஆத்மலிங்க ஐயராக இருந்த அவர், ஐரோப்பாவுக்குப் படிக்கச் சென்றதின் பயனாக ஆல்பர்ட் லிங்கனாக மாறியிருந்தார். அத்துடன் அவர் நின்று விடவில்லை. அங்கிருந்து ஒரு அழகான பாரிஸ் மனைவியைப் பாணிக்கிரகணம் செய்து கொண்டு பாரத நாட்டில் காலை வைத்தார்.

அன்றிரவு அவருக்குத் தூக்கமே பிடிக்கவில்லை. தன்னந் தனியாகத் தன் அறையில் உலாவிக் கொண்டிருந்த அவருக்கு, அரேபியாவிலிருந்து வந்திருந்த அப்துல்லா என்ற பையன் அடிக்கொருதரம் ஆஸ்ட்ரேலியன் மதுவை அழகான லண்டன் கோப்பையில் ஊற்றிக் கொடுத்துக்கொண்டிருந்தான். அந்த மதுவைச் சாப்பிடுவதும் அப்படியும் இப்படியும் உலாவுவதுமாக இருந்த அவர், "சகோதரர்களே! சகோதரிகளே! உங்களுக்கு மானமில்லையா? ஈனமில்லையா? ரோஷமில்லையா? உங்கள் உடம்பில் என்ன ரத்தம் ஓடுகிறது? அது ஆங்கில ரத்தமா? இந்திய ரத்தமா? அப்படி உங்கள் உடம்பில் ஓடிக் கொண்டிருப்பது இந்திய ரத்தமானால், நீங்கள் ஏன் இந்தியக் கைத்தொழிலை ஆதரிக்கக் கூடாது?" என்று வீராவேசமாகப் பேச ஆரம்பித்து விட்டார்.

பக்கத்து அறையிலிருந்த அவர் பாரிஸ் மனைவி ஓடி வந்து அவசரம் அவசரமாக அவரை அருகிலிருந்த லண்டன் சுழல் நாற்காலியில் உட்கார வைத்து 'விர்' என்று சுற்றி விட்டாள். அடுத்த நிமிஷத்தில் அவள் பரபரப்புடன் அங்கிருந்த ஜெர்மன் விசிறியை கடைசி கரையில் தள்ளி விட்டு "இப்படிக் கத்தினால் தொண்டை என்னத்துக்கு ஆகும்?" என்று சொல்லிக் கொண்டே ஆஸ்திரேலியா ஷர்பத்தை எடுத்துக் கோப்பையில் ஊற்றி, அதில் ஒரு 'ஸ்ட்ரா'வை எடுத்துப் போட்டாள். உடனே ஆல்பர்ட் லிங்கன் அந்த 'ஸ்ட்ரா'வில் வாயை வைத்துக் கோப்பையைக் காலி செய்தார். அதற்குள் அவர் மனைவி ரேடியோவைத் திருப்பி வைத்து அதிலிருந்து வந்த ஆங்கில சங்கீதத்தைக் கேட்டுக் கொண்டே அவரைப் படுத்துக் கொள்ளச் சொன்னாள். அடுத்த நிமிஷத்தில் அமெரிக்கன் ஸ்பிரிங் கட்டில் அவர் அசையும் போதெல்லாம் அவரைத் தூக்கிவிட்டு ஆனந்த நித்திரை கொள்ளச் செய்தது.

மறு நாள் காலை ஸ்காட்லண்ட் அலாரம் கடிகாரம் 'லபோ லபோ' என்று அடித்துக் கொள்ளவே அவசரம் அவசரமாய் எழுந்தார் ஆல்பர்ட் லிங்கன். 'கோலினோஸ்' பல் பசையைக் கொஞ்சம் சைனா பிரஷில் பிழிந்து கொண்டு பல் தேய்த்துக் கொண்டே குளிக்கும் அறைக்குச் சென்றார். அங்கே 'பாரிஸ் பாத் ஸோப்'புக்குப் பதில் மைசூர் சந்தன சோப் இருக்கவே ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. உடனே அதை வாங்கிக் கொண்டு வந்த வேலைக்காரனை விழுங்கி விடுபவர்போல் பார்த்தார். விஷயத்தைத் தெரிந்து கொண்ட வேலைக்காரன் "இந்தச் சண்டை காலத்தில் அதெல்லாம் எங்கே கிடைக்குது சாமி?" என்றான்.

இப்படிக் கேட்டதற்காக அடுத்த நிமிஷத்தில் அவன் வெளியே தள்ளப் பட்டான். அடுத்த கணத்தில் வேறொரு ஆளை அனுப்பி 'பாரிஸ் பாத் ஸோப்'பை வாங்கி வரச் சொல்லிக் குளித்தார் அவர்.

மேஜைமீது தட்டில் வைத்திருந்த ஆகாரத்தைக் கையினால் தொடாமல் கரண்டியினாலேயே ஒரு கை பார்த்தார்.

ஆகாரம் உள்ளே சென்றதும், அவர் மூளை 'விர், விர்' என்று வேலை செய்ய ஆரம்பித்தது. அமெரிக்கன் பேனாவினால் ஜப்பான் மையைக் கொண்டு ஆர்ஜன்டைன் கடுதாசியில் "இந்தியக் கைத்தொழில்களை இந்தியர்கள் ஆதரிக்க வேண்டியது அவசியம்" என்று நீண்டதொரு கட்டுரை எழுதி முடித்தார்.

அன்று சாயந்திரம் வாசலில் ஒரு கார் வந்து நின்றது. ஆல்பர்ட் காரில் ஏறினார். கதவு 'டபார்' என்று சாத்தப்பட்டது.

கார் கிளம்பப் போகும் சமயத்தில் "வரட்டுமா?" என்று தம்மை வழிவிட வந்த பாரிஸ் மனைவியைப் பார்த்துக் கேட்டார் ஆல்பர்ட். அவள் கண்களைச் சிமிட்டி 'களுக்' கென்று சிரித்தாள்.

இந்தச் சமயத்தில் எப்படியோ லிங்கனைப் பார்த்து விட்ட சில அப்பாவிகள், "ஆல்பர்ட் லிங்கனுக்கு ஜே!" என்று ஜெய கோஷம் செய்தனர்!

அகில இந்திய ரேடியோவில் "சுதேசிக் கைத்தொழி"லைப் பற்றிப் பிரசங்கம் செய்யப் புறப்பட்ட ஆல்பர்ட் லிங்கனின் கார், அவர்கள் கண்களில் மண்ணை வாரிப் போட்டுக் கொண்டே கிளம்பிற்று!



# பெயர்



# என்ன வைக்கலாம்?

[ வ ர த ன் ]

சில வருஷங்களுக்கு முன் எங்கள் ஊரில் ஒரு வயது வந்த பெண் கலியாணமாகாமல் தவித்துக் கொண்டிருந்தாள். அதற்குக் காரணம் அவள் பெயரே. 'சப்பக்கா' என்று அவளை எல்லோரும் அழைத்து வந்தனர். பெரும்பாலர் 'இட்டிலிச் சப்பி' என்றும் அழைத்தனர். இப்பெயர் அவளுக்கு எப்படி வந்ததென்று எனக்குத் தெரியாது. பெயர் மாத்திரம் மிகப் பிரசித்தமாய் விட்டது. இதனால் அவளை நேருக்கு நேர் பாராத இளைஞர்களைவரும் பெயரைக் கேட்டு மணக்க மறுத்தனர். கடைசியில் அவளுக்குக் கலியாணமாயிற்று. இப்பொழுது அவள் பட்டணத்தில் வசித்து வருகிறாள்.

சமீபத்தில் ஒரு நாள் நான் பட்டணத்துக்குப் போயிருந்தேன். அங்கு ஒரு சிநேகிதரின் வீட்டில் ஜாகை வைத்துக் கொண்டேன். அந்த வீட்டின் ஒரு பக்கத்தில் வேறொரு குடும்பம் வசிக்கிறது. அந்த வீட்டு மாமியின் பெயர் 'மங்களம்' என்று தற்செயலாய் நான் கேள்விப்பட்டேன். அவளுடைய குழந்தையை என் சிநேகிதரின் பையன் ரவி, "இவள்தான் மங்களம் மாமியின் பொண்ணு" என்று எனக்கு அறிமுகப் படுத்தினான். அந்தச் சமயத்தில், மங்கள மாமியே குழந்தையைத் தேடிக் கொண்டு வந்தாள். இதில் விசேஷம் என்னவென்றால் அவள் மங்கள மாமியே இல்லை; பழைய சப்பக்காதான்!

சப்பக்காவுக்கும் மங்களத்துக்கும் எவ்வளவு தூரம்! இது பெயர் மாறும் காலமாயிருக்கிறது. பழைய பெயர்கள் மங்குகின்றன; புதிய பெயர்கள் ஜொலிக்கின்றன. "ரோஜாப் பூவிற்கு எந்தப் பெயர் வைத்தாலும் அது மணக்காதா?" என்ற காலம் மலையேறி விட்டது. "மலர் மணக்கத்தான் செய்யும், சுவாமி! ஆனால் ரோஜா என்ற பெயரே மணக்கிறதே!" என்று சொல்லுகிறார்கள் ஜனங்கள்.

"தேன் குழல்" என்ற தின்பண்டத்தை விரும்பாத தமிழரே இருக்க மாட்டார்கள். அதன் பெயரைக் கேட்கும் பொழுதே நமக்கு நாக்கு ஊறுவது இயல்பு. ஆனால் அதைத் "தேங்குழல்" என்று சொன்னால் நன்றாயிருக்குமோ?

இன்னும் பாருங்கள். தேன்குழலைச் சக்கிலி யென்று அழைத்தால் நமக்கு எவ்வளவு அருவருப்பாயிருக்கிறது.



இட்டிலிச் சப்பி

மராட்டியில் அதற்கு அதுதான் பெயர்! நெரிஞ்சிக்காடு என்று ஒரு ஊரின் பெயரிருந்தால் அவ்வூர் எப்பொழுதாவது முன்னுக்கு வருமா? ஆனால் நமது தேசத்தின் முதன்மையான க்ஷேத்திரங்களில் ஒன்றான பிருந்தாவனத்துக்கு நெரிஞ்சிக்காடென்பதுபொருள்.

தமிழர்களுக்கு நகைச்சுவை அதிகம். அப்படியே நூதனத் திறமையும் அதிகம். அத் திறமையை அவர்கள் சில சாமான்யமான துறைகளில் அனுபவித்து வருகிறார்கள். புனை பெயர்கள் வைப்பதில் அத்திறமை அதிகமாய்ச் சோபிக்கிறது. பள்ளிப் பிள்ளைகள் உபாத்தியாயர்களுக்குப் பரிகாசப் பெயர்கள் வைப்பதைப்போல், தமிழர்களும் தங்கள் சுற்றத்தார்களுக்கு வசைப் பெயர்கள் வைப்பதில் களிப்புறுகின்றனர். எனவே நமது கிராமங்களில் ஷோக் சுந்தரம், வாடன் ராமு, புளுகுண்ணி ரங்கன், திருவாழுத்தான், சோவர் ஜானகி,—இவைபோன்ற பெயர்கள் சகஜமாய் விட்டன.

நாமே நமது பெயர்களில் ஒருவித அதிருப்தி அடைந்து அவைகளைச் சில வழிகளில் மாற்றுகிறோம். இத்தகைய மாறாட்டம் வெகுவாய்ப் பெயர்களைச் சுருக்குவதில் பலிக்கிறது. சுப்பிரமணியன் என்ற பெயர் எத்தனை விதங்களில் சுருங்குமென்று கணக்கிட்டுப் பார்ப்போம். சுப்பையா என்று ஒருவிதம், சுப்பு என்று ஒருவிதம், சுப்பனென்று ஒருவிதம், சுப்பாமணி என்று ஒருவிதம், சுப்பிணி என்று ஒருவிதம், மணி என்று ஒருவிதம். இப்படியே ஸ்ரீவாஸன் என்ற பெயருடையவர்களை சீனுவென்றும், சீமா என்றும், சீமாச்சுவென்றும், சீச்சுவென்றும், அழைப்பது வழக்கமாய் விட்டது. இதற்குக் காரணம், சென்ற தலைமுறைகளில் பெயர்கள் மிகவும் நீண்டவையாயிருந்ததே. ஸ்ரீராம சுப்பிரமணியன், ஸ்ரீவாஸ ராஜகோபாலன், பன்னிருகைப் பெருமாள், ஒரு சொல்

வாசகசாலகம், சேது லோசாமலிங்கம் என்ற பெயர்கள் எல்லாம் அழகாய்த் தானிருக்கின்றன. ஆனால், நீண்டு விரிந்து விசாலமாயிருக்கும் இப்பெயர்களை, சுருக்கெழுத்தும், துரிதமும் கூடிய இக்காலத்தில், சிறுவர்கள் வெறுக்கிறார்கள். அவைகளுக்கு நேர் மாறாகச் சட்டென்று சொல்லிப் பட்டென்று எழுதக் கூடிய சிறிய பெயர்களையே அவர்கள் விரும்புகிறார்கள்.

தமிழ்ப் பெயர்களை ஆங்கிலத்தில் எழுதி விட்டு அவைகளை ஆங்கில முறையில் உச்சரிப்பதில் உண்டாகும் ஆபத்துக்களைப்பற்றி நீண்ட பெயர்ப் பேர்வழிகளுக்குத் தெரியும். சங்கர நாராயணு என்ற ஒரு சிநேகிதரின் பெயரை எங்கள் ஆங்கில ஆசிரியர் [ஆங்கிலேயர்] சங்கரன் அரையணு வென்று அழுத்தம் திருத்தமாய்ப் படித்தார். எனவே என் சிநேகிதருக்கு 'அரையணு' என்ற பட்டப் பெயர் வந்தது.

நமது பெரியோர்கள் கடவுள் நாமங்களைக் குழந்தைகளுக்கிட்டு, குழந்தைகளுக்கு அப்பெயர்களில் ஒலிக்கும் தெய்வீகம் சேரவேண்டுமென்று நினைத்தார்கள். நடப்பில் அந்த நாமங்களின் தெய்வீகம்தான் குன்றிவிட்டதே தவிர அவைகளைப் பெற்றவர்கள் பயனடையவில்லை. கிருஷ்ணா என்று கூப்பிட்டால் யாராவது கிருஷ்ண பரமாத்மாவை நினைக்கிறார்களா? கேவலம் மனிதனைப் பற்றித்தான் நினைக்கிறார்கள். அதற்காகத்தான் ஜனங்கள் அசல் கிருஷ்ணனைப் பற்றி நினைக்கும் பொழுது "கிருஷ்ணா! கிருஷ்ணா!" என்று சொல்கிறார்கள் போலும்.

நாராயணு என்ற பெயரின் துரதிர்ஷ்டத்தைப் பற்றியோ எல்லோருக்கும் தெரியும். பட்டணத்துச் செட்டி வீதிகளில் 'நாராயணு' என்று கூப்பிட்டால் அதற்கு ஒரே அர்த்தம். அதாவது நாராயணன் அவ்விடத்தில் ஒரு ஜீவனைத் தன் பாதாரவிந்தத்தில் சேர்த்துக் கொண்டாகி விட்டது என்பதே.

புதுப் பெயர்கள் வேண்டும். அவைகளும் நாகரிகப் பெயர்களாயிருக்க வேண்டுமென்பது பல பெண்மணிகளின் கருத்து. ஆனால் நாகரிகப் பெயர்கள் யாவை என்பது ஒரு முக்கியமான கேள்வி. வடஇந்தியப் பெயர்கள், அவைகளிலும் விசேஷமாய் வங்காளிப் பெயர்கள் இக்காலத்துத் தமிழ் நாட்டு நாகரிகத்தை மயக்கியிருக்கின்றன.

சில வருஷங்களுக்குமுன் தமிழ் நாவல் எழுதும் பெண்மணிகளும், அவர்களுக்கு எவ்விதத்திலும் சளைக்காத ஆண்மணிகளும் அநேக அழகான பெயர்த் தொடர்களைப் பிரபலப் படுத்தியிருந்தனர். மோஹனாங்கி, பத்மலோசனன், வீரகேசரி, வனஜாக்ஷி, மீனலோசனி இவை போன்ற ஜிலேபிப் பெயர்களை அவர்கள் புத்தகங்களில் காணலாம்.

நமது புராணங்களில் நாம் கையாளக் கூடிய இன்னும் எத்தனையோ பெயர்கள் இருக்கின்றன. சீதையும் ருக்மணியும் அழகான பெயர்களே. ஆனால், கௌஸல்யாவிற்கும், ஸாவித்ரிக்கும், அநஸூயாவிற்கும், சத்தியபாமாவிற்கும் என்ன குறைச்சல்? பஞ்சபாண்டவர்கள் பெயர்களை நாம் ஏன் வைத்துக் கொள்ளக் கூடாது? ஏன் இரட்டைப் பிள்ளைகளெல்லோரையும் ராம லக்ஷ்மணர்களென்று அழைக்க வேண்டும்? நகுல சகாதேவனென்றோ, லவ குசனென்றோ அழைத்தால் பொருத்தமாயிராதா? ஊர்மிளா என்ற சிறந்த பெயரை எத்தனை தமிழ்ப் பெண்கள் பெற்றிருக்கிறார்கள்? அர்ஜுனனும் சுபத்திரையுமில்லாமல் அபிமன்யு எப்படிப் பிறப்பான்? மேலும் நக்ஷத்திரங்களில் சிலவற்றின் பெயர்கள் காதிற்கு எவ்வளவு இனிமையாயிருக்கின்றன! ரோஹிணி, ஆருத்ரா, அனுராதா, ரேவதி இவை போன்ற பெயர்கள், சீதாலக்ஷ்மி, திரிபுரசுந்தரி என்றிருக்கும் பெயர்களைவிட அழகாயில்லையா? மேலும் நம் சரித்திரப் பெயர்களை ஏன் நாம் வைத்துக்கொள்ளக் கூடாது? சித்தார்த்தன், கௌதமன், புருஷோத்தமன், அசோகன், விக்கிரமாதித்தன், சிவாஜி என்ற சரித்திரப் பெயர்களென்ன? நளன், புரூரவன், துஷ்யந்தன், பரீக்ஷித், ஹரிச்சந்திரன் இவை போன்ற காவியப் பெயர்கள் என்ன? இவைகளை ஏன் தமிழுலகம் தவிர்த்து விட்டது?

நாம் வைக்கும் பெயர்கள் ஏளனப் பெயர்களாயிருக்கக் கூடாது. பிச்சை, குப்பை, மூக்கன், வையையன் போன்ற பெயர்களைப் பழங்காலத்தில் திருஷ்டி பரிகாரமாக வைத்தார்களாம்.

எங்கள் நிலங்களை மேல் பார்க்கும் பண்ணைகள் இருவர். ஒருவன் பெயர் காக்கையன். மற்றவன் பெயர் மண்திண்ணி. அவர்கள் மாமன் பெயர் தொப்புளான்.

நான் செல்லிக்குப்பம் ரயில்வே ஸ்டேஷனில் ஒருநாள் இறங்கினேன். அங்கு ஒரு கூலியாள் என் சாமானைத் தூக்கிக்கொண்டு விரைவாய்ச் சென்றான். அவன் பெயர் எலிக்குஞ்சு! இது நிஜம். வேண்டுமானால் நீங்களே போய்க் கேட்டுப் பாருங்கள்.



ரேங்கள் டிரில் வாத்தியாரிடம் அவர்கள் பட்ட அவஸ்தையை நினைக்க ......

## அபாய அறிவிப்பு!




சென்னையில் அபாய எச்சரிக்கை செய்து கொண்டுவரும் போலீஸ் வண்டிகள் தாங்கள் அபாயத்தில் மாட்டிக் கொள்ளாம லிருக்கும்படி நம் சித்திரக்காரர் எச்சரிக்கை செய்கிறார்.

வெகு சிறு பிராயத்தில் நான் படித்துவந்த வகுப்பு ஒன்றில் அர்த்தநாரீசுவரன், ஆபத்தோத்தாரணன், வியாக்கிரபாதன் என்று மூவர் இருந்தனர். அவர்கள் எங்கள் டிரில் வாத்தியாரிடம் பட்டுவந்த அவஸ்தையை நினைக்கவே எனக்கு உடம்பு நடுக்க மெடுக்கிறது. அவர்களை மும்மூர்த்திகள் என்று ஒதுக்கி வைத்து வேண்டுமென்றே அவர் அடிப்பார். அவர்களுடைய பெயர்களை உச்சரிக்க முடியாத பொருமையே அவருடைய வெறுப்புக்குக் காரணம்.

சுயமரியாதைக் கட்சியை உங்களுக்குத் தெரியும். பாஷையும் பெயரும் சம்பந்தப்பட்ட வரையில் இக்கட்சியினர் தமிழிலிருந்து வடமொழியை முற்றிலும் தவிர்த்து விடுவதென்று முனைந்திருக்கிறார்கள். இவர்களின் ராஜீயக் கொள்கைகளைப் பற்றி நான் ஒன்றும் சொல்லவில்லை. ஆனால் அவர்கள் தமிழ்ப் பாஷையின் போலி நண்பர்கள் என்று நான் உறுதியாகச் சொல்லுவேன்.

இவர்கள் பழங்காலத்திலிருந்து தமிழுடன் தமிழாய்ச் சேர்ந்த வடமொழிப் பெயர்களை மாற்றிச் சுத்த தமிழ்ப்படுத்துகின்றனர்.

“அருணாசலம்” என்ற வார்த்தையில் என்ன குற்ற மிருக்கிறது? தவிர அதைக் “காலை மலை” என்று சொல்லிவிட்டால் தமிழுக்கு என்ன லாபம் வந்து விடும்? “கல்யாண சுந்தரம்” என்ற பெயரை “மண அழகு” என்று மொழிபெயர்த்தால் நன்றாயிருக்கிறதா? இத்தகைய பெயர் மொழிபெயர்ப்புக்கு விரோதமாய் ஒரு இயக்கம் நடைபெற வேண்டும். ஸம்ஸ்கிருதம் கலந்த தமிழ்ப் பெயர்களெல்லாம் சுத்த தமிழ்ப் பெயர்களை விட அழகானவைகள் என்று நான் சொல்லவில்லை. ‘தேவ ஸஹாயம்’ என்ற பெயர் ‘கடவுள் துணை’ என்றால் நன்றாயிராது; ஆனால் ‘அன்புடையாள்’ என்ற பெயர் வடமொழியில் அவ்வளவு அழகாய் வாய்க்காது.

அநேக தமிழ்ப் பெயர்கள் மிக அழகாய்த்தா னிருக்கின்றன. வள்ளி, அழகர், வேலன், மணி, ஆண்டாள் இம்மாதிரிப் பெயர்களில் ‘பத்தரை மாற்று’த் தெரியத்தான் செய்கிறது. ஆனால் இவைகள் போதுமா? பாஷையின் முன்னேற்றத்திற்காக, வளர்ச்சிக்காக, பாஷைகளிடையே காதல் தோழமையை வளர்ப்போமாக!



## ஹரிதாஸ்

"நிஜமா? இது நிஜமா? ஹரிதாஸ் என்று ஒரு படம் வரப்போவது நிஜமா?" என்று கேட்டுக் கொண்டிருந்தவர்களுக்கெல்லாம் இந்த தீபாவளி யன்று "ஆமாம்; நிஜந்தான்!" என்று பதில் கிடைக்கப் போகிறது. அந்தப் படத்தில் தமிழ் நாட்டின் சிறந்த சங்கீத நடிகர் நடிப்பதும், பிரபல ஸ்டிர் நட்சத்திரங்கள் இருவர் உடன் நடிப்பதும் கூட நிஜந்தான் என்று தெரியப் போகிறது. பாகவதர் இந்தக் கதையில் கண்ணைக் குத்திக் கொள்ளவில்லை, காலைத்தான் வெட்டிக் கொள்கிறார் என்பதும் நிஜமே தானும்! பேஷான சங்கீதம், உருக்கமான நடிப்பு இவற்றுடன் கூட, சிருங்கார நாட்டியம், தாஸியின் மாய வலை, பதி பக்தியின் சிறப்பு முதலிய தமிழ் டாக்கியின் இன்றியமையாத அம்சங்களும் சேர்ந்து, ஹரிதாஸ் படம் தமிழ் நாட்டை ஒரு ஆட்டு ஆட்டுவிக்கப் போகிறது என்பதையும் தீபாவளி யன்று நிஜமாகவே காணப் போகிறோம்.

## எந்தை

மாலை மணங் கமழ
மௌவல் முகை - விரியும்
எந்தை குன்றம்
காலை மணிக் குவளை
காதலர் போல் விழிக்கும்
எந்தை குன்றம்

[மௌவல் : காட்டு மல்லிகை ; முகை விரியும்: மொட்டு மலரும் ; ஆடு கழை: ஆடுகின்ற மூங்கில்,

## குன்றம்

ஆடு கழை இழிக்கும்
அந்தண் புயலிற்றே
எந்தை குன்றம்

நீடு கழை மேல்
நிலாம தியம் நிற்குமே
எந்தை குன்றம்

அந்தண் புயல்: அழகிய குளிர்ந்த மேகம்;
நீடு கழை: நீண்ட மூங்கில்.]





## பர்மா ராணி

கதை கதையாம், காரணமாம். காரணத்தில் ஓர் உருக்காம். ஓர் உருக்கில் ஒரு பர்மா ராணியாம். அந்த பர்மா ராணி தென்னிந்தியாவுக்கு வருகிறாளாம். வரும் போது ரங்கூன் நகரின் தங்கக் கோயில்களையும், பர்மா நாட்டின் அடர்ந்த பெருங் காடுகளையும் கொண்டு வருகிறாளாம். பர்மாவின் பெயர் பெற்ற நடன சிங்காரிகளும் உடன் வருகிறார்களாம். காட்சிகள் எல்லாம் அப்படி அப்படியே தத்ரூபமாய் இருக்குமாம். கதை உண்மையாக நடந்த கதை போலவே இருக்குமாம். சம்பாஷணைகள் முத்துக் கோத்ததுபோல் இருக்குமாம். இருக்கட்டும், இருக்கட்டும். சீக்கிரத்தில் திரைக்கு வரும்போது பார்த்து விடலாம்; கேட்டும் விடலாம்.




தாய் தந்தையர்கள்

தங்கள் குழந்தைகளுக்காக விரும்புவது

# பெரீஸ்

## பிஸ்கட்ஸ்

குழந்தைகளை போஷித்து வளர்க்கும் ஆகாரம், சிற்றுண்டிகளுக்கு சிறந்த உணவு

**PERRY & COMPANY, Biscuits Manufacturers, USILAMPATTY**

# கண்டெடுத்து குடிகும்

வஸந்தன்

—சாமா

குமுதம் தோட்டத்தில் மெதுவாக உலாவிக் கொண்டிருந்தாள். 'குக்கூ' என்று ஒரு குயில் கூவி அங்கு குடிகொண்டிருந்த நிசப்தத்தைக் கலைத்தது. படபடவென்று இறக்கைகளை அடித்துக் கொண்டு பறந்து வந்த ஒரு கிளி அவள் தனிமையைக் கலைத்தது. அப்பொழுது, அடுத்த பங்களாவின் தோட்டத்தில் — தோட்டம் என்பதற்குப் பதிலாக அதைக் காடு என்று சொல்லலாம்—யாரோ ஒருவர் உலாவிக் கொண்டிருப்பதை அவள் பார்த்தாள். அவருக்குச் சுமார் முப்பது வயதிருக்கும் என்று தோன்றிற்று. குமுதத்துக்கு ஏற்பட்ட வியப்பு இவ்வளவு அவ்வளவு அல்ல. ஏனெனில், அந்தப் பங்களாவின் பின்பக்கம் வெகு காலமாக இடிந்து பாழாகக் கிடந்தது. அங்கு வந்த யாரும் சௌக்கியமாக அந்த இடத்தை விட்டுப் போகவில்லை என்று சொல்லிக் கொண்டார்கள். இவ்வளவு அழகான வீட்டிற்கு ஒருவர் குடி வந்திருக்கிறார் என்றால் யாருக்குத்தான் ஆச்சரியமாயிராது?

அந்தச் சமயத்தில் அந்த மனிதரின் பார்வை தற்செயலாகக் குமுதத்தின் பேரில் விழுந்தது. அந்த விழுதலில் என்ன காரணத்தினாலோ அவர் முகத்தில் திகில் குடிகொண்டது; அவர் கண்களில் சொல்ல முடியாத பயம் தோன்றிற்று. சட்டென்று அவர் திரும்பி வெகு வேகமாக அந்த இடிந்த பங்களாவுக்குள் சென்று மறைந்து விட்டார்.

குமுதத்துக்கு இது ஆச்சரியத்தை அளித்தது. எதற்காக அந்த மனிதர் தம்மைக் கண்டு பேந்தப் பேந்த விழிக்க வேண்டும்? எதற்காக மிரண்டு ஓட வேண்டும்? இதுதான் அவளுக்குப் புரியவில்லை. பங்களாவுக்குள் சென்ற மனிதர் மறுபடியும் தலையை நீட்டி அவள் பக்கம் திரும்பிப் பார்த்ததும் அவள் வியப்பு பன்மடங்கு அதிகமாயிற்று. இருட்டும் சமயம் விட்டபடியால் குமுதம் திரும்பிப் பங்களாவுக்குள் வந்தாள்.

அதிலிருந்து, குமுதம் அடுத்த பங்களாவை அடிக்கடி கவனிக்க ஆரம்பித்தாள். தோட்டத்துப் பக்கம் அவள் வரும்போது, அந்த மனிதர் வெளியே வருவதே அரிதாகி விட்டது. ஆனால், சன்னிரவில் அடுத்த வீட்டுப் பக்கம் மோட்டார் சத்தம் கேட்கும். குமுதம் ஜன்னல் வழியாக எட்டிப் பார்ப்பாள். உருத் தெரியாத சில உருவங்கள் மோட்டாரிலிருந்து இறங்கி உள்ளே போவது தெரியும். பிறகு, வெகு நேரம் கழித்து அவர்கள் திரும்பி வருவதையும் மோட்டார் புறப்படுவதையும் கவனிப்பாள்.

ஒருநாள் தன் தமையன் பாலசந்திரனிடம் அடுத்த வீட்டு மனிதனைப் பற்றி அவள் மெதுவாகப் பிரஸ்தாபித்தாள்: "அண்ணா! அந்தப் பாழடைந்த வீட்டில் ஒருவர் குடி வந்திருக்கிறாரே, அவரைப் பார்த்தீர்களா? அவரைப் பார்த்தால் எனக்கு என்னமோ சந்தேகமாகத்தான் இருக்கிறது! யாருக்காகவோ பயந்துகொண்டு ஒளிந்து கொண்டிருப்பவர்போல் தோன்றுகிறது" என்றாள் குமுதம்.

"அதைப் பற்றி உனக்கென்ன, குமுதம்? பொழுது போகவில்லையென்றால் 'தமிழ் நாடு'வில் கொஞ்சம் வாசிக்கிறேன், கேள்!" என்றான் வக்கீல் பாலசந்திரன்.

"ஐயோ, வேண்டாம்! நீ சொல்கிறதையே கேட்கிறேன்" என்றாள் குமுதம்.

அடுத்த நாள் காலை, குமுதம் பத்திரிகையைப் புரட்டிக் கொண்டிருந்தாள். அப்பொழுது அவள் ஒரு செய்தியைப் படித்து விட்டுத் திடுக்கிட்டாள்.

“சமீபத்தில் புரையூர் பாலத்தை வெடி குண்டு வைத்துத் தகர்த்தது ஒரு சதிக் கூட்டத்தாரின் வேலை என்று தெரிகிறது. இவர்கள் எங்கேயோ தலை மறைவாக இருக்கிறார்கள். இக் கூட்டத்தைச் சேர்ந்த ஒவ்வொரு நபரையும் கைது செய்யும்படி போலீசாருக்குத் தகவல் கொடுப்பவர்களுக்கு ரூ. 5000 வெகுமானம் அளிக்கப்படும்.”

என்ற செய்தியைப் படித்ததும் குமுதத்தின் கண்கள் ஆச்சரியத்தால் பெரிதாயின. சட்டென்று அடுத்த வீட்டுக்காரரின் ஞாபகம் தான் அவளுக்கு அப்பொழுது வந்தது.

“இப்படியும் இருக்குமா? அடுத்த வீட்டுக்காரர் ஆளைக் கண்டு மிரளுகிறாரே, ஒருவேளை அவர் இந்தச் சதிக் கூட்டத்தைச் சேர்ந்தவராக இருக்குமோ?” என்று ஒரு கணம் நினைத்தாள். ஆனால், மறு கணம் “அழகா யிருக்கிறது! அப்படித் தலைமறைவாக இருக்க விரும்புகிறவர் இங்கேதானா வருவார்?” என்று சமாதானம் செய்து கொண்டாள்.



“அண்ணா! அண்ணா! நீ என்ன நினைத்துக் கொண்டாலும் சரி, அடுத்த வீட்டு மனிதரைப் பற்றி எனக்கு ஏதோ சந்தேகம் தோன்றிக்கொண்டே யிருக்கிறது. அந்த வீட்டுப் பக்கம் திரும்பினாலே என் வயிறு என்ன காரணத்தினாலோ பகீர் என்கிறது” என்று மறுபடியும் ஒரு நாள் குமுதம் ஆரம்பித்தாள். “ஏது, ஏது, சுத்தப் பைத்தியக்காரியா யிருக்கிறாயே! பரீட்சைக்குப் படித்துப் படித்து மூளை குழம்பிப் போய் விட்டதா, என்ன?” என்றான் பாலசந்திரன்.

“இல்லை, அண்ணா! புரையூர் பால வெடி விபத்து சம்பந்தமாகப் பத்திரிகையில் போட்டிருக்கிறார்களல்லவா? அதற்கும் இந்த மனிதருக்கும் ஏதோ சம்பந்தம் இருக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது.”

“மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் ஏன் இப்படி முடிச்சுப் போடுகிறாய், குமுதம்? நல்லவேளை நாம் பட்டணத்திலிருந்து கூனூருக்கு வந்தோமா, போலீஸ் வேலை பார்க்க வந்தோமா? யார் எக்கேடு கெட்டுப் போனால் நமக்கென்ன! மறுபடியும் இந்த உபயோகமற்ற பேச்சை எடுத்தால் ஊருக்குப் போய்விடுவேன்” என்றான் பாலசந்திரன்.

இரவு சாப்பாட்டை முடித்துக் கொண்டதும் அவளையு மறியாமல் தோட்டத்தை நோக்கி நடந்து கொண்டிருந்தாள். அடுத்த வீட்டுப் பக்கம் அவளால் பார்வையைச் செலுத்தாமல் இருக்க முடியவில்லை.

அப்பொழுது சந்திரிகை பகல்போல் காய்ந்து கொண்டிருந்தது. எங்கும் பயங்கர நிசப்தம் குடிகொண்டிருந்தது. லேசான பரிமளம் எங்கிருந்தோ காற்றில் மிதந்து வந்தது.

வாசகா அந்த வாசனை 'கம்'மென்று எங்கும் பரவிற்று. வெள்ளை வெளேரென்று தூய ஆடையணிந்த அடுத்த வீட்டுக்காரர் அவளை நோக்கி வருவதை அறிந்து திரும்பிப் பார்த்தாள். அந்த மனிதர் வேலி ஓரத்தில் நின்று கொண்டு, “அம்மா! ஒரு நிமிஷம் உங்களை ஒரு வார்த்தை கேட்க வேண்டும். அதற்காக என்னை மன்னிக்க வேண்டும்” என்று பணிவுடன் சொன்னார்.

இப்படி 'திடுதிப்'பென்று அந்த மனிதர் பேசுவார் என்று குமுதம் கனவிலும் எதிர் பார்க்கவில்லை. அவள் இருதய ஓட்டமே அப்பொழுது நின்றுவிடும் போலிருந்தது. கொடிய கனல் உடலைத் தகிப்பது போலவும், குபீரென்று அத்தனை ரத்தமும் தலைக்குப் பாய்வது போலவும் உணர்ச்சி ஏற்பட்டது. அவள் திரும்பி வீட்டுக்குப் போய் விடலாமா என்று பார்த்தாள். அவள் குறிப்பை அறிந்து கொண்டவர் போல், “அம்மா! ஒரே ஒரு வார்த்தை! தயவு செய்து போகவேண்டாம்” என்றார் அடுத்த வீட்டுக்காரர்.

குமுதத்தின் கால்கள் அவளை அறியாமலே நின்று விட்டன. ஏதோ மந்திரத்தால் கட்டுண்டவள் போல் நின்றாள்.

“அம்மா! ஏன் பயப்படுகிறீர்கள்? நானும் சில நாளாகக் கவனிக்கிறேன். எங்கே போனாலும் நீங்கள் என்னைப் பின் தொடர்ந்து வருகிறீர்கள். அடிக்கடி இங்கே நின்றுகொண்டு என்னைக் கவனிக்கிறீர்கள்! மாடி ஜன்னல் வழியாக எட்டிப் பார்க்கிறீர்கள்..........”

“இல்லையே! ஒருநாளும் இல்லை. அப்படியெல்லாம் செய்ய எனக்குப் பைத்தியமா பிடித்திருக்கிறது?”

“நீங்கள் பைத்தியமா பைத்தியமில்லையா என்று நான் கவலைப்படவில்லை. என் விஷயத்தில் நீங்கள் கவலைப் படாமல் இருந்தால் போதும். எங்கள் குடும்ப பாகப் பிரிவினை விஷயமாகத் தகராறு நடக்கிறது. நான் இருக்கும் இடம் தெரிந்தால் என் தலை போய்விடு மாதலால் இங்கே ஒளிந்து கொண்டிருக்கிறேன். நான் உங்களைப் பணிவுடன் கேட்டுக் கொள்வது என்னவென்றால், என்னைத் தனியாக விட்டுவிட வேண்டுமென்றுதான். நீங்கள் என்னைக் கவனிப்பதை நிறுத்திவிட வேண்டும். உங்கள் அண்ணாவிடம் கூடத் தயவு செய்து என்னைப்பற்றித் தெரிவிக்கக் கூடாது.”

“குமுதம்! குமுதம்!” என்று அப்பொழுது தாயார் கூப்பிடுவதைக் கேட்டு, அவள் ஓட்டமாகவும் பங்களாவுக்கு வந்தாள்.

அன்றிரவு முழுதும் குமுதத்துக்குத் தூக்கம் ஏனோ வரவில்லை. அடுத்த வீட்டு மனிதரிடம் பேசிய தெல்லாம் அவள் ஞாபகத்துக்கு வந்து அளவிட முடியாத ஆவலையும் திகிலையும் உண்டாக்கிக் கொண்டிருந்தது. “நானேக்குக் கிளம்பிப் பட்டணம் போய்விடலாமா, இங்கிருப்பதால் தானே இந்தத் தொந்தரவெல்லாம்? மறுபடியும் அடுத்த

வீட்டுக்காரர் முகத்தில் விழிக்காதபடி இந்த ஊரை விட்டுத் தொலைந்து போய்விட்டாலென்ன ?" என்று நினைத்தாள்.

காலை நேரம். பட்சி ஜாலங்கள் இன்னிசை பாடிக் கொண்டு இரை தேடச் சென்றன. மலர் செடிகள் மீது பனித்திவலை தோய்ந்து ஒரு குளுமையை விளைப்படுத்திற்று. பனித்திரை எங்கும் படர்ந்து அந்த மலைப் பிராந்தியத்தை மங்கலாக்கிக் கொண்டிருந்தது.

சூரியன் உதயமாகி வெகு நாழிகை கழித்து குமுதம் எழுந்தாள். இரவெல்லாம் தூங்காதபடியால் அசாதாரண மன சோர்வு அவளை வாட்டிற்று. இளம் வெயில் பட்டால் உடம்புக்கு இதமா யிருக்குமென்று குமுதம் சற்று தூரம் உலாவி வரக் கிளம்பினாள்.

பால சூரியனின் செங்கதிர்கள் மலர்ச் செடிகள் மீது காட்டும் வர்ண ஜாலங்களைப் பார்த்து வியந்தவாறே குமுதம் வீடு திரும்பிக் கொண்டிருந்தாள். அப்பொழுது, அவள் கொஞ்சமும் எதிர்பார்த்திராத சம்பவம் ஒன்று நடந்தது. வீட்டிற் கெதிரே சற்றுத் தூரத்தில் புஷ்பச் செடிகள் அடர்ந்து வளர்ந்திருந்தன. அந்த இடத்தில் ஏதோ சலசலப்புச் சத்தத்தைக் கேட்டுத் திடுக்கிட்டு நின்றாள். அவளை யறியாமல் அவள் அருகிலிருந்த மரத்திற்குப் பின்னால் ஒளிந்து கொண்டு சத்தம் வந்த திக்கைக் கவனித்தாள்.

அந்தச் செடிக்குள்ளிருந்து அப்பொழுது ஒரு தலை வெளியே தெரிந்தது. பிறகு அது கொஞ்சம் கொஞ்சமாக எழுந்து சுற்று முற்றும் பார்த்தது. மிகவும் நாகரிகமான உடை அணிந்த முன்பின் பார்த்திராத ஒரு மனிதர் செடி மறைவிலிருந்து வெளிப்பட்டார். பிறகு அவர் செடி மறைவில் ஒளிந்தவாறே வெகு வேகமாகத் தூரத்தில் போய் மறைந்தார்.

குமுதம் மெதுவாக அவர் ஒளிந்து கொண்டிருந்த செடியருகில் போய் கூர்ந்து கவனித்தாள். செடிகளின் இலைகளுக்குப் பின்னால் பளிச்சென்று ஏதோ ஒரு சாமான் அவள் கண்ணைப் பறித்தது. ஆவலோடு அதை எடுத்தாள். அதில்,

" அருமைத் தோழருக்கு,

புரையூர் பால விபத்து சம்பந்தமாகப் போலீசார் நம்மீது சந்தேகப்படுகிறார்கள். நீங்கள் இங்கே இருந்தால் ஆபத்து உண்டாகுமோ என்று பயப்படுகிறேன். ஆகையால் இந்த இடத்தை விட்டு நீங்கள் உடனே கிளம்பி விடவேண்டியது. நான் உங்களைப் பார்ப்பது போலீசாருக்குத் தெரியக் கூடாதென்று, நேரில் சொல்லியபடி இவ்விடத்தில் கடிதத்தை வைத்திருக்கிறேன். உடனே புறப்படவும்."

என்று எழுதி யிருந்தது.

இதைப் படித்து முடித்ததும், 'அண்ணா! அண்ணா!' என்று கூப்பிட்டுக் கொண்டே குமுதம் ஓட்டமாக ஓடினாள் வீட்டைப் பார்க்க. "என்ன? என்ன சமாசாரம்? எந்தக் குபேரப் பட்டணம் கொள்ளை போகிறது ?" என்றான் பாலசந்திரன்.

"அண்ணா! நான் என்ன சொன்னேன் ?"



"என்ன சொன்னாய் ?"

"அடுத்த வீட்டுக்காரருக்கும் புரையூர் வெடிகுண்டு விபத்துக்கும் ஏதோ சம்பந்தம் இருக்கிற தென்று சொன்னேனே, இல்லையோ?"

" ஆமாம்!"

" இங்கே பார், அண்ணா!"

" எதைப் பார்க்கச் சொல்லுகிறாய் ?"

"இதோ, இந்தக் கடிதத்தை!" என்று சொல்லித் தான் கண்டெடுத்த கடிதத்தைக் கொடுத்து அது அகப்பட்ட விவரத்தையும் சொன்னாள்.

அக் கடிதத்தைப் படித்ததும் பாலசந்திரனுக்கு ஏற்பட்ட ஆச்சரியம் கொஞ்ச நஞ்சமல்ல. "குமுதம்! நீ இவ்வளவு கெட்டிக்காரி என்று நினைக்கவே யில்லை. நீ எவ்வளவு சாமர்த்தியமாக இதைக் கண்டு பிடித்திருக்கிறாய்? உன் புத்திசாலித்தனம் போலீஸ்காரனுக்குக்கூட இல்லாமல் போச்சே!" என்று சொல்லி வியந்தான்.

"குமுதம்! இப்பொழுதே போய் அடுத்த வீட்டுக் காரனைப் பற்றிப் போலீஸாரிடம் தெரிவிக்கிறேன். நமக்கு ஐயாயிரம் ரூபாய் வெகுமதி கொடுப்பார்கள் அல்லவா? இதைக் கண்டெடுத்த விஷயம் தெரிந்தால் அடுத்த வீட்டுக் காரன் ஓடிப்போனாலும் போய்விடுவான். வெளியில் தெரியக் கூடாது" என்று சொல்லி விட்டு அவசரமாக வெளியே சென்றான் பாலசந்திரன்.

குமுதத்தின் மனதில் நானாவித உணர்ச்சிகள் பொங்கி அவளை நிலைகுலைய வைத்தன. பயங்கர சதிக்கூட்டத்தைச் சேர்ந்த ஒருவரைத் தான் கண்டு பிடித்ததையும், முதல் நாள் அவருடன் நேருக்கு நேர் தான் பேசிக் கொண்டிருந்ததையும் நினைக்க அவள் உடல் நடுங்கிற்று. அவர் எவ்வளவு சாமர்த்தியமாக, எவ்வளவு இனிமையாகப் பேசினார்? முகத்தில்தான் எவ்வளவு சாந்தமும் கருணையும் இருந்தது? அவரா இப்படிப்பட்ட பயங்கர சதி வேலைகளில் இறங்கினார்? யாருடைய தூண்டுதலின் பேரில் அப்படிச் செய்தாரோ, தெரியவில்லையே! — இதை யெல்லாம் நினைக்க நினைக்கக் குமுதத்தை வேதனை பிடுங்கித் தின்றது.

சட்டென்று அடுத்த வீட்டுக்காரரின் உருவம் அவள் முன் தோன்றி, "ஐயோ! என்னை எப்படியாவது காப்பாற்றி விடேன்" என்று கெஞ்சுவது போல் அவளுக்குத் தோன்றிற்று.

"ஐயோ! அண்ணா இத்தனை நாழி போலீஸ் ஸ்டேஷனுக்குப் போயிருப்பார். இன்னும் சில நிமிஷங்களில் அடுத்த வீட்டுக்காரர் கைதியாகி விடுவார். அவர்கள் வருவதற்குள் எங்கேயாவது அவரை ஓடிப் போகச் சொல்வேன்!" என்று மனம் கட்டளையிட்டது.

அதற்கு மேல் குமுதத்தால் நிற்க முடியவில்லை. பைத்தியம் பிடித்தவள்போல் அடுத்த பங்களாவுக்கு

ஓடினாள். மறுநிமிஷம் அவள் அடுத்த வீட்டுக்காரரின் எதிரில் நின்றாள். "ஓடிப்போங்கள்! நீங்கள் புளையூர் பாலத்துக்கு வெடி குண்டு வைத்தது வெளியாகி விட்டது! ஓடுங்கள்! போலீஸார் வருகிறார்கள்!" என்றாள் பதை பதைக்க.

அவரது முகத்தில் பெருங் குழப்பம் தோன்றிற்று. "அந்த விஷயம் உங்களுக்கு எப்படித் தெரிந்தது?" என்றார் அவர். குமுதம் பெருமூச்சு வாங்கக் கடிதத்தைப் பற்றித் தெரிவித்து, அண்ணா போலீஸ்காரர்களை அழைத்து வரப் போயிருப்பதையும் கூறினாள்.

அதைக் கேட்ட அம் மனிதர், "ஐயோ! உங்கள் உதவிக்கு நான் எப்படி நன்றி செலுத்துவேன்?" என்றார்.

"எனக்கு நன்றியும் செலுத்த வேண்டாம்; ஒன்றும் வேண்டாம், நீங்கள் ஓடிப்போய்த் தப்பித்துக் கொண்டால் போதும்! இங்கே நிற்காதீர்கள். ஓடிப்போங்கள்" என்றாள் குமுதம்.

சிறிது நேரத்திற்கெல்லாம் போலீஸ் லாரி வரும் சத்தம் கேட்டது. குமுதம் வாசலுக்கு வந்து எட்டிப் பார்த்தாள். லாரி அருகில் வந்தது. அது அடுத்த பங்களாவுக்குள் செல்லாமல் குமுதத்தின் வீட்டை நோக்கி வந்தது. மறுநிமிஷம் அது பெரிய சத்தம் போட்டுக் கொண்டு வாசலில் வந்து நின்றது.

முதலில், லாரியிலிருந்து அரை டஜன் போலீஸ்காரர்கள் இறங்கினார்கள். பிறகு பாலசந்திரன் இறங்கினான். — ஐயோ! இது என்ன? அவன் கையில் ஏன் விலங்கு போட்டிருக்கிறது? பின்னோடு அடுத்த வீட்டு மனிதர் சிரித்துக் கொண்டு ஏன் இறங்குகிறார்? — குமுதம் திகில் பிடித்து நின்றாள்.

"அம்மா! நீங்கள் கொடுத்த தகவலுக்காக ரொம்பவும் வந்தனம். அந்தக் கடிதம் உங்கள் அண்ணாவுக்கு எழுதப்பட்டதுதான். இவர்தான் புளையூர் விபத்தில் ஒரு குற்றவாளி. நான் இரகசியப் போலீஸ் இன்ஸ்பெக்டர் சாம்பசிவம்" என்றார் அடுத்த வீட்டுக்காரர்.

குமுதம் கீழே விழுந்து மூர்ச்சையானாள். "குமுதம்!" என்று பாலசந்திரன் அலறிக் கொண்டு அவளைத் தூக்க ஓடியவன், தன் கையில் விலங்கு மாட்டியிருப்பதைப் பார்த்து மனம் கலங்கி நின்றான்.

* * *

மேற்படி சம்பவம் நடந்த இரண்டு மாதங்களுக்கெல்லாம் குமுதமும் இன்ஸ்பெக்டர் சாம்பசிவமும் பேசிக் கொண்டிருந்தார்கள்.

"குமுதம்! அன்று என்னைக் காப்பாற்றி விடுவதற்காக நீ ஓடி வந்து கடிதத்தைப் பற்றிக் கூறியபொழுது, உன் காதலுக்கு அருகதையாக நானும் புளையூர் பாலத்தில் வெடி வைத்தவர்களில் ஒருவனாக இருக்கக் கூடாதா என்று ஏங்கினேன்!" என்றார் இன்ஸ்பெக்டர் சாம்பசிவம் உணர்ச்சி பொங்க.

"ஐயோ பாவம், ரொம்ப சாதுதான்! உங்களைக் குற்றவாளி என்று எண்ணிக் கொள்ளும்படி செய்து, கடைசியில் பெரிய குண்டாக வல்லவா என் தலையில் போட்டீர்கள். அது போதாதா?" என்றாள் குமுதம்.

பாலசந்திரனின் கதி என்ன ஆயிற்று என்று நேயர்கள் கவலைப்பட வேண்டியதில்லை. விடுதலை ஆகவேண்டுமென்று அவன் தலையில் எழுதியிருக்கிற போது, இன்ஸ்பெக்டர் சாம்பசிவம் அருமை மாப்பிள்ளையாக வாய்த்திருக்கும்போது, எப்படி அவனுக்குத் தண்டனை கிடைத்திருக்க முடியும்?

எங்கள் சுதேசி ஆடைகளை வாங்கி ஆதரித்து
வரும் நண்பர்களுக்கும் வியாபாரிகளுக்கும்



எங்களுடைய

## தீபாவளி வாழ்த்துக்கள்!



தங்கள் நல் வரவை அன்புடன் எதிர் நோக்கும்

**K. R. வெங்கடகிரி சர்மா & சன்ஸ்,**

கைத்தரி ஜவுளி வியாபாரம்,

*123, தெற்கு மாசி வீதி :: மதுரை*

---

# மதுரை மர்க்கன்டைல் பாங்க் லிமிடெட்

## 108, தெற்கு மாசி வீதி :: மதுரை

•

ஸ்ரீ K. M. S. லெக்ஷ்மணய்யர் - சேர்மன்

•

| | | |
|---|---|---|
| அதிகாரம் பெற்ற மூலதனம் | .... | ரூ. 6,00,000/- |
| வாக்களித்து செலுத்திய மூலதனம் | .... | ரூ. 3,00,000/- |
| மொத்த ஆஸ்தி | .... | ரூ. 20,00,000/-க்கு மேல் |

•

எல்லாவித டிபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.
சகலவித பாங்கிங் அலுவல்கள் நடத்தப்படுகின்றன.

S. வெங்கட்ராமன், B. Sc. (Com.) C. A. I. I. B.,
*காரியதரிசி.*

# இண்டோ-கமர்ஷியல் பாங்க் லிமிடெட்.

ரிஜிஸ்டர்டு ஆபிஸ்: மாயவரம்.

சென்ட்ரல் ஆபிஸ்: மதராஸ்.

செலுத்தப்பட்ட மூலதனம் ... ரூ. 18,75,000

ரிஸர்வ் நிதி ... ரூ. 3,25,000

மொத்த லேவாதேவி 2½ கோடிக்கு அதிகம்

லோகல் ஆபீஸ்கள்:

சைனுபஜார் ரோடு, மாம்பலம், மயிலாப்பூர், திருவல்லிக்கேணி, பெரியமேட்

பிராஞ்சுகள்:

| | |
|---|---|
| ஆமதாலவாலஸா | புதுக்கோட்டை |
| அனகப்பள்ளி | சாலூர் |
| சிதம்பரம் | சீகாழி |
| சித்தூர் (கெர்சின்) | தாடப் பள்ளிக்கூடம் |
| காஞ்சீபுரம் | தஞ்சாவூர் |
| ஈரோடு | திருநெல்வேலி டவுன் |
| காரைக்குடி | திருநெல்வேலி ஜங்ஷன் |
| கும்பகோணம் | திருச்சிறுப்பள்ளி |
| மதுரை | வேலூர் |
| மாருதேரு | விஜயபுரம் |
| பாலக்காடு | விருதுநகர் |
| பார்வதிபுரம் | விஜயநகரம் |

**சகலவிதமான பாங்க் அலுவல்களும் ஏற்றுக்கொண்டு நடத்தப்பெறும்**

S. N. N. சங்கரலிங்க ஐயர்
மானேஜிங் டைரக்டர்

# நான்கோ ரப்பர் ஒர்க்ஸ்

லாலி ரோட் போஸ்டு
கோயமுத்தூர்

கவர்ன்மெண்டாரால் அங்கீகரிக்கப்பட்ட எல்லாவிதமான ரப்பர் மற்றும் எபோனைட் சாமான்களும் தயாரிப்பவர்கள்



ஜட்கார்க்களுக்கும், ரிக்ஷாக்களுக்கும், டோங்காக்களுக்கும் நன்கு நீடித்து உழைக்கக்கூடிய "யானை மார்க்" டயர்களையே எப்போதும் வாங்கி உபயோகியுங்கள்.

# NANCO RUBBER WORKS

LAWLEY ROAD POST
**COIMBATORE**

*Tel:* "NANCO" *Phone:* 247

# மீரா யாத்திரை





இராஜகுமாரி மீரா தன் குழந்தை உள்ளத்தைக் கொள்ளை கொண்ட மாயக் கண்ணனை மணக்க விரும்பினாள். அவளுடைய விருப்பத்துக்கு மாறாகச் சித்தூர் ராணாவுக்கு அவள் மாலையிட நேர்ந்தது.

ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மிக்கு அத்தகைய நிர்ப்பந்தம் எதுவும் ஏற்படவில்லை. இரண்டு மூன்று கதைகளை அவருக்குச் சொல்லி, எந்தக் கதையில் நடிக்க இஷ்டம் என்று கேட்டபோது, "மீராவாகத்தான் நடிப்பேன்" என்று அவர் தம் விருப்பத்தைத் தெரிவித்தார். அதன் பயனாக மீரா அநுபவித்த கஷ்டங்களையெல்லாம் ஸ்ரீமதி எம். எஸ். ஸும் ஏறக்குறைய அநுபவிக்க வேண்டி நேர்ந்தபோதிலும், அவற்றுக்கெல்லாம் அவருடைய சொந்த விருப்பமும் பிடிவாதமுமே காரணங்கள் ஆயின.

மீராவாக நடிப்பதென்றால், அது எளிதான காரியமா? மூர்மார்க்கெட்டைப் பிருந்தாவனமாகவும் கூவம் நதியை யமுனையாகவும் நினைத்துக்கொண்டு பக்தி பரவசத்துடன் நடித்துவிட முடியுமா?

"மாயக் கண்ணனைத் தேடி மீரா அலைந்த இடங்களுக்கெல்லாம் நானும் போவேன்; மீரா தரிசித்த திருக்கோயில்களையெல்லாம் நானும் தரிசிப்பேன். அப்போதுதான், உண்மையான மீரா இருதயத்துடன் என்னால் நடிக்க முடியும்" என்று படத்தின் பிரதான நடிகை சொன்னால் அதற்கு மாறாக எப்படிப் படம் எடுப்பது சாத்தியமாகும்?

இதற்கிடையில், டைரக்டர் எல்லிஸ் ஆர். டங்கன், ஆயிரம் பக்கங்கள் அடங்கிய "இராஜஸ்தான்" என்னும் புத்தகத்தைக் கரதலப் பாடமாய்ப் படித்து, இராஜ புத்திரர்களின் வரலாறு, பழக்க வழக்கங்கள் ஆகியவற்றை — இராஜ புத்திர கன்னிகைகள் கல்யாணத்தின்போது கையில் என்ன வர்ணமுள்ள வளை அணிந்திருந்தார்கள் என்பது முதற்கொண்டு — தெரிந்து வைத்துக்கொண்டு, "கட்டாயம் வடநாட்டு யாத்திரை போகத்தான் வேண்டும்; இராஜபுத்திர நாட்டிலும், பிருந்தாவன துவாரகை க்ஷேத்திரங்களிலும் சரித்திர பூர்வமான தத்ரூபக் காட்சிகளை எடுத்து வர வேண்டும். இல்லாவிட்டால் படத்திலே உண்மை ஒளி வீசாது!" என்று தீர்மானமாகக் கூறினார்.





ஆகவே, நல்ல நாளில் மீரா யாத்திரை ஆரம்பமாயிற்று. ஸ்ரீ டி. சதாசிவம், ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி, குழந்தை ராதா (பாலமீரா), டைரக்டர் டங்கன், காமராமேன் ஜிதேன் முதலிய சுமார் இருபது பேர் அடங்கிய கோஷ்டியார், யுத்த காலத்து ரயில் நெருக்கடியை இன்னும் அதிகமாக்கிக் கொண்டு, வட நாட்டுக்குக் கிளம்பினார்கள்.

நந்தகுமாரன் வளர்ந்து விந்தை பல புரிந்த பிருந்தா வனத்துக்கு முதன் முதலில் மீரா கோஷ்டி போய்ச் சேர்ந்தது. முதல் நாளன்று பிருந்தாவனத்தின் வீதிகளில், "பிருந்தாவனகி மங்கள லீலா" என்று ஆரம்பிக்கும் பிருந்தாவன கீர்த்தனைப் பாடிக் கொண்டு ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி பஜனை ஊர்வலம் வந்ததின் பயனாக, பிறகு நாலு தினங்களிலும் பிருந்தாவனத்தின் மூலை முடுக்கு சந்து பொந்துகளில் எல்லாம், "பிருந்தாவனகி மங்கள லீலா" ஒலி செய்ய ஆரம்பித்தது. அந்தக் கீதம் அவ்வளவு தூரம் பிருந்தாவன வாசிகளின் மனதைக் கவர்ந்து விட்டது.

மீரா இந்தத் துயர உலக வாழ்வை நீக்க விரும்பிப் புண்ணிய யமுனா நதியில் மூழ்கிய கட்டத்தைப் படம் பிடித்தபோது, கதாநாயகி உண்மையாகவே பெரும் சோதனைகளுக்கு ஆளாக வேண்டியிருந்தது. அந்தக் காலத்தில் எப்படியோ தெரியாது; இந்தக் காலத்து யமுனா நதியில் பெரிய பெரிய ராட்சஸ ஆமைகள், மந்தை மந்தையாகக் குடி புகுந்திருக்கின்றன. அவற்றைக் கண்டாலே பயமாயிருக்கும். முதலையின் வாயிலிருந்து யானையைக் காத்த முராரியின் பேரில் பாரத்தைப் போட்டு விட்டுத்தான் கதாநாயகி நதியில் இறங்கவேண்டியிருந்தது.

யமுனையில் மூழ்கிய மீராவைக் கிரிதர கோபாலன் படகோட்டி ரூபத்தில் வந்து காப்பாற்றுகிறான். இந்தக் காட்சியைப் படம் எடுத்த போது, காப்பாற்ற வந்த படகிலேயே கதாநாயகிக்கு ஆபத்து வரப் பார்த்தது.

தண்ணீருக்குள்ளிருந்து மீரா மேலே வரும் சமயத்தில் படகு நிலைக்கு நேராக வந்துவிடவே, தலை படகிலே மோதி, வெளியில் வர முடியாமல் மூச்சு முட்டி, சிறிது நேரம் திக்கு முக்காடும்படி ஆகிவிட்டது. அன்று மீராவைக் காப்பாற்றிய மாயக் கண்ணன்தான் தென்னாட்டின் புகழ் விளக்கச் செய்யும் பாடகியையும் இன்று காப்பாற்றினார் என்று சொல்ல வேண்டும்.

பிருந்தாவனத்திலிருந்து மீரா கோஷ்டியார் ஜயப்பூர் சேர்ந்தார்கள். இராஜபுத்திர தேசத்தில் வீதி அழகுக்கும், வீடுகளின் அழகுக்கும் பெயர் போனது இந்தப் பட்டணம். இரத்தினக்கல் வர்ணம் கொண்ட சித்திர விசித்திரமான முகப்புகளை உடைய வீடுகளின்









வரிசையைப் பார்த்துக் கொண்டே இருக்கலாம். இந்த அழகிய பட்டணத்துக்கு, எட்டு மைல் தூரத்தில் 'புராணு காட்' என்று வழங்கும் இடத்தில் பழைய காலத்து வசந்த மாளிகை ஒன்று இருக்கிறது. இந்த மாளிகை அமைந்துள்ள விஸ்தாரமான தோட்டத்தைச் சுற்றி, கண்ணுக் கெட்டிய தூரம் வரிசையாக அமைந்துள்ள மணி மண்டபங்களின் அழகை எளிதில் வர்ணிக்க முடியாது; வர்ணிக்க வேண்டிய அவசியமும் இல்லை. ஏனெனில், அந்த அற்புதக் காட்சியை நேயர்கள் மீரா படத்தில் நேரே பார்த்துக் கொள்ளலாம்.

அந்த மாளிகையைச் சேர்ந்த பூந்தோட்டத்திலே உலாவிக் கொண்டும், அங்குள்ள பளிங்கு நீர்த்தடாகத்தின் கரையில் உட்கார்ந்து கொண்டும், மீரா தன் குழந்தை உள்ளத்தைக் கவர்ந்து பரவசப்படுத்திய வேய்ங்குழலின் மோகன கீதத்தைப் பற்றிப் பாடுகிறார்.

இந்தக் காட்சி படம் எடுக்கப்பட்டபோது, ஜயப்பூரில் தற்சமயம் திவானாயுள்ள ஸர் மீர்ஸா இஸ்மேயிலின் மனைவியாரும், இன்னும் உயர்குலத்து இராஜபுத்திர மாதர் சிலரும் 'ஷூடிங்' பார்ப்பதற்காக வந்திருந்தார்கள். ஒரு பகல் முழுதும் அவர்கள் அங்கேயே இருந்து, அவ்வப்போது மீராவின் கானத்தைக் கேட்டு ஆனந்தித்தார்கள். அந்த இராஜபுத்திரப் பெண்மணிகளிலே சிலர், மீராவுக்கு இராஜ புத்திர வழக்கப்படி உடை உடுத்துவதற்கும் ஆபரணம் அணிவதற்கும் ஒத்தாசை செய்தார்கள். "மீரா படத்தை மதராஸி பாஷையில் ஏன் எடுக்கிறீர்கள்? ஹிந்தியில் எடுக்கக் கூடாதா?" என்று கேட்காதவர்கள் இல்லை.

ஜெயப்பூரிலிருந்து மீரா கோஷ்டியார் சரித்திரப் பிரசித்தி பெற்ற சித்தூருக்குச் சென்றார்கள்.

"பூதலம் உற்றிடும் வரையும் — அறப்
போர்விறல் யாவும் மறப்புறும் வரையும்
மாதர்கள் கற்புள்ள வரையும் — பாரில்
மறைவரும் கீர்த்திகொள் ரஜபுத்ர வீரர்"

என்று பாரதியாரால் பாடப்பெற்ற இராஜபுத்திர வீரத்துக்கு மகத்தான ஞாபகச் சின்னமாக விளங்குவது சித்தூர்க் குன்றின்மேல் அமைந்த கோட்டையாகும். இந்தக் கோட்டை மூன்று தடவை முஸ்லிம்களின் பெருந் தாக்குதலுக்கு ஆளாகியது. ஒவ்வொரு தடவையும் அக்கோட்டையிலிருந்து





வீர புருஷர்களும் வீர நாரீமணிகளும் இறுதிவரை போரிட்டு உயிரை விட்டார்களே யன்றி, ஒருவராவது எதிரிகளுக்குப் பணிந்து உயிரைக் காத்துக் கொள்ளவில்லை.

அந்தப் பெயர் பெற்ற சித்தூர்க் கோட்டையின் மதில்களும், அதன் ஏழு வாசல்களும், கோட்டைக் குள்ளே யிருந்த அரண்மனைகளும் அழகிய மாளிகைகளும் இன்று இடிந்து பாழாய்க் கிடக்கின்றன.

அந்தப் பாழும் கட்டிடங்களுக்கு மத்தியில் இன்றளவும் அழியாமல், அழகு குன்றாமல் விளங்கும் கட்டிடம் ஒன்றே ஒன்று இருக்கிறது. அதுதான் தேவி மீராவுக்காகச் சித்தூர் ராணா கட்டிக்கொடுத்த கண்ணன் திருக்கோயில். அவர்களுடைய மண வாழ்க்கையின் ஆரம்ப காலத்தில், மீராவைப் பற்றி ராணாவின் மனம் கெடாமலிருந்த காலில், மீரா கேட்டு ராணா கட்டிக் கொடுத்த கோயில்.

அந்த அழகிய கோயிலில் கிரிதாரியின் சந்நிதியில் அமர்ந்து, ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி மீராவின் கீதங்களைப் பாடியபோது, "இதே இடத்தில் தேவி மீரா அமர்ந்து இதே பாடல்களைப் பக்தி பரவசமாய்ப் பாடி யிருக்கலா மல்லவா?" என்ற எண்ணமே எல்லாருடைய மனத்திலும் குடி கொண்டிருந்தது. எனவே, பாடும்போது, எம். எஸ். ஸும் கண்ணீர் விட்டுவிட்டார். மற்றவர்களின் கண்ணிலும் நீர் துளித்தது. இவையெல்லாம் விட, அந்தக் கோயிலின் பூசாரி — கண் பார்வை மங்கிய கிழவர் — திடீரென்று ஆவேசம் வந்தவர்போல் கர தாளம் போட்டுக்கொண்டு மீரா கீதத்தை அநுபவிக்க ஆரம்பித்த காட்சி அபூர்வமாயிருந்தது.

சித்தூரிலிருந்து மீரா கோஷ்டியார் உதய பூருக்குச் சென்றார்கள். சித்தூர்க் கோட்டை மூன்றாவது தடவையும் எதிரிகளால் அழிக்கப் பட்ட பிறகு, மேவார் இராஜ வம்சத்தார் சித்தூரை விட்டுச் சென்று, எதிரிகள் அண்ட முடியாதபடி நாலுபுறமும் மலை சூழ்ந்த இடத்தில் புதிய தலை நகரை ஸ்தாபித்துக் கொண்டனர். அந்தப் புதிய தலைநகரந்தான் உதயபூர். இன்றைக்குக்கூட, உதயபூருக்குப் போவதற்கு மலைகளுக்கு நடுவே ஒரே ஒரு கணவாய் வழிதான் இருக்கிறது. அதன் மூலமாகவே வண்டிப் பாதையும் ரயில் பாதையும் போகின்றன. அந்தக் குறுகிய கணவாய்ப் பாதையில் இப்போதும் பிரம்மாண்டமான இரும்புக் கதவு போட்டிருக்கிறது. அஸ்தமித்ததும் அந்தக் கதவைப் பூட்டி விடுகிறார்கள். பிறகு, காலையில் தான் திறக்கிறார்கள். உதயபூருக்குப் போகிறவர்கள் எல்லாரும் பகலிலேதான் போய்த் தீர வேண்டும். இரவு வேளையில் யாரும் அங்கே நுழைய முடியாது; ரயில் கூடத்தான்.

இராஜ புத்திர நாட்டிற்குள்ளே மேவாருக்குத்தான் இன்றைக்கும் அதிக மதிப்பு. இறுதி வரையில், டில்லி பாதுஷாக்களுக்குப் பணியாமல் எதிர்த்து நின்ற வம்சம் உதயபூர் வம்சந்தான். இந்தப் பரம்பரையான சுதந்திரப் போராட்டத்தில் மேவார் வம்சத்தினர் அநுபவித்த கஷ்டங்களுக்கு அளவேயில்லை. உலகத்தின் வீர சரித்திரத்திலேயே ஒப்பற்ற வீரச் செயல்கள் பல அவர்கள்

சேர்ந்திருக்கிறார்கள். மற்றும் பல ராஜபுத்ர வம்சத்தினரைப் போல் டில்லி பாதுஷாக்களுக்கு இந்த வம்சத்தார் தங்கள் பெண்களைக் கல்யாணம் செய்து கொடுக்கவில்லை. இதனாலும் மற்றும் பல காரணங்களினாலும் உதயபூர் ராணா மட்டுந்தான் முன்னைக்கும் இராஜபுத்திர நாட்டில் "மகா ராணா" என்னும் பட்டத்துக்கு உரியவராய் விளங்குகிறார்.

தற்சமயம் இந்தியாவிலுள்ள சமஸ்தானங்களுக்குள் அழகு மிகுந்தது உதயபூர் சமஸ்தானமே யாகும். இந்த சமஸ்தானத்தின் பிரதம மந்திரி பதவியை தற்சமயம் நமது தென்னிந்தியப் பிரமுகரான ஸர் டி. விஜயராகவாச்சாரியார் வகித்து வருகிறார்.

அழகு மிகுந்த உதயபூரானது இந்தியாவிலேயே அழகிற் சிறந்த ஊர் என்று சொல்லலாம். உதயபூரில் உள்ள சில சிற ஏரிகளைப்போல் அழகான காட்சிகள் உலகிலேயே வேறெங்கேயாவது உண்டா என்பது சந்தேகம். ஏரிக் கரைகளிலும் ஏரியின் மத்தியிலும் உள்ள அரண்மனைகளின் அழகை சொல்ல முடியாது.

இப்போதுள்ள உதயபூர் மகாராணா பிராயத்திலும் அறிவு ஞானத்திலும் மிகுந்தவர்; பிரஜைகளின் அபிமானத்தைக் கவர்ந்தவர். இந்தியாவிலேயே உயர்ந்த அந்தஸ்து வகிக்கும் சமஸ்தானத் தலைவரா யிருந்தும், அவரிடம் ஆடம்பரமோ படாடோபமோ கிடையாது. எல்லாருடனும் சகஜமாகப் பழகக்கூடியவர். உதயபூர் அரண்மனைகளுக்குள்ளே யார் வேண்டுமானாலும் சர்வ சாதாரணமாய்ப் புகுந்து வேடிக்கை பார்க்கலாம். மகாராணா ஒரு அறையிலிருக்கும் போது, அதற்கு அடுத்த அறையில் ஜனங்கள் கூட்டங் கூட்டமாய் வந்து வேடிக்கை பார்த்து விட்டுப் போவது சர்வ சாதாரணம்.

அழகிய உதயபூரின் நிர்மலமான சில ஏரியில் மீராவும் ராணாவும் படகில் அமர்ந்து ஆனந்தமாகச் செல்லும் காட்சி இங்கே படம் பிடிக்கப்பட்டது.

உதயபூரில் உள்ள ஒரு சிங்கார வனத்தில், தாமரைத் தடாகம் ஒன்று இருக்கிறது. அதன் நாலு புறத்திலும் நீர்ப் பொழிவுகள் முத்துச் சொரிவது போல் நீர்த் துளிகளைப் பொழிந்து கொண்டிருக்கும். இன்னும் அத் தடாகத்தின் நாலு மூலைகளிலும் அமைக்கப்பட்டுள்ள நாலு யானைகளின் தும்பிக்கை வழியாகத் தண்ணீர் சொரிந்துகொண்டிருப்பது ஒரு விந்தையான காட்சி. இந்தத் தாமரைக் குளக்கரையிலே, நீர்ப் பொழிவுகளுக்கு இடையிலே மீரா சேடிகளுடன் உலாவி வந்து செல்லும் காட்சி படம் எடுக்கப்பட்டது.

உதயபூரின் பிரசித்தி பெற்ற யானை ஊர்வலம் ஒன்றையும் மீராவுக்காகப் படம் எடுக்க வேண்டும் என்று விரும்பினார்கள். அதற்கு மகா ராணாவின் அநுமதி தேவையா யிருந்தது. அநுமதி கிடைக்குமோ, என்னமோ என்ற சந்தேகமும் இருந்தது.

தென்னாட்டின் பிரசித்தமான பாடகி "மீரா" படம் சம்பந்தமாக உதயபூர் வந்திருக்கும் செய்தி அறிந்து, உதயபூர் உத்தியோக மண்டலத்தார் ஸர் டி. விஜயராகவாச்சாரியாரின் தலைமையில் ஒரு சங்கீதக் கச்சேரி ஏற்படுத்தினார்கள். கச்சேரி முடிவில் ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மிக்கும், குழந்தை மீராவாக நடிக்கும் ராதாவுக்கும் மேற்படி உத்தியோக மண்டலத்தார் முத்துமாலைகள் பரிசளித்தார்கள்.

பின்னர், மகா ராணாவின் முன்னிலையிலும் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் கச்சேரி நடந்தது. எம். எஸ். ஸின் கர்நாடக சங்கீதம், ஹிந்துஸ்தானி சங்கீதம் இரண்டையும் மகாராணா பெரிதும் பாராட்டியதுடன், மீரா கோஷ்டிக்கு வேண்டிய உதவியெல்லாம் அளிக்கும்படியும் உத்தரவிட்டார். அதன் பிறகு உதயபூர் அரண்மனை யானைகளின் ஊர்வலம் "மீரா" படத்துக்காக எடுக்கப்பட்டது.

உதயபூரிலிருந்து மீரா கோஷ்டியார், பிரசித்த சித்திரக்காரரும் "மீரா"வின் ஆர்ட் டைரக்டருமான ஸ்ரீ கனுதேசாயின் அழைப்பின்பேரில் ஆமதாபாத்துக்குச் சென்றார்கள். அங்கே தென்னிந்தியர்களும் குஜராத்திகளும் ஆயிரக்கணக்காகக் கூடியிருந்த சபையில் ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மியின் சங்கீதக் கச்சேரி நடந்தது. கர்நாடகப் பாட்டும், ஹிந்துஸ்தானி பாட்டுமாக மாற்றி மாற்றி எம். எஸ். பாடி சபையோரைக் களிப்பித்தார். நாலு மணி நேரம் நேரந்தாற் போல் சங்கீதம் கேட்டதென்பதையே அறிந்திராத குஜராத்திகள் எம். எஸ். ஸின் இன்னிசையைக் கேட்டுப் பிரமித்துப் போனார்கள். ஆமதாபாத்தின் மிகச் செல்வாக்குள்ள குடும்பங்களில் எல்லாம் "மீரா"வுக்கு அழைப்பின் மேல் அழைப்பாக வந்தது!

தேவி மீரா தன் உள்ளம் கவர்ந்த கள்வனை காடெல்லாம் தேடி அலைந்த பிறகு கடைசியாக துவாரகைக்கு வந்து கண்ணனுடைய பூரண அருளைப் பெற்று அவனுடைய பாத கமலங்களில் ஐக்யமாகிறாள்.

மீரா கோஷ்டியின் யாத்திரையும் துவாரகையிலே தான் முடிவடைந்தது. துவாரகையின் வீதிகளில் "மீரா" கண்ணன் திருநாமத்தைப் பாடிக்கொண்டு சென்றபோது, பிருந்தாவனத்திலே கண்ட காட்சிகள் இங்கு இன்னும் அதிகமாய்த் தென்பட்டன. ஜனங்கள் திரள் திரளாகக் கூடி "மீரா"வைத் தொடர்ந்து சென்றார்கள். அநேகம் பேர் உண்மையாகவே மீரா புனர் ஜன்மம் எடுத்து வந்து விட்டதாக எண்ணி, மீராவுக்குரிய வழிபாடுகளைச் செய்ய ஆரம்பித்துவிட்டார்கள்! அப்படிச் செய்ய வேண்டாமென்று அவர்களைத் தடை செய்வது பிரம்மப் பிரயத்தனமாகி விட்டது.

துவாரகையின் கோயில் படிகளின்மீது மீரா ஏறி, கண்ணன் சந்நிதியில் கதறிக்கொண்டு நுழைந்து, உணர்வற்று விழுகிற காட்சியில், ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி உண்மையாகவே உணர்விழந்து விழுந்துவிட்டார்.

"மீரா" படத்தில் மேற்படி துவாரகைக் கோயில் சம்பவம், பார்ப்பவர்களைப் பரவசப்படுத்தும் சிகரமான காட்சியா யிருக்குமென்று எதிர்பார்க்கப் படுகிறது.







தியாகராஜ பாகவதர்
டி.ஆர்.ராஜகுமாரி
வசந்தகோகிலம்
கிருஷ்ணன்-மதுரம்
நடிக்கும்

ராயல் டாக்கீஸ்

# ஹரிதாஸ்

டைரக்ஷன்
சுந்தர்ராவ் நட்கர்னி

ஸ்டூடியோ :
சென்டிரல்ஸ்டூடியோஸ்
கோயமுத்தூர்







புரொடயூசர்ஸ்
ராயல் டாக்கீ டிஸ்டிரிபியூட்டர்ஸ்
மதுரை . . . . . . . . . . . . பெஜவாடா

# இன்றே பாருங்கள்!







ஜூபிடர் பிக்சர்ஸ்

# மஹாமாயா

சின்னப்பா • கண்ணாம்பா
கிருஷ்ணன் • மதுரம் • சரோஜா
M.G.சக்கரபாணி • மீனலோசனி




டைரக்ஷன்: T.R.ரகுநாத் உ "இளங்கோவன்" ஸ்டுடியோ: நியூடோன்

பருத்தி நூல்களுக்கு பிரதான ஸ்தாபனம்

# மதுரை மில்ஸ் கம்பெனி லிமிடெட்

மதுரை — தூத்துக்குடி — அம்பாசமுத்திரம்

## எங்களுடைய விசேஷமான நூல்கள்:

| | | |
|---|---|---|
| 5,00,000 நூற்கும் கதிர்கள் | ஒத்தை நூல், இரட்டை நூல், பனியன் நெசவுக் கேற்ற கோன் நூல், மில் நெசவுக் கேற்ற சீஸ் நூல், முறுக் கேற்றிய நூல் | நம்பர் 80 வரை நூல்கள் |




## நாங்கள் சப்ளை செய்வது

கைத்தறி, இயந்திரத் தறி, பின்னல் தறிகளுக்கு வேண்டிய சாரிக்கள் நூல்கள், இயந்திர நெசவுக்கேற்ற வார்ப்பு நூல்கள், கனத்த வெப்பிங், கான்வாஸ் முதலியவைகளுக்கேற்ற மடக்கு இரட்டை நூல்கள், மற்றும் பின்னல் இயந்திர நெசவுக்கேற்ற மிருதுவான சன்ன நூல்கள்.

எங்கள் எகிப்திய பருத்தி நூல்கள் இறக்குமதியாகும் நூல்களைப்போல் எல்லா வகையிலும் கீர்த்தி பெற்றது. நாங்கள் நூற்பதைத் தவிர நெய்வதில்லை.

ஐக்கிய மாகாண சர்க்கார் தங்கள் அறிக்கையில், இந்தியாவிலே நூற்கப் படும் நூல்களில், எங்கள் நூல்கள் மிருதுத் தன்மைக்கும், சன்னத்திற்கும், நேர்த்திக்கும் அழுத்தத்திற்கும் மிகச் சிறந்தவை யென்றும், எல்லா நெசவு தொழிலாளர்களும் விரும்புவதாகவும் கூறுகிறார்கள்.

## ஏ. & எப். ஹார்வி

மானேஜர்கள்

# சம்பந்தி உபசாரம்



கி. சரஸ்வதி அம்மாள்

காவேரிக்கு நாத்தனார் கடிதத்தைப் பார்த்ததும் தூக்கி வாரிப் போட்டது. கைகால்கள் வெலவெலத்து விட்டன.

"அக்கா கண்டிப்பாய் வர முடியாது என்று எழுதியிருக்கிறாரே, படிக்கிறேன் கேளுங்களேன்" என்று சொல்லிவிட்டுப் படித்தாள்:

"'என்னை என்ன கல்லால் கட்டி சாத்தால் மெழுகியிருக்கிறதா? நானில்லாமல் காரியம் நடக்காதா? கலியாணமா என்ன? தீபாவளி தானே? பாதி துலாஸ்னானத்தில் என்னால் வர முடியாது. எல்லாம் நீயே நடத்து'—என்று எழுதியிருக்கிறார். இப்படித் திடீரென்று என்னைக் கைவிட்டால் நான் என்ன பண்ணுவேன்?" என்று காவேரி தன் கணவருடன் அங்கலாய்த்தாள்.

"அவள் சொல்வதும் வாஸ்தவம் தானே! எத்தனை காலம் அவள் உனக்குச் செய்கிறது? அவரவர் வீட்டுக் காரியத்தை அவரவரே பார்த்துக் கொள்ள வேண்டாமோ?" என்று காவேரியின் கணவர் மனைவியைக் கடிந்து கொண்டார்.

"அதெல்லாம் பரீக்ஷை பார்க்க இதுவா சமயம்? துலாஸ்னானத்தை வருகிற வருஷம் முடித்துக் கொள்ளட்டும். நீங்கள் போய் உங்கள் அக்காவுக்குக் கொஞ்சம் சொல்லி அழைத்து வாருங்களேன்" என்று மன்றாடினாள் காவேரி.

"சொன்னால் உடனே நடக்கிறவளா அவள்? தீபாவளி வரப் போவது தெரிந்துதானே துலாஸ்னானம் செய்யப் போயிருக்கிறாள்! ஒன்றும் வேண்டாம். நான் இல்லாவிட்டால் உலகமே அஸ்தமித்து விடும் என்கிற எண்ணம் அக்காவுக்கும் போகட்டும்."

"உங்களுக்கென்ன, லகுவாய்ச் சொல்லுகிறீர்கள். அக்கா அத்தனை பார்த்துப் பார்த்துச் செய்த பொழுதே சம்பந்திகள் கல்யாணத்தில் ஆயிரம் குற்றம் குறைகள் கண்டுபிடித்தார்கள். இப்பொழுது தனியே என்னால் என்ன முடியும்?"

"இப்படிப் பயந்தாயானால் முடியாததுதான். எதற்கும் தைரியம் வேண்டும். சம்பந்திகளும் நம்மைப் போல் மனிதர்கள்தானே? என்ன பண்ணி விடுவார்கள்? என்றும் அவளை அழைக்கப் போகிறதென்பது முடியாத காரியம். தலை தீபாவளி நீயே செய்து கொள்ள வேண்டியதுதான்" என்று காவேரியின் கணவர் ஒரே பதிலாகச் சொல்லி விட்டார்.

அப்புறம் அவரிடம் சொல்வதில் பிரயோஜனம் இல்லையென்று காவேரிக்குத் தெரியும். அவள் பயந்த ஸ்வபாவத்தைக் கண்டு அவளிடம் அங்கலாய்ப்பார் அந்த வீட்டில் யாருமில்லை. அவள் குழந்தைகள் கூட, "அவளுக்கு என்ன தெரியும்?" என்று அலட்சியமாக இருந்தன. "காவேரிக்கு ஒன்றும் தெரியாது" என்றுதான் ஊர் முழுதும் பேசும்.

★

உண்மையிலேயே அவளுக்கு ஒன்றும் தெரியாதா? விஷயம் இதுதான். அவள் கல்யாணமாகி வீடு வந்ததுமே சிறு வயதில் கைம்பெண்ணான நாத்தனார் ஒருத்தி வீட்டில் அதிகாரம் செலுத்தி வந்தாள். 'அவள் மனம் கோணக் கூடாது, அவளுக்கு எல்லாம் தெரியும்' என்ற மனோபாவத்தில் வீட்டில் தாய் தந்தையர்கள் அவளை நடத்தி வந்தார்கள். பெரியவர்கள் அவ்விதமாயிருக்கும் பொழுது மற்றவர்களுக்குக் கேட்க வேண்டுமா? அதுவும் புது நாட்டுப் பெண் என்ன செய்வாள்? எல்லாம் நாத்தனார் இட்டதுசட்டம். காவேரி ஸ்வபாவத்திலேயே ரொம்பவும் அடக்கமானவள். 'நான்' என்கிற அகந்தை கொஞ்சமும் கிடையாது. கணவரின் தமக்கை சகலமும் கவனித்துக் கொள்ளவே, தன் வீடு, தன் கணவர், தன் குழந்தைகள் என்கிற பாத்தியம் கூட அவள் தனியாகக் காண்பித்துக் கொள்ளவில்லை. "ஏதோ பெரியவர்கள் இருக்கிறார்கள், நமக்கென்ன?" என்று இருந்து விட்டாள்.

தாய் தந்தையர்கள் இருக்கும் பொழுதே வீட்டிற்கு எஜமானியாக விளங்கின நாத்தனார், அவர்களுக்குப் பிறகு தம்பியின் குடும்பத்திற்கு முழுதும் சர்வாதிகாரியானாள். வீட்டுக் காரியங்களைக் கவனிப்பது, வருகிறவர்கள் போகிறவர்களுடன் பேசுவது, உபசரிப்பது எல்லாம் நாத்தனார்தான். காவேரி பின்னுக்கே போய் விட்டாள். அவளை ஒன்றும் செய்ய வேண்டாமென்று வைத்து, பிறகு அவளுக்கு ஒன்றும் தெரியாது என்கிற வரைக்கும் வந்திருந்தது வீட்டு விஷயங்கள்.

இந்த விஷயத்தில் காவேரிக்கு மனக் குறை இல்லையா? உண்டுதான். இருந்தாலும், நாத்தனார் வஞ்சனையின்றி உழைக்கும் பொழுது அவள் என்ன செய்வாள்? வாழ்க்கை, சுகம், சந்தோஷம் எல்லாம் இழந்த நாத்தனாருக்குத் தம்பியின் குடும்பத்தைத் தாங்கி நிற்கும் பெருமையாவது இருக்கட்டுமே, அதில் தவறென்ன? எதையும் செய்து பழக்கமில்லாத காவேரிக்குத் தன்னிடத்திலேயே நம்பிக்கை குறைவுதான் செய்தது. "வீட்டுக் காரியமாயிருந்தாலும் ஏதோ முன்னே பின்னே இருந்தால் பாதகமில்லை. சம்பந்தி, மாப்பிள்ளை வந்து போகிற காரியமாயிற்றே!" என்று நினைக்கும் பொழுதே காவேரிக்குக் கவலையும் பயமுமாக இருந்தது.

தெருக்கோடியில் வசித்த ஒன்று விட்ட ஓர்ப்படி அபிராமி, சுமங்கலி. அவள் கொஞ்சம் ஒத்தாசையாக இருப்பாளோ என்பது காவேரியின்

ஆசை. அவளைக் கண்ட பொழுது சாத்தனூர் தலை தீபாவளிக்கு வர முடியா தென்று கடிதம் போட்டு விட்டதைச் சொன்னாள்.

அவ்வளவுதான்; உடனே அவள், "என்னுயிருக்கு, மங்களம் இப்படிப் பண்ணுவாளோ? வெளியிலிருக்கிறவர்கள் கூட வந்து நடத்த வேண்டிய சமயத்தில் வீட்டிலிருப்பவள் எங்கோ போய் உட்கார்ந்து கொண்டு, வர மாட்டேனென்பாளோ? வெறும் ஜனியில் இவளென்ன குடித்தனம் பண்ணுகிறது? சம்பந்தி மாப்பிள்ளை வர போறுன்னு ஒத்தாசை செய்யணும்?" என்று பேசத் ஆரம்பித்தாள்.

காவேரிக்கு ஏன் அவளிடம் சொன்னோம், பெரிய குற்றம் உண்டு பண்ணி விடுவாள் போலிருக்கிறதே என்று பயம்கூடத் தோன்றி விட்டது.

"அதொன்றுமில்லே, மன்னி! போன காரியம் ஆகாமல் வர மனமில்லே. வேறே ஒன்றுமில்லே. இவரைச் சொல்லுங்கோ: போய் அழைச்சுண்டு வாருங்கோன்னு, மாட்டே னென்கிறீரே! அதுதான் எனக்குப் பெரிசாயிருக்கு" என்று காவேரி புலம்பினாள்.

"இதோ பார், யார் எப்படி வேணுமானாலும் இருக்கட்டும். நீ கவலைப் படாதே. நான் பார்த்துக் கொள்கிறேன். உனக்கு என்ன வேணுமானாலும் சொல்லி யனுப்பு, ஓடி வருகிறேன். உன் சம்பந்தி என்னமோ 'இந்த சாத்தனூர் ஊர் வார் பிரமாதமாயிருக்கு' என்று எண்ணம். அது மங்களத்தின் காதிலே பட்டுடுத்து. அதனால் அவா வர போது, நான் இருக்கப்படாதுன்னு அவளுக்கு எண்ணம். அவளுக்குத் தெரிஞ்ச லக்ஷணம் அவ்வளவு தான்!" என்று வெகு பரிவாய்ப் பேசினாள்.

இவர்களுக்குள் மனஸ்தாபம் என்றறிந்து அவளுக்குச் சந்தோஷம். "இவர்கள் மட்டுமென்ன, தேவலோகத்து மனுஷாளா? சண்டை, பூசல் இல்லாம இருப்பதற்கு" என்று இவ்வளவு நாளும் அவளுக்கு வயிற்றெரிச்சல். அவள் பேச்சிலிருந்து காவேரிக்கு இது தெரிந்தது. இவைகளை யெல்லாம் பார்க்கும் பொழுது அவளுக்கு யாரை நம்புவது என்றே தெரியவில்லை.



கல்யாணமான பெண் ஊராளை வக்கு இப்பொழுது கொஞ்சம் நிலைவு தெரிந்து விட்டபடியால், அம்மாவின் மனநிலை ஒருவாறு புரிந்தது. "அம்மா! ஏன் கவலைப் படுகிறாய்? கண்டவர்களிடமெல்லாம் அங்கலாய்த்துக் கொள்வதில் பயன் என்ன? அவர்கள் பரிகாசம் செய்கிறார்கள். தீபாவளி தானே நடக்கும். கவலைப் படாதே!" என்று தைரியம் சொன்னாள்.

தன் கணவன் குற்றம் ஒன்றும் கண்டு பிடிக்க மாட்டா னென்பது அவள் நம்பிக்கை. அவன் அடிக்கடி எழுதும் ஆசைக் கடிதங்கள், அந்தத் தைரியத்தை அவள் மனத்தில் ஊட்டியிருந்தன. தன்னைப் பார்க்கவும் பேசவும் அவனுக்கிருக்கும் ஆவலைக் கடிதத்தில் படிக்கும் பொழுது, அவளுக்குத் தன்னிடத்திலோ, தன்னைச் சேர்ந்தவர்களிடத்திலோ குற்றம் குறைகள் தோன்றுமென்றே அவளால் நினைக்கவில்லை. தான் அவன் வரும்பொழுது அவனோடு பேசப்போவதைப் பற்றியும் நடந்து கொள்ளப் போவதைப் பற்றியுமே அவள் கனவு கண்டு கொண்டிருந்தாள்.

காவேரியின் தவிப்புக்காகவும் கவலைக்காகவும் தீபாவளி நிற்குமா? அது வரத்தான் செய்தது. அவளும் நினைத்து நினைத்து ஒன்று விடாமல் தான் செய்தாள். ஏதாவது முக்கியமானது தவறி விட்டால் என்ன செய்வது என்பது அவள் கவலை. பார்த்துப் பார்த்து ஒன்றி லொன்று குறைவில்லாமல் செய்தாள். அப்படி இருந்தும் அக்கா செய்தால் இன்னும் நன்றாயிருக்குமென்று அவளுக்குப் பட்டது. சாத்தனூர் கார்வார் இல்லாமல் வீட்டில் சத்தமே இல்லை. ஆட்கள் பயந்து பரபரப்பாய் ஓடியாடிச் செய்வதில் அமர்க்களமில்லை. அவசரத்திலும் பயத்திலும் அவர்கள் தவறு செய்வதும், அதை சாத்தனூர் திருத்துவதும் இது மாதிரி ஒரு சம்பவமுமில்லாமல், வெகு அமரிக்கையாகக் காரியங்கள் நடப்பதைப் பார்க்க, காவேரிக்கே சரியாகத் தோன்றவில்லை. வெறும் தீபாவளி கூட இன்னும் எவ்வளவோ அமர்க்களப் படுமே! தலை தீபாவளி இவ்விதம் சந்தடியின்றி இருந்தால்?

பலகாரங்கள் செய்தாகி விட்டது. மாப்பிள்ளைக்கு வேண்டிய மோதிரம் முதலானது வாங்கியாகி விட்டது. சம்பந்திக்கு முதல் தரமான புடவை, வேஷ்டி பார்த்து எடுத்தாய் விட்டது. இருந்தும், காவேரிக்கு ஏதோ குறை இருப்பதாகவே தோன்றிற்று. நடுக் கூடத்திலுட்கார்ந்து ஆக வேண்டிய காரியங்களைப் பேசுவதும், ஆட்களை நினைத்து நினைத்து ஏவுவதும், அவர்கள் சரியாகச் செய்யவில்லை யென்று சத்தம் போட்டுக் கண்டிப்பதும், இதெல்லாம் ஒன்றுமில்லை யல்லவா?

ஓர்ப்படி அபிராமிக்கு அடிக்கொருதரம் தன் ஒத்தாசையை நாடி வராமல் இவ்வளவு தூரம் செய்து கொண்டு விட்டாளே என்றுதான். அவள் தன்னிடம் அடிக்கடி வந்து நிற்பாள், தான் ரொம்ப ரொம்ப 'பிகு' பண்ணிக் கொண்டு, தன் கௌரவத்தை நிலை நாட்டிக் கொள்ளலா மென்பது அவள் ஆசை. அதற்கு இடமில்லாமல் போனது அவளுக்குப் பெரும் ஏமாற்றமே.

★

தீபாவளி யன்று சாயந்திரம் மாப்பிள்ளை, அவர் அம்மா இருவரும் வந்த பொழுது, அவர்களை வரவேற்கக்கூடக் காவேரிக்கு சந்தோஷமும் பயமுமாகவே இருந்தது. "சாத்தனூர் இல்லையே, அவன்தானே வரவேற்று

ஆக வேண்டும்?" என்று தானே ஒருவாறு சமாளித்துக் கொண்டு, வரவேற்க முன் வந்தாள். ஆனால் குரல் தாட்டியாகக் கிளப்பினாலன்றோ? அவள் அவர்களை வரவேற்றது "வாய் நிறைய 'வாருங்கோ!' என்று அழைப்புக்கூட இல்லையே!" என்று சம்பந்தியம்மா சந்தேகிக்கும்படி இருந்தது. கூடத்தில் உட்காரச் சொல்லும் சமயத்தில், உயரமாய் விசு பலகையில் உட்காரச் சொல்வதா, அவர்களுக்கென்று பிரத்தியேகமாகக் கீழே விரிக்கப்பட்டிருந்த ரத்தினக் கம்பளத்தில் உட்காரச் சொல்வதா என்கிற சந்தேகம் உதித்து, 'உட்காருங்கள்' என்று சொல்லவே தாமதிக்கச் செய்து விட்டது. காப்பி கொடுக்க அவளுக்கிருந்த பரபரப்பிலும் கவலையிலும் சம்பந்தியைத் தனியே சில நிமிஷங்கள் இருக்கச் செய்து விட்டுப் போகிறோமென்பதை அவள் உணரவில்லை. எல்லாவற்றிற்கும் மேலாக ஸரஸாவை மாமியார் வந்ததும் நமஸ்கரிக்கச் சொல்ல மறந்து போனாள். அந்தத் தவறுகளுக்கெல்லாம் காவேரியின் சங்கோசம், பயம், பரபரப்பு, கவலை இவைகளே காரணமென்று கண்டாளா சம்பந்தி? எல்லாவற்றையும் அவமரியாதை, அலக்ஷியம் என்பதாக எடுத்துக் கொண்டாள். ஏதோ தான் அழையாமல் வந்து உட்கார்ந்திருப்பது போலத் தோன்றிற்று அவளுக்கு. பிறகு கேட்க வேண்டுமா கோபம் வருவதற்கு? காவேரி, "வீட்டில் வேறு யாரையும் அழைத்து வரவில்லையா?" என்று கேட்டதற்கு, "நான் பெற்றுக் கொண்டிற மரியாதை போதாதா? இன்னும் எல்லாருக்கும் இது வேணுமா?" என்று அவள் கோபமாய்ப் பதில் சொன்னாள்.

காவேரிக்கு அந்தக் கோபத்திற்குக் காரணம் தெரியவேயில்லை. அவள் அதிகம் உபசரிக்க நினைத்துச் செய்யும் பொழுது மரியாதைக் குறைவு எங்கிருந்து வரும்? காவேரிக்குக் கொஞ்ச நஞ்சம் இருந்த தைரியமும் போய்விட்டது. மேலும் என்ன நேருமோ என்கிற திகில் அவள் மனதில் புகுந்து கொண்டு விட்டது. அவள் பயந்ததற்கு ஏற்றாற்போல் சம்பந்தி அம்மாள் சாப்பிட உள்ளே வந்த மாப்பிள்ளையைத் தனியே கூப்பிட்டு, "இதோ பார், ஏதோ தெரியாத்தனமாய் வந்துவிட்டேன். காலையில் ஊருக்குப் போக ஏற்பாடு செய்! என்னால் ஒரு நிமிஷமும் இந்த வீட்டில் இருக்க முடியாது. உங்கள் மாமியார் 'வா' என்பதற்குக் கூட வாய் முத்து உதிர்ந்து விடுமோ என்று இருக்கிறாள். பெண்ணை நமஸ்கரிக்கச் சொல்லக்கூட அவளுக்கு லேசில் மனது வரவில்லை. இந்த அவமரியாதையை என்னால் பொறுத்துக் கொண்டிருக்க முடியாது" என்றாள்.

மாப்பிள்ளைக்குத் தூக்கி வாரிப் போட்டது. அவன் மனைவியோடு சல்லாபம் செய்வது பற்றி எவ்வளவோ மனக்கோட்டைகள் கட்டி வந்திருக்கிறான். இப்பொழுது மனைவியைக் கண்டால் அரைகுறையாகப் பார்க்கிறானே தவிர, இன்னும் ஒரு வார்த்தை பேசவில்லை. இதற்குள் ஊருக்குக் கிளம்புவது பற்றி அம்மா ஏதோ கிளப்புகிறாளே? அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை. "என்ன அம்மா, என்ன நடந்தது?" என்று அம்மாவைச் சாவதானமாக விசாரித்தான். விஷயம் தெரிந்ததும், அம்மா நினைக்கும் விதம் வேறு, மாமியார் நடக்கும் விதம் வேறு என்பது அவனுக்கு விளங்கிற்று. இருந்தாலும் அதைச் சொல்லி அம்மாளின் அதிருப்தியைச் சம்பாதித்துக் கொள்ள அவனுக்குத் தைரியம் இல்லை. ஆகையால் அம்மாவை அவன் போக்கிலேயே சமாதானம் செய்வதில் முனைந்தான்.

"அம்மா! காலை ஏழரை மணிக்கெல்லாம் ரயிலாயிற்றே, சாப்பிடாமல் கிளம்பினால் ஊரார் எல்லாம் ஏதாவது நினைத்துக் கொள்ள மாட்டார்களா? அதற்கு இடம் வைத்துக் கொள்ளுவானேன்? சாயராத்திரிக்குப் போய் விடுவோமே!" என்று மெதுவாய் எடுத்துச் சொல்லி, அதற்கு ஒருவாறு அவளை இணங்கும்படியும் செய்தான்.

★

முதன்முதல் மனைவியோடு பேச வேண்டியவைகளைப் பற்றி அவன் எவ்வளவோ யோசித்து வைத்திருந்தான். இப்பொழுது அவை யொன்றும் உபயோகப் படவில்லை. அம்மாவின் கோபத்தைப் பற்றித் தான் முதல் பேச்சுப் பேச வேண்டி வந்தது. தனக்கும் அம்மாவுக்கும் நடந்ததை அப்படியே மனைவியிடம் சொன்னான். "அம்மா சற்று முன் கோபக்காரி, அவ்வளவுதான்! சமாதானம் செய்தால் சீக்கிரத்தில் மனம் மாறி விடுவாள். இல்லாவிட்டால் அவள் என்னையும் கூட்டிக் கொண்டு மறு நாளே ஊருக்குப் போய்விடுவாள்!" என்று அவன் தன் மனைவியிடம் சொல்லி வைத்தான்.

இதைக் கேட்ட பின்னும் ஸரஸா பேசாமலிருப்பாளா? படுத்துக் கொள்ளும் பொழுது அம்மாவிடம் தனிமையில், கணவன் சொன்னவைகளைச் சொல்லி வருந்தினாள்.

"அம்மா! ஏதாவது செய்து எங்கள் மாமியாரைச் சமாதானம் செய். இல்லாவிட்டால் உன் மாப்பிள்ளை நாளைக்கே ஊருக்குக் கிளம்ப வேண்டியதுதான்" என்றாள்.

காவேரி என்ன செய்வாள்? அவள் எதற்குப் பயந்தாளோ அதுவே நேருகிறதே! அவள் எவ்வளவோ நன்றாய்ச் செய்ய வேண்டுமென்று செய்தும், குற்றம் பலமாய் ஏற்படுகிறதே! ஸரஸாவின் வருத்தத்தைக் காண அவளுக்குச் சகிக்கவில்லை. கணவரிடம், "இதற்கு என்ன செய்கிறது? இப்பொழுதே அந்தப் பெண் வருத்தப்படுகிறதே!" என்று அங்கலாய்த்துக் கொண்டாள்.




"நான் பெற்றுக் கொண்டிற மரியாதைபோதாதா?" என்றாள் மாமியார்.

இதைக் கேட்ட காவேரியின் கணவருக்கு 'இந்தப் பெண்களே இப்படித்தான். எதற்காவது அமர்க்களப் படுத்துகிறது!' என்று தோன்றிற்று. வெறுப்பும் கோபமும் வந்தது. "சம்பந்தியம்மாள் கோபத்திற்கு நான் என்ன பண்ண முடியும்? ஏதோ செய்து சமாளித்துப் பார்" என்றார். "உன் பேரில்தானே குற்றம் சொல்லுகிறாள்? நீதான்

பார்த்துக் கொள்ள வேண்டும்!" என்பது போலிருந்தது அது.

இப்படி ஒரு புருஷன் சமயத்தில் ஒத்தாசை ஏதும் செய்யாவிட்டால் காவேரிதான் என்ன செய்வாள்? அவள் கவலை உச்ச நிலையை அடைந்தது. "விடிந்தால் தீபாவளி முடிந்து விடுகிறது; சம்பந்தி போனால் போகட்டுமே!" என்று விட்டு விடுவது நன்றாயிருக்குமா? அந்தக் கோபம்தான் எந்நாளுக்குப் போகுமோ? மேலும் இரண்டு நாள் இருந்து போக நினைத்து வந்திருக்கும் மாப்பிள்ளையை முன்னாடியே போகச் செய்வதுதான் அழகா? பிறகு ஊராரை என்ன வார்த்தை சொல்லித் தேற்றுவது?

இந்த ஆபத்துக்களிலிருந்து விடுவித்துக் கொள்ள அவளுக்கு ஒரு வழி தோன்றிற்று. அதை நடத்திப் பார்ப்பது தவிர, வேறொன்றும் அவள் புத்திக்கு எட்டவில்லை.

★

மறுநாள் அதன் பலனாகத் தீபாவளி இனிது நிறைவேறியது. சம்பந்தியம்மாள் கோபம் தணிந்து கூடவே இரண்டு நாளிருந்து விட்டுச் சென்றாள். மாப்பிள்ளையைப் பற்றிக் கேட்க வேண்டுமா? அவ்வளவு சடுதியில் மனைவியை விட்டுப் பிரியவேண்டியிருக்கிறதே என்கிற ஒரு குறைதான் அவனுக்கு.

தீபாவளி எப்பொழுது முடியப் போகிறது என்று பரக்கப் பரக்கத் தனது விரதத்தை முழுதும்கூட முடிக்காமல் வந்து சேர்ந்தாள் நாத்தனார். தம்பியின் குடும்பத்தை முழுதும் கைவிட மனம் வருமா அவளுக்கு? ஏதோ வெறுப்பினால், விரதத்தைச் சாக்காக வைத்துக் கொண்டு வராவிட்டாலும், அவள்



காவேரிக்கு ஏன் அவளிடம் சொன்னோம் என்று தோன்றிவிட்டது.

மனம் முழுதும் தலை தீபாவளியில் தானிருந்தது.

அவள் வரும்பொழுதே பார்த்து விட்ட கோடியாத்து அபிராமி, அவசரம் அவசரமாய் அவளை வரவேற்கக் கூடவே வந்து சேர்ந்தாள். காவேரியின் மனதில் உண்டு பண்ண முடியாத வேற்றுமையை நாத்தனாரிடமாவது உண்டு பண்ண வேண்டுமென்பது அவள் ஆசை. அதற்கு இதை விட்டால் சமயம் வேறு ஏது?

"என்ன, மங்களம்! இப்படிப் போய் உட்கார்ந்துட்டே. தலை தீபாவளிக்கு வராமலேயே இருந்துட்டியே! காவேரி எல்லாம் நன்னாத்தான் பண்ணினா. நீ இல்லாத குறை ஒன்றுதான். காவேரிக்கு ஒண்ணும் தெரியாதுன்னு நாம நினைச்சோம்! என்ன, போ! என்னமாத்தான் செஞ்சா? சம்பந்தி உபசாரம்தான் சாமான்யமா? வேளைக்கு வேளை என்ன டிபன், என்ன சாப்பாடு! ஒரே தடபுடல். சம்பந்திக்கு வாங்கின புடவை ஒன்னே போதும். மாப்பிள்ளைக்குச் செஞ்சது அதைவிட நன்னாயிருந்தது. சம்பந்திக்குப் பரம சந்தோஷம். கல்யாணத்திலே ஆயிரம் பாடு படுத்தினாளே! உன்னை அத்தனை குற்றம் சொன்னாளே! காவேரியை என்னமாக் கொண்டாடறா. தெரியுமா? நேற்றுத் தான் ஊருக்குப் போனா. காவேரிக்கு இவ்வளவு தெரியும்னு யாருக்குத் தெரியும்?" என்று மேலும் மேலும் அடுக்கிக் கொண்டே போனாள்.

காவேரியின் சாமர்த்தியத்தைப் புகழக் கேட்ட நாத்தனாருக்குச் சந்தோஷமாயிருக்குமா? அவள் மதிப்பே அன்றோ அதனால் குறைந்து விடுகிறது?

★

ஆனால், அதே சொற்கள் காவேரியை அம்மாளுக்குச் சந்தோஷப் படுத்தியிருக்க வேண்டுமல்லவா? அதுதானில்லை. சம்பந்தியம்மாளின் கோபத்தைத் தணிக்க அவள் செய்தது தெரிந்தால், அபிராமி தன்னை அவ்விதம் புகழ்வாளா?

தீபாவளி ஸ்நானமானதும் காவேரி வெற்றிலைத் தட்டில் புடவையை வைத்து சம்பந்தியிடம் கொடுத்து, "எனக்கு ஒன்றும் தெரியாது. நான் செய்ததை பெரிய மனசு பண்ணி ஏற்றுக் கொள்ள வேணும். ஏதோ முன்னே பின்னே இருந்தாலும் மன்னித்துக் கொள்ள வேண்டும்" என்று சொல்லிக் கண்களில் நீர் ததும்ப அவளை நமஸ்கரித்து வேண்டிக் கொண்டது யாருக்குத் தெரியும்? அவளுக்கும் சம்பந்தியம்மாளுக்கும், அந்த அறையில் மாட்டியிருந்த சுவாமியின் படத்திற்கும் மட்டும் தான் தெரியும். கேவலம், அடிபணிந்து காரியத்தை நிறைவேற்றியிருக்கிறாள். அது சாமர்த்தியமாகுமா? நாத்தனார் மட்டும் தீபாவளிக்கு இருந்திருந்தால் இது மாதிரி நேர்ந்திருக்குமா? நேர இடம் தான் கொடுத்திருப்பாளா? தவறு இருந்தாலும், சம்பந்திக்குக் காவேரியின் பேரில் கோபம் வந்திருக்குமா? காவேரி அவள் காலில் விழும்படி ஏற்பட்டிருக்குமா? பாவம்; இந்த சந்தேகம் காவேரியை உள்ளூற வாட்டி வருத்தும் பொழுது, யார் எவ்வளவு புகழ்ந்தாலும் அவளால் சந்தோஷப்பட்டுப் பெருமை கொள்ள முடியுமா?

## சங்கீதத்தின் உபயோகம்



## பாரதநாட்டின் சுயபரிபூர்த்தி முன்னேற்றத்தில் அருங்காக்ஷிகள்

# கலர் ஷர்ட்டிங்குகளில் நவீன உயர்தர ரகங்கள்





பக்கிங்ஹாம் & கர்னாடிக் மில்ஸ் அவர்களுடைய பெயர் போன "பயர்பிலே", "லண்டலின்" கலர் ஷர்ட்டிங்குகளை ஜனங்களுக்கு அறிமுகப்படுத்தினதிலிருந்து ஓர் புதிய அத்தியாயம் ஆரம்பமாயிற்றென்றே கூறவேண்டும்—ஷர்ட்டிங்குகளில் புதுப்புது உயர்ரக மோஸ்தர்கள் "பாஷ"னாகத் தொடங்கின. கலர் ஷர்ட்டுகளின் விஷயத்தில் ஜனங்களிடையே இருந்த வெகு நாளைய துரபிமானங்களெல்லாம் ஒரே இரவில் மறைந்து போனதல்லாமலும் இந்தத் துணிகள் நாகரீக உடையணியும் ஆடவர்களின் அபிருசிகளாக விளங்கலாயின.

பற்பலவித சேர்ப்பாடு முறைகளைக் கையாண்டு இம்மெல்லிய துணிகள் நெசவு செய்துண்டாக்கிய கைதேர்ந்த வேலையாட்கள் தற்போது நம் வீடு வாசல்களை எதிரியணுகாமல் பாதுகாத்துவரும் போர்வீரர்களுக்கு அகத்தியம் வேண்டிய தேர்த்தியான உடுமணிகள் [விவரங்களை பாதுகாப்பை முன்னிட்டு வெளியிட முடியாமலிருக்கிறோம்.] மிகத் தயாரிப்பதில் மூழ்ந்து வேலை செய்து வருகின்றனர். யுத்த காலத்திற்கான உடைகள் விஷயத்தில் அன்றாடமெழும் புதுப்புதும் பிரச்னைகளை அவ்வப்போது சமாளிப்பதில் அவர்கள் காட்டிவரும் திறமையும் சாமர்த்தியமும் யுத்த பிற்காலம் இன்னும் எத்தனையோ அதிகம் நேர்த்தி வாய்ந்த நவநவ ஷர்ட்டிங் டிஸைன்கள் கற்பனை செய்து முன்னணியில் சிறந்து விளங்கச் செய்ய கட்டாயம் உதவும்.



சீவிச் சிக்கெடுக்கும் இயந்திரம் பக்கிங்ஹாம் & கர்னாடிக் துணிகளுக்கு யதேஷ்டமாக உபயோகித்து வருவது போன்ற நூல்கள் நன்கு சீவிச் சிக்கெடுத்துச் செம்மையாக்கப் பட்டுள்ள நார்களிலிருந்தே நூற்கப்படுகின்றன.

# பக்கிங்ஹாம் & கர்னாடிக் மில்ஸ்

சென்னை

மானேஜிங் ஏஜண்டுகள்: பின்னி & கோ., (சென்னை), லிமிட்.



பந்தநல்லூர் ஜயலக்ஷ்மி



உருகுது
பதைக்குது
மனம் கல்லோடி
போடி
பதறி வருகுது
குலுக்கு
தளுக்கு
ராகம் : காம்போதி]
பல்லவி
பதறி வருகுது உருகுது தென்னுவி
பதைக்குது — வகை
சொல்லடி — சற்றே
நில்லடி — மனம்
கல்லோடி — அடி
தளுக்கு குலுக்கு
மெனுக்கென்ன போடி! (பதறி)
அனுபல்லவி
எதிரில்லாத பழனியின்
வேலவர் தனையே
இருத்திக் கருத்தில்
வைத்த பின் :
ஏதோ மதன் கணை
மார்பினில் பாயுதே
எந்தன் துரை கந்த
சாமியைக் கூட்டிவா! (பதறி)


பழனி
வேலவர்
கருத்தில்
வைத்த பின்
கண்ண
பாயுதே
எந்தன் துரை
மதன்
[ தாளம் : திஸ்ரம்
சரணம்
வாடி எந்தன் வடி
வேலரைக் கூட்டிவா
கூடி மருவிக்
குலாவி விளையாட
பாடுவார் காம்போதி மாயப்போடி
போடுவார் என்மீது
போடி அவரைப்போல்
எது ஜோடுண்டோடி
பிடித்தார் எந்தன் கை
கொடுத்தார் மாணிக்கம்
நாடி அவருக்கேற்ற
செஞ்சொல் பதம் பாடி
மோடி செய்யாமலே
ஓடி அழைத்துவா! (பருதி)
கல்கி தீபாவளி மலர்
1944



பாரத நாட்டில் எஃகு உபயோகிப்
பவர்கள் எல்லோருக்கும் எமது
தீபாவளி நல் வாழ்த்துக்கள்



**TATA**

**டாடா**

வெளியீடு: தி டாடா அயர்ன் அன்டு ஸ்டீல் கம்பெனி, லிமிடெட்.
தலைமை சேல்ஸ் ஆபீஸ்: 102A, கிளைவ் தெரு, கல்கத்தா,



# ஒரு சொட்டுக் கண்ணீர்

நாடோடி

அன்று பாரதி தினம் கொண்டாடிக் கொண்டிருந்தார்கள்.

"தண்ணீர் விட்டோ வளர்த்தோம்,
சர்வேசா இப்பயிரைக்
கண்ணீரால் காத்தோம்"

என்ற பாரதி பாட்டை ஒரு மாணுக்கர் கல்லும் கரைந்துருகும்படி அத்தனை உருக்கமாகப் பாடிக் கொண்டிருந்தார். நல்ல வேளை கட்டிடம் சிமெண்டுக் கட்டிடமாய் இருந்ததால் உருகிக் கீழே விழுந்து விடவில்லை. ஆனால் அந்த மனுஷர் கண்ணில் ஒரு சொட்டுக் கண்ணீராவது வரவேண்டுமே, கிடையாது! ஆனால் அந்த மனுஷன் மீதும் வஞ்சனை யில்லை. ஒரு சொட்டுக் கண்ணீராவது வரவழைத்தால்தான் நாம் பாவத்தோடு பாடியதாகச் சொல்வார்கள் என்பதற்காக அந்த மாணுக்கர் தம் கண்ணிலிருந்து ஒரு சொட்டுக் கண்ணீர் வரவழைப்பதற்கு எவ்வளவோ சிரமப்பட்டார்! 'கண்ணீர்' என்ற இடத்தை எப்படி, எப்படி மாற்றி, மாற்றி, இழுத்துப் பாடமுடியுமோ, அப்படியெல்லாம் பாடிப் பார்த்தார். ஊஹூம், அந்தப் பாழும் கண்ணீர் ஒரு சொட்டாவது அவர் உதவிக்கு வந்து அவர் மானத்தைக் காப்பாற்ற வேண்டுமே, கிடையாது.

சுதந்திரம் கிடைக்காமல் இந்திய மக்கள் படும் அவநிலை மனக் கண்ணால் பார்த்து மனம் உருகினாவது கண்ணீர் வருமோ என்பதற்காக கண்ணை மூடி, மூடித் திறந்தார். ஊஹூம், ஒரு சொட்டுக் கண்ணீர்கூட, கண்ணில் வரவில்லை.

எதிரே யுள்ள அடிமை இந்தியர்களைப் பார்த்துப் பாடாமல், தலைக்கு மேலே தொங்கிக்கொண்டிருந்த மின்சார விளக்கைப் பார்த்துப் பாடினாலாவது கண்ணீர் வருமோ என்பதற்காக, விளக்கைப் பார்த்துப் பாடினார். பிரயோசன மில்லை.

பிறகு எதிரே இருந்த தூணைப் பார்த்துப் பாடினார். பயன் இல்லை. கீழே தரையைப் பார்த்துப் பாடினார். பலன் இல்லை. மாணவருக்கு என்ன பண்ணுவது என்றே தெரியவில்லை. செத்துப் போன தம் அருமைப் பாட்டியை நினைத்துக் கொண்டு பாடினாலாவது கண்ணீர் வருமோ என்று பாட்டியையும் நினைத்துக்கொண்டார். ஊஹூம், பயன் இல்லை. "நீ பாட்டியைத்தான் நினைத்துக் கொள், அல்லது பாட்டிக்குப் பாட்டியைத்தான் நினைத்துக்கொள். நான் உன் உதவிக்கு வரப்போவதில்லை" என்று கண்ணீர் கையைக் கட்டிக்கொண்டு சத்தியாக்கிரகம் செய்து விட்டது.

இதைப் பார்த்தபோது இதே மாதிரி நான் அவஸ்தைப்பட்ட எத்தனையோ சம்பவங்கள் என் ஞாபகத்துக்கு வந்தன.

அது என்னமோ தெரியவில்லை, நானும் எனக்கு ஞாபகம் ஏற்பட்டதிலிருந்து பார்க்கிறேன், கண்ணீர் விடவேண்டிய எத்தனையோ சமயங்களில் என்னால் ஒரு சொட்டுக் கண்ணீர் கூட விட முடிந்ததில்லை.

எனக்குத் தெரிந்தவரை இந்தப் பாழும் கண்ணீர் மிகவும் ஒர வஞ்சனையுள்ள வஸ்து என்றே கூறுவேன். ஸ்திரீகளைக் கண்டால் புருஷர்கள்தான் அசடு வழிய, அவர்கள் காலால் இட்ட வேலையைத் தலையால் செய்து முடிக்கிறார்கள் என்றால் இந்தக் கண்ணீரும் அப்படித்தான். ஸ்திரீகள் கூப்பிட்டால், அவர்கள் காரணமின்றிக் கூப்பிட்டாலும் சரி, இதோ இருக்கிறேன் என்று ஓடி வருவது, புருஷர்கள் கூப்பிட்டால், அவர்கள் என்ன நல்ல போகிற காரியமாகக் கூப்பிட்டாலும் சரி, கையைக் கட்டிக்கொண்டு வராமல் இருந்து விடுவது என்று இந்தக் கண்ணீர் இருக்கிறது.

அத்தனைக்கும் கண்ணீருக்குக் காரணமான 'லாக்ரிமல் கிளாண்ட்ஸ்,' புருஷர்கள், ஸ்திரீகள் எல்லாருக்கும் ஒரே மாதிரிதான் பகவான் கொடுத்திருக்கிறார் என்று உடல் தத்துவ நிபுணர்கள் கூறுகிறார்கள்.



சின்ன வயதில் நானும் என் தங்கை பாருவும் சேர்ந்து விளையாடிக் கொண்டிருப்போம். குழந்தைகள் சேர்ந்து விளையாடினால் சண்டை வராமல் இருக்குமா? ஏதாவது காரணமின்றி பாரு என்னை அடிப்பாள். நான் என்ன கையாலாகாதவனா! உடனே வஞ்சனையின்றி வாங்கிய அடியை வட்டியும் முதலுமாகத் திருப்பிக் கொடுத்து விடுவேன்.

நான் கொடுத்த அடியைப் பெற்றுக் கொண்டதும் அதற்காகப் பாரு உடனே கதற ஆரம்பிக்கிறாளா, இல்லையா என்பது பக்கத்தில் அப்பா, அம்மா யாராவது இருக்கிறார்களா, இல்லையா என்பதைப் பொறுத்தது. பக்கத்தில் அப்பா, அம்மா யாராவது இருந்தார்களோ, என்னமோ தேள் கொட்டியவளைப் போல், "ஹோ" என்று அழத் தொடங்கி விடுவாள்.

அப்பா, அம்மா யாரும் இல்லையென்றால் அழமாட்டாள். ஆனால் நான் அவளை அடித்து ஒரு மணி நேரம் ஆகி யிருந்தாலும் சரி,

அவர்களைக் கண்டதும், நான் அப்பொழுது தான் அவனை அடித்தது போல 'ஹோ' என்று கதற ஆரம்பித்து விடுவான். அத்தனைக்கும், நான் அடித்ததைவிட பாரு என்னைப் பலமாக அடித்திருப்பான். இருந்தும் ஒரு சொட்டுக் கண்ணீராவது என் உதவிக்கு வரவேண்டுமே! வராது.

ஆகவே பாரு அழுது கொண்டு, நான் அழாமல் இருப்பதைப் பார்த்துவிட்டு, என் பெற்றோர்கள் பாரு பக்கம் சேர்ந்து கொண்டு அவனைச் செல்லம் கொஞ்சுவார்கள். என்னை அடிப்பார்கள்.

வீட்டில்தான் இப்படி என்றால் பள்ளிக்கூடத்திலும் அப்படித்தான். எனக்குக் கணக்கு வாத்தியாராக வந்து சேர்ந்தவர் போன ஜன்மத்தில் நாட்டுக் கோட்டைச் செட்டியாராக இருந்திருப்பாரோ, என்னமோ, எப்பொழுது பார்த்தாலும் இத்தனை ரூபாயை இத்தனை மாதத்துக்கு இத்தனை வட்டிக்கு விட்டால் மொத்தம் வட்டி என்ன வரும் என்று கணக்குக் கேட்பார். அந்தப் பாழும் வட்டிக் கணக்கு எனக்கு வரவே வராது.

வராவிட்டால் என்ன? இப்பொழுது என்ன நான் பாங்கிக் குமாஸ்தா வேலையா பார்க்கிறேன்? இல்லை, பணத்தை வைத்துக் கொண்டு யாரிடம் வட்டிக்கு விடலாம் என்று தவிக்கிறேன்!

ஆனால் எங்கள் கணக்கு வாத்தியார் அப்பொழுது கண்டாரா, பின்னால் இந்த வட்டிக் கணக்கு எனக்கு உபயோகப்படப் போகிறதில்லையென்று! ஆகவே கணக்குச் சரியாகப் போடாததற்காகக் கணக்கு வாத்தியார் என்னைப் பிரம்பால் சுளீர், சுளீர் என்று அடிப்பார். அடித்தால் வலிக்கத்தான் செய்யும். வலிக்கிறது என்று காட்டிக் கொள்வதற்காக அழுவதற்கும் பிரயத்தனம் செய்வேன். ஆனால் என் கண்ணில் ஒரு சொட்டுக் கண்ணீர்கூட வராததைக் கண்டு வாத்தியார் எனக்கு அடி உறைக்க வில்லையாக்கும் என்று நினைத்துக் கொண்டு மேலும் மேலும் அடிப்பார்.

இந்தக் கண்ணீர் ஓர் வஞ்சனையுள்ள வஸ்து மாத்திரம் அல்ல, விவஸ்தை கெட்ட வஸ்துவுங்கூட. வருத்தத்தினால் மட்டும் அல்ல, சந்தோஷத்தினாலும் கண்ணீர் வரும் என்று மனோ தத்துவ ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள்.

அப்படியாவது நான் துக்கப்படும் சமயத்தில் வந்து உதவி புரியாத இந்தக் கண்ணீர், நான் சந்தோஷப் படும் சமயத்திலாவது என் உதவிக்கு வந்திருக்கிறதா, கிடையாது.







என் கல்யாணத்தில் மிகவும் சந்தோஷமாக இருக்க வேண்டியவன் நான்தானே? சந்தோஷமாக யில்லாவிட்டாலும், சந்தோஷமாக இருந்ததாகக் காட்டிக்கொள்ள வேண்டியவன் நான்தானே? ஆகவே, ஆனந்தக் கண்ணீர் விடுவதற்காக, நான் எவ்வளவோ பிரயாசைப் பட்டும் வராமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கையில் என் மாமியார் குடம் குடமாக ஆனந்தக் கண்ணீர் விட்டால் எனக்கு எப்படி இருக்கும்? சரி, மாமியார் போனால் போகிறாள், இந்த அசட்டுப் பெண்ணை (ஐயோடி அம்மா சரசு! சண்டைக்கு வந்துவிடாதே! சும்மாக் கட்டுரைக் கோசரம் எழுதுகிறேன்) கல்யாணம் பண்ணிக் கொள்வதற்கும் ஒரு அசட்டு மாப்பிள்ளை அகப்பட்டானே என்ற சந்தோஷம் மாமியாருக்கு இருக்கலாம், ஆனால் மற்ற ஸ்திரீகளும் என் மாமியாரை மிஞ்சும்படியாய்க் கண்ணீர் விட்டால் எனக்கு எப்படி இருக்கும்?

சாதாரணக்கண்ணீர் விடுவதற்கே இத்தனைத் திண்டாட்டமாய் இருக்கும்போது, ஒவ்வொருவர் தேச நிலைமையை எண்ணி ரத்தக் கண்ணீர் விட்டதாகக் கூறுகிறார்களே, எப்படித்தான் விட்டார்களோ, பகவானைத்தான் கேட்க வேண்டும்.

நினைத்த மாத்திரத்தில் கண்ணீர் விட முடியாது, ஏதாவது துக்கமோ சந்தோஷமோ ஏற்பட்டால்தான் கண்ணீர்விட முடியும் என்று மனோதத்துவ ஆராய்ச்சி நிபுணர்கள் கூறுகிறார்கள். இவர்கள் சரசுவைப் பார்த்ததில்லையென்றே நினைக்கிறேன். பார்த்திருந்தால் இப்படிச் சொல்லியிருக்க மாட்டார்கள்.

ஏனெனில் நான் சரசுவைக் கவனித்த மட்டில், அவள் தன் மனக் கருத்துக்களை எனக்குத் தெரியப் படுத்துவதற்கு அதை ஒரு பாஷையாகவே உபயோகப் படுத்துகிறாள் என்று நினைக்கிறேன்.

உலகமெங்கும் உள்ள ஸ்திரீகள் பழக்க வழக்கத்தால், நடை, உடையால் வேறுபட்டிருந்த போதிலும், பாஷையால் ஒன்றுபட்டிருக்கிறார்கள். எல்லா ஸ்திரீகளும் இந்தக் கண்ணீர் பாஷையைத் தெரிந்து வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

ஆங்கில அழகி மேரி தன் காதலன் ஜார்ஜுடன் பேசுவது இந்தக் கண்ணீர் பாஷையில்தான்.

சீன அழகி மிங்சாங் தன் அழகன் சாங்கங்குவுடன் பேசுவதும் இந்தக் கண்ணீர் பாஷையில்தான்.

எத்தியோப்பிய அழகி மடில் மபாபா தன் நாயகன் மாலிமாலாஷியுடன் பேசுவதும் இந்தக் கண்ணீர் பாஷையில்தான்.

இருந்தும் புருஷர்கள் இந்தப் பாஷையைக் கற்றுக் கொண்டதாகத் தெரியவில்லை. கற்றுக் கொள்ளவும் முடியாதுபோல் தோன்றுகிறது.

கல்யாணம் ஆனதிலிருந்து சரசு இந்த பாஷையில்தான் தினம் என்னோடு பேசிக் கொண்டு இருக்கிறாள். இருந்தும் இந்த பாஷை புரியாமல் நான் தினம் திண்டாடிக்கொண்டிருக்கிறேன். பாஷை புரியாததால் சரசு எதற்காகக் காரணம் இன்றிக் கண்ணீர் விடுகிறாள் என்று கூடக் கலங்கி யிருக்கிறேன்.

யாரோ ஒருவர் கண்ணீரை ரஸாயன முறைப்படி ஆராய்ச்சி செய்து, கண்ணீர் என்றால் இத்தனை உப்பு, இத்தனை ஜலம் என்று கணக்கெடுத்துச் சொல்லி யிருக்கிறார். அதன்படி அந்த உப்புத் தண்ணீரைக் கண்டு நாம் கலங்குவானேன் என்று விஷயம் தெரியாதவர்கள் கேட்கலாம்.

அப்படிச் சொல்லுகிறவர்கள் அவரவர்கள் மனைவியின் கண்ணில் கண்ணீர் வருவதைக் கண்டு கலங்காமல் இருக்கட்டும், கேட்கிறேன்.

| | | |
|---|---|---|
| சினிமா போகவேண்டுமானால் | | ஒரு சொட்டுக் கண்ணீர். |
| ஜாக்கெட் வேண்டுமானால் | ... | இரண்டு சொட்டுக் கண்ணீர். |
| புடவை வேண்டுமானால் | ... | மூன்று சொட்டுக் கண்ணீர். |
| நகை வேண்டுமானால் | ... | நான்கு சொட்டுக் கண்ணீர். |
| பிறந்தகம் போக வேண்டுமானால் | ... | பத்து சொட்டுக் கண்ணீர். |

ஸ்திரீகள் அழுத கண்ணீர் கூரிய வாளை யொக்கும் என்று வசனம் உண்டு. ஆனால் என்னைப் பொறுத்த மட்டில் சரசுவின் கண்ணீரை விடக் கொடிய வாள் என்று உலகத்தில் இருப்பதாகத் தெரியவில்லை.

இந்த வாளை உபயோகிப்பதற்கும் சரசு ஒரு தனி வழி கற்று வைத்துக் கொண்டிருக்கிறாள். இதை அவள் வேண்டிய அளவுக்கு மீறி அதிகமாகவோ, அல்லது குறைவாகவோ உபயோகிப்பதில்லை.

ஒவ்வொரு சமயம் ஒரு சொட்டு, இரண்டு சொட்டு, மூன்று சொட்டு என்று கண்ணீரைக் கணக்காக விடும்போது, அவள் பக்கத்தில் கண்ட முறையில் ஏதாவது ஜாபிதா தயாரித்து வைத்துக் கொண்டிருக்கிறாளோ என்று கூடத் தோன்றுகிறது.

இப்பொழுதெல்லாம் அம்மாளைப் பின்பற்றி என் மூன்று மாதப் பெண் அனுராதாவும் அழ ஆரம்பித்திருக்கிறாள். தனக்கு என்ன காரியம் ஆகவேண்டியிருந்தாலும் சரி, உடனே அழுதுவிடுவது என்று வைத்துக் கொண்டிருக்கிறாள். அப்படியாவது தன் தாயாரைப்போல் கண்ணீரைக் கணக்காகச் செலவழிக்கிறாளா, கிடையாது. குடம், குடமாகக் கண்ணீர் விடுகிறாள்.

இதைப் பார்க்கும்போது இவளுக்கென்றே பிறந்து வளர்ந்து வரும் என் மாப்பிள்ளை இவள் கையில் என்ன பாடுபடப் போகிறானோ என்று நினைத்து நடுங்குகிறேன். அவனிடம் எனக்குள்ள அனுதாபத்தைக் காட்டுவதற்காக நான் இப்பொழுதே ஒரு சொட்டுக் கண்ணீர் விடத் தயார் — ஆனால் அந்தப் பாழும் கண்ணீர் வந்தால்தானே!

# யுத்தம் முடிந்தது; சமாதானம் வந்தது

ஜெயித்தவர்களும் தோற்றவர்களும் இப்படிக் காட்சி அளிக்கிறார்கள்.

யுத்த லக்ஷ்யம்

யுத்தம் முடிவதற்குள்ளே யுத்த லக்ஷ்யமும் காலமாகிவிட்டது.



யுத்தத்திற்குப் பிறகு மேனாட்டில் ஆண் பிள்ளைகளுக்கு அசாத்யக் கிராக்கி












பிரஜா உற்பத்தியை விருத்தி செய்ய அதி தீவிரப் பிரசாரம்

# Godrej

# கோத்ரெஜுக்கு நன்றி பாராட்டு



தீயையும் கொள்ளைக்காரரையும் எதிர்த்து நின்று, நீண்ட காலமாக வெற்றிக்கொடி நாட்டியவர் கோத்ரெஜார். அவர்கள் வெகுமானித்து வரும் பாராட்டுப் பத்திரங்களுக்கு ஒரு கணக்கில்லை; இப்பொழுதும் புதிது புதிதாக வாழ்த்துக்கள் வந்து குவிகின்றன. சமீபத்தில் பம்பாயில் நிகழ்ந்த, உள்ளத்தைக் கலக்கும் வெடி விபத்தைத் தொடர்ந்து வந்து பெருங் கேடு விளைந்த கோரத் தீயில், அரிய சேவை செய்த கோத்ரெஜ் பேழைகளைப் பாராட்டும் எத்தனையோ நற்சாட்சிப் பத்திரங்களில் ஒன்றை மாத்திரம் (அதிகம் சேர்க்க இடமில்லாமையால்) இங்கே காணலாம். தினசரிப் பத்திரிகைகளிலும், வாரப் பதிப்புகளிலும், வேறு எத்தனையோ கோத்ரெஜ் பேழைகளின் தீரச் செயல்களைப்பற்றி நீங்கள் படிக்கலாம். சுக்கு நூறாக்கும் வீழ்ச்சிகள், நாள் கணக்காக அக்கினியில் மூழ்கிக் கிடத்தல், எரிந்து விழுவதும், வெடி மருந்தால் இடித்துத் தள்ளப்படுவதுமான கட்டடக் குவியல்களினிடையே, தீயணைக்கும் இயந்திரங்களின் சகாயம் பலன்படாததால் புழுங்குதல், இதுபோன்ற கோரக் குண்டு வீச்சிற்குச் சமானமானதும், கற்பனையைக் கடந்ததும், அறவே எதிர்பார்க்க முடியாததுமான இன்னல்களைக் கடந்து, அவற்றுள் சேமிக்கப்பட்டுள்ள பொருட்களைக் காப்பாற்றிவர முடியுமென்று எந்தப் பேழை செய்வோனும் நம்பி யிருக்க மாட்டான்.

கோத்ரெஜ் & பாய்ஸ் மாங். கோ., லிட்.,
லால்பாக், பரேல், பம்பாய்.

பம்பாய், 24—4—1944.

ஐயன்மீர்!

உங்களிடமிருந்து பல வருடங்களுக்கு முன்பு வாங்கிய 30 அங்குலம் உயரமுள்ள கோத்ரெஜ் பேழை, சமீபத்தில் ஏற்பட்ட கோர வெடி விபத்துத் தீயினின்றும் வெற்றிகரமாக வெளிவந்தது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். வெளிநாட்டில் பிரபல கம்பெனியாரால் செய்யப்பட்ட பேழையில் வைத்திருந்த பொருட்களெல்லாம் தீயிற்கு இரையாயின. ஆனால், உங்கள் பேழையிலிருந்த முக்கிய தஸ்தாவேஜுகளும், நோட்டுகளும், நகைகளும் ஒரு கேடுமின்றி, அதே தீயினின்றும் வெளி வந்தன.

உங்களை எவ்வளவு பாராட்டினாலும் மிகையாகாது. எங்கள் பாராட்டுதலுக்கு அறிகுறியாக, இதுபோன்ற வேறொரு பேழையை அனுப்பித்துத் தரும்படி கேட்டுக்கொள்கிறோம்.

இப்படிக்கு,

(Sd.) லீஞ்ஜீ முஞ்ஜீ

முதலாளி, பிரேம்ஜி உமர்ஜி அண்ட் கோ., கர்னாக் பந்தர்,
இரும்பு மார்க்கெட், பம்பாய்.

**கோத்ரெஜ் & பாய்ஸ் மாங்., கோ., லிமிடெட்,**

**நாடெங்கும் ஆபீஸ்களும் ஏஜன்ஸிகளும்.**

சென்னை: 164, பிராட்வே.

# ஜமீன்தார் மகன்

## 1. முன்னுரை

★ சிலர் பிறக்கும்போதே கையில் பேனாவைப் பிடித்துக் கொண்டு எழுத்தாளராகப் பிறக்கிறார்கள். சிலர் முயற்சி செய்து எழுத்தாளராகிறார்கள். இன்னும் சிலர் எழுத்தாளர் உலகிற்குள் கழுத்தைப் பிடித்துத் தள்ளப்படுகிறார்கள்.

மூன்றாவது கூறிய எழுத்தாளர் வர்க்கத்தைச் சேர்ந்தவன் நான். கொஞ்சங்கூட எதிர்பாராத விதத்தில் எழுத்தாளன் ஆனவன். இன்றைய தினம் நான் "வாடா மலர்" பிரசுராலயத்தின் தலைவனாக இருந்து தமிழ்நாட்டுக்கு இணையில்லாத் தொண்டு செய்து தமிழைக் கொன்று வருவதற்குப் பொறுப்பாளி யார் என்று கேட்டால், நிச்சயமாக நான் இல்லை. என் கைக்குள் அகப்படாத சந்தர்ப்பங்களின் மேலேயே அந்தப் பொறுப்பைச் சுமத்த வேண்டியவனாயிருக்கிறேன். இல்லையென்றால், முதன் முதலாக நான் பேனாவைக் கையில் பிடித்துக் கதை எழுதத் தொடங்கிய வேளையின் கூறு என்று சொல்ல வேண்டும்.

அப்படி எழுத்தாளர் உலகத்தில் என்னைக் கழுத்தைப் பிடித்துத் தள்ளக் காரணமாயிருந்த எனது முதல் கதை என்ன என்று தெரிய வேண்டாமா? அது என்னுடைய சொந்தக் கதையேதான். பர்மாநாட்டிலே, ஒரு அகாதமான காட்டு மலைப் பாதையிலே, மாலை நேரத்தின் மங்கிய வெளிச்சத்திலே அதை எழுதினேன். நான் அவ்விதம் எழுதிக் கொண்டிருந்தபோது, பக்கத்து மரத்தடியிலே யிருந்து இரண்டு அழகிய, விசாலமான, கருநீல வண்டுகளை யொத்த கண்கள், இமை கொட்டாமல் என்னைப் பார்த்துக் கொண்டிருந்தன. சற்று எழுதுவதை நிறுத்தி, நான் சுற்று முற்றும் பார்ப்பதுபோல் பார்த்துவிட்டு, அந்த மரத்தடியையும் நோக்குவேன். அப்போது அந்தக் கண்கள் ஒரு குறுநகை புரிந்துவிட்டு, வேறு பக்கம் நோக்கும். மறுபடி நான் எழுதத் தொடங்கியதும் அந்தக் கண்கள் மீண்டும் என்னை நோக்குகின்றன என்பதை என் உள்ளுணர்ச்சி மட்டுமல்ல — என் உடம்பின் உணர்ச்சியே—எனக்குத் தெரியப்படுத்தும்.

மலர்ந்து விரிந்த அந்த நயனங்களிலேதான் என்ன மாய சக்தி இருந்ததோ, எனக்குத் தெரியாது. அந்த நயனங்களுக் குரியவளான நங்கையிடம் வேறு என்ன மந்திரம் இருந்ததோ, அதுவும் எனக்குத் தெரியாது. அவள் தன் கண்களின் தீட்சண்யமான பார்வையினால், என் உடைமை, உள்ளம், ஆவி எல்லாம்



ஒருங்கே கவர்ந்து, என்னை அடிமை கொண்டு, ய புத்தியுடன் இருந்த காலத்தில் நான் ஒரு நாளும் செய்யத் துணியாத காரியங்களையெல்லாம் செய்யப் பண்ணினாள் என்பது மட்டுந்தான் தெரியும்.

ஆம்; ஒருவிதக் கஷ்டமும் இன்றிச் சுயபுத்தியுடனே தாய் நாட்டுக்குத் திரும்பி வருவதற்கு எனக்குச் சந்தர்ப்பம் இருக்கத்தான் இருந்தது. அதை நான் வேண்டுமென்று தவற விட்டதை நினைத்தால், விதியைத் தவிர வேறு காரணம் எதுவும் சொல்வதற்கு முடியாமலிருக்கிறது.

## 2. ரங்கூன்

★ 1941-ம் வருஷம் டிசம்பர் 23உ உங்களுக்கு ஞாபகமிருக்கிறதா? அந்தத் தேதியை உங்களில் அநேகர் ஞாபகம் வைத்துக் கொள்வதற்குக் காரணம் இல்லாமலிருக்கலாம். ஆனால், நான் அந்தத் தேதியை ஒரு நாளும் மறக்க முடியாது. அன்றைய தினம் ரங்கூன் நகரில் இருக்க நேர்ந்த எவரும் அதைத் தங்கள் வாழ்நாள் உள்ள வரையில் மறக்க முடியாது.

அன்றுதான் முதன் முதலாக ரங்கூனில் ஜப்பான் விமானங்கள் குண்டு போட்டன.

குண்டு விழுந்தபோது நான் என் காரியாலயத்துக்குள் வேலை பார்த்துக் கொண்டிருந்தேன். அபாயச் சங்கு ஊதிச் சற்று நேரத்துக்கெல்லாம், 'விர்' என்று விமானங்கள் பறக்கும் சத்தம், 'ஓய்' என்று குண்டுகள் விழும் சத்தம், 'படார்' என்று அவை வெடிக்கும் சத்தம், கட்டிடங்கள் அதிரும் சத்தம், கண்ணாடிகள் உடையும் சத்தம் எல்லாம் கேட்டன. ஆனாலும், கட்டிடத்துக்குள் பத்திரமாயிருந்த நாங்கள் அவற்றையெல்லாம் அவ்வளவு பிரமாதமாக எண்ணவில்லை.

அபாய நீக்கச் சங்கு ஒலித்து வெளியிலே வேடிக்கை பார்க்க வந்த பிறகுதான், விஷயம் எவ்வளவு பிரமாதமானது என்று தெரிந்தது. ரங்கூன் நகரில் பல இடங்களில் தீப்பற்றி எரிந்துகொண்டிருந்தது. ஜனங்கள் அங்குமிங்கும் பைத்தியம் பிடித்தவர்களைப் போல் ஓடிக் கொண்டிருந்தார்கள். விளைந்த சேதத்தை ஒன்றுக்குப் பத்தாக மிகைப்படுத்திச் சொன்னார்கள். எல்லாம் ஒரே அல்லோல கல்லோலமாயிருந்தது.

டல்ஹௌஸி தெருவில் வீடுகள் பற்றி எரிகிறதென்று கேள்விப்பட்டதும் எனக்கு வயிற்றிலேயே நெருப்புப் பிடித்து விட்டது போலிருந்தது. ஏனெனில் அந்தத் தெருவும் க்ளான் தெருவும் சேரும் மூலையில் ஒரு வீட்டு மச்சு அறையிலேதான் நான் வாசம் செய்தேன். என்னுடைய துணி மணிகள், கையிருப்புப் பணம் முதலிய சகல ஆஸ்திகளும் அந்த அறையிலேதான் இருந்தன. மானேஜரிடம் உத்தரவு பெற்றுக் கொண்டு, கம்பெனியின் காரையே எடுத்துக்கொண்டு வீட்டுக்குப் பறந்து விழுந்துகொண்டு சென்றேன். ஆனால், என்னுடைய வீடு எரியவில்லை. அதற்கு மாறாக நான் சற்றும் எதிர்பாராத ஒரு காட்சி அங்கே தென்பட்டது.

நான் குடியிருந்த வீட்டைச் சுற்றிலும் ஒரு சிறு காம்பவுண்டு உண்டு. அந்தக் காம்பவுண்டில் ஓரிடத்தில்



இருபது முப்பது ஸோல்ஜர்கள் கும்பலாக நின்று கொண்டிருந்தார்கள். வாசல் கேட்டுக்கு அருகில் இரண்டு ஸோல்ஜர்கள் காவலுக்கு நின்றார்கள்.

மோட்டாரைச் சற்றுத் தூரத்தில் நிறுத்தி விட்டு, வீட்டின் 'கேட்' அருகில் சென்றேன். காவல் ஸோல்ஜர்கள் வழி மறித்தார்கள். அது நான் குடியிருந்த வீடு என்றும், என் சாமான்களை எடுத்துக்கொள்ள வேண்டுமென்றும் சொன்னேன். நான் சொன்னதை அவர்கள் நம்பவில்லை. வீட்டுக்காரர்கள் வீட்டைக் காலி செய்து விட்டுப் போய் விட்டார்கள் என்றும் என்னை உள்ளே விட முடியாது என்றும் சொன்னார்கள். அப்புறம், அங்கே எதற்காக ஸோல்ஜர்கள் நிற்கிறார்கள் என்று விசாரித்தேன். மத்தியானம் அங்கே ஒரு குண்டு விழுந்தது என்றும், அது பூமிக்குள்ளே வளை தோண்டிக் கொண்டு போய்ப் புதைந்து கிடக்கிறதென்றும், அதை அபாயமில்லாமல் எடுத்து அப்புறப்படுத்துவதற்கு முயற்சி செய்கிறார்கள் என்றும் அறிந்தேன். அவர்களுடன் விவகாரம் செய்வதில் பயனில்லை யென்று திரும்பிப் போனேன்.

திரும்பி எங்கே போனேன்? அது எனக்கே தெரியாது. கை போனபடி காரை விட்டுக்கொண்டு ரங்கூன் நகரமெல்லாம் சுற்றினேன். அன்று ரங்கூன் நகரம் அளித்த கோரக் காட்சியை என் வாழ்நாள் உள்ள அளவும் என்றும் மறக்க முடியாது.

வீதிகளி லெல்லாம் செத்த பிணங்கள்; சாகப் போகிற பிணங்கள். அங்கங்கே தீப்பற்றி எரியும் காட்சி. நெருப்பணைக்கும் இயந்திரங்கள் அங்கு மிங்கும் பறந்து விழுந்து ஓடுதல், ஜனங்களின் புலம்பல். ஸ்திரீகளின் ஓலம், குழந்தைகளின் அலறல்.

இத்தகைய கோரக் காட்சிகளைப் பார்த்து விட்டு, சூரியாஸ்தமனம் ஆகி நன்றாய் இருட்டிய பிறகு, மறுபடியும் என்னுடைய வீட்டுக்கே திரும்பிச் சென்றேன். வாசற் புறத்தில் மோட்டாரை ஒரு மூலையில் நிறுத்தி விட்டு, காம்பவுண்டு சுவரின் பின்பக்கமாகச் சென்றேன். நான் குடியிருந்த வீட்டிலிருந்து என்னுடைய சொந்த சாமான்களை எடுத்து வருவதற்குத் திருடனைப் போல் சுவர் ஏறிக் குதித்து இருட்டில் பதுங்கிப் பதுங்கிச் சென்று வீட்டின் பின்புறத்தை அடைந்தேன். சத்தம் செய்யாமல் உள்ளே புகுந்து மாடிப் படி வழியாக மேலே ஏறினேன். சாதாரணமாக மாடி அறையை நான் பூட்டிக் கொண்டு போகும் வழக்கம் கிடையாது. அன்றைக்கும் கதவைப் பூட்டவில்லை. "நல்லதாய்ப் போயிற்று" என்று எண்ணிக் கொண்டு கதவைத் திறந்தேன்.

திறந்ததும் மாடி அறைக்குள்ளே நான் கண்ட காட்சி, விழித்துக் கொண்டிருக்கிறேனா, கனவு காண்கிறேனா என்ற சந்தேகத்தை எனக்கு உண்டாக்கி விட்டது. வியப்பினாலும் திகைப்பினாலும் என் தலை கிறுகிறு வென்று சுற்ற ஆரம்பித்தது.

அந்தக் காட்சி என்னவென்றால், அந்த மச்சு அறையின் பலகணியின் அருகில் ஓர் இளம் பெண் நின்று ஜன்னல் வழியாக வெளியே பார்த்துக் கொண்டிருந்தாள். காம்பவுண்டில் ஸோல்ஜர்கள் வைத்துக் கொண்டிருந்த டார்ச் லைட்டிலிருந்து மங்கிய வெளிச்சத்தில் அந்தப் பெண்ணின் முதுகுப் பக்கம் 'ஸில்ஹவுட்' படம் மாதிரி தெரிந்தது. அவள் யாரா யிருக்கும்? ஜன சூன்யமான இந்த வீட்டில் இந்த நேரத்தில் தன்னந் தனியாக அவள் என்னுடைய அறையில் இருப்பது எப்படி?

மனதில் துணிச்சலை வருவித்துக்கொண்டு, "யார் அங்கே?" என்று கேட்டேன். வெளியிலிருந்த ஸோல்ஜர்களுக்குக் கேட்கக் கூடாதென்று மெல்லிய கம்மல் குரலில் பேசினேன். அந்த இடத்தில் அந்த வேளையில் என்னுடைய குரல் எனக்கே பயங்கரத்தை அளித்தது என்றால், அந்தப் பெண் அப்படியே பேயடித்தவள் போல் துள்ளித் திரும்பி என்னைப் பீதி நிறைந்த கண்களால் பார்த்ததில் வியப்பு இல்லை யல்லவா?

ஆனால் திரும்பிப் பார்த்த மறு கணத்தில் எங்கள் இருவருடைய பயமும் சந்தேகமும் நீங்கி வியப்பு மட்டுந்தான் பாக்கி நின்றது. என்னைப் பொறுத்த வரையில், மனத்திற்குள்ளே ஒருவகையான ஆனந்த உணர்ச்சி உண்டாகவில்லை யென்று சொல்ல முடியாது.

"சீதா?"

"நீங்களா?"

நான் சாப்பிட்டுக் கொண்டிருந்த கல்பாத்தி ஹோட்டலுக்குப் பக்கத்து வீட்டு வாசலில் சில சமயம் இந்தப் பெண்ணை நான் பார்த்திருக்கிறேன். அப்போதெல்லாம் அவளையும், தாய் நாட்டிலே எனக்கு மாலையிடுவதற்காகக் காத்துக் கொண்டிருக்கும் என் அத்தை பெண்ணையும் என் மனம் ஒப்பிட்டுப் பார்ப்பதுண்டு. (நான் பர்மாநாட்டுக்கு வந்ததின் காரணங்களில் ஒன்று, அத்தை மகளுடன் என் கலியாணத்தை ஒத்திப் போடுவதற்கு என்னும் இரகசியத்தை இந்த இடத்தில் சொல்லி வைக்கிறேன்.)

மற்றப்படி வேறு விதமான எண்ணம் அந்தப் பெண்ணைப் பற்றி என் மனத்தில் உண்டானதில்லை. ஏனெனில், அந்த வீட்டிலே குடியிருந்த ராவ்சாஹிப் ஏ. வி. சுந்தர் என்பவர் ரங்கூனில் உள்ள தென்னிந்தியர்களுக்குள்ளே ஒரு பிரமுகர் என்றும், மாதம் இரண்டாயிரம் மூவாயிரம் வருமானம் உள்ளவரென்றும் எனக்குத் தெரியும். அப் பேர்ப்பட்டவருடைய புதல்வியைக் குறித்துக் கனவு காண்பதிலே என்ன பிரயோஜனம்?

அந்தப் பெண் இப்போது என் அறையில் இருட்டில் தன்னந் தனியாய் நிற்பதைக் கண்டதும் எனக்கு எப்படி இருந்திருக்கும் என்று நீங்களே ஊகித்துக் கொள்ளலாம்.

## 3. கிழக்கு ரங்கூன்

★ என் வியப்பை ஒருவாறு அடக்கிக் கொண்டு, "இங்கே எப்படி வந்தாய்? எப்போது வந்தாய்?" என்று கேட்டேன்.

"நீங்கள்?" என்று அவள் திருப்பிக் கேட்டதில், பல கேள்விகள் தொனித்தன.

சற்றுக் கோபத்துடன், "அப்படியா? உனக்கு அவசியம் தெரியவேண்டுமா? இது என்னுடைய அறை! என் அறையிலிருந்து என் சாமான்களைத் திருடிக் கொண்டு போவதற்காக வந்தேன். கொல்லைப்புறமாகச் சுவர் ஏறிக் குதித்து வந்தேன். வந்த வழியாகத் தான் திரும்பிப் போகப் போகிறேன். உனக்கு இங்கே ஏதோ முக்கியமான வேலை இருப்பதாகத் தெரிகிறது. கவலைப்படாதே! இதோ போய் விடுகிறேன்" என்று சொல்லி என் கைப்பெட்டியைத் தூக்கிக்கொண்டேன்.

"ஐயோ! என்னையும் அழைத்துக் கொண்டு போங்கள். உங்களுக்குப் புண்ணியம் உண்டு!" என்று அவள் கூறியபோது, அவளுடைய நெஞ்சு 'பட், பட்' என்று அடித்துக் கொள்ளும் சத்தமே நான் கேட்கக் கூடியதா யிருந்தது.

அவளிடம் நான் உடனே இரக்கம் கொண்டாலும் இன்னும் கொஞ்சம் அவளைக் கெஞ்சப் பண்ணவேண்டுமென்ற அசட்டு எண்ணத்தினால், "அதெல்லாம் முடியாது. புண்ணியமும் ஆச்சு, பாவமும் ஆச்சு! எனக்கு வேறு வேலை இல்லையா?" என்றேன்.

உடனே, அந்தப் பெண், "அப்படியா சமாசாரம்? இதோ நான் 'திருடன்' 'திருடன்' என்று கூச்சல் போடுகிறேன்!" என்று சொல்லிக் கொண்டே ஜன்னல் பக்கம் போனாள். நான் அவசரமாய்ச் சென்று அவளைக் குறுக்கே மறித்து, "வேண்டாம்! வேண்டாம்!" என்று சொல்லிக் கொண்டே அவளுடைய கரங்களைப் பற்றினேன். மேலே போகாமல் அவளைத் தடுப்பதற்காகவே அவ்விதம் செய்தேன். அவளோ, திருப்பி என் கைகளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, "என்னை அழைத்துக் கொண்டு போவதாகச் சத்தியம் செய்து கொடுங்கள். இல்லா விட்டால், கூச்சல் போடுவேன்!" என்றாள்.

அவளுடைய கைகளைத் தொட்ட அதே கிஷணத்தில் நான் என் சுதந்திரத்தை அடியோடு இழந்து அவளுக்கு அடிமையாகி விட்டேன் என்பதையும், அவளுடைய சுண்டு விரலால் ஏவிய காரியங்களை யெல்லாம் சிரஸினால் செய்யக்கூடிய நிலைமையில் இருந்தேன் என்பதையும் நல்ல வேளையாக அவள் அறிந்து கொள்ள வில்லை. நானும் அவளுக்கு அச்சமயம் தெரியப்படுத்த விரும்பவில்லை.

"ஆகட்டும்; பயப்படாதே! உன் அப்பா, அம்மா எங்கே?" என்று கேட்டேன்.

"அப்பா, அம்மாவா?" என்று அந்தப் பெண் பெருமூச்சு எறிந்தாள். மறுபடியும் "நல்ல அப்பா, நல்ல அம்மா!" என்று பல்லைக் கடித்துக் கொண்டாள்.

அழுகையும் ஆத்திரமுமாக அவள் கூறியதிலிருந்து பின்வரும் விவரங்கள் தெரிய வந்தன:—

அன்று மத்தியானம் அந்தப் பெண் ஸ்நான அறையில் குளித்துக் கொண்டிருந்தபோது, திடீரென்று 'ஸைரன்' ஊதிற்றாம். அவசர அவசரமாக அவள் குளித்து முடிப்பதற்குள் 'டுடும்' 'டுடும்' என்று காது செவிடுபடும் சத்தம் கேட்டதுடன், வீடே அதிர்ந்ததாம். அந்த அதிர்ச்சியில் அவள் தடாலென்று தரையில் விழுந்தாளாம். தலையிலே அடிபட்டு மூர்ச்சையாகி விட்டாளாம். மூர்ச்சை தெளிந்து எழுந்து உடை உடுத்திக் கொண்டு ஸ்நான அறையிலிருந்து வெளியே வந்து பார்த்தால் வீட்டிலே ஒருவரும் இல்லையாம். கொஞ்ச தூரத்தில் தீப்பிடித்து எரியும் காட்சி தென்பட்டதாம். வீதியிலே ஒரே அல்லோல கல்லோலமாயிருந்ததாம். அவள் வீட்டுக்கு வெளியே ஓடி வந்து அக்கம் பக்கத்து வீடுகளில் அப்பா, அம்மாவைப் பற்றி விசாரிக்கலாமென்று ஓடி ஓடிப் பார்த்தாளாம். சில வீடுகளில் ஒருவருமில்லையாம். சில வீடுகளில் சாமான்களை அவசரமாக அப்புறப் படுத்திக் கொண்டிருந்தார்களாம். இவளைக் கவனிப்பாரோ, இவளுடைய கேள்விக்குப் பதில் சொல்வாரோ, ஒருவரும் இல்லையாம். கடைசியில், இந்த வீடு திறந்து கிடப்பதைக் கண்டு உள்ளே வந்தாளாம். வீட்டில் ஒருவரும் இல்லாமலிருக்கவே, மச்சு அறையில் யாராவது இருக்கலாமென்று மேலே ஏறினாளாம். அவள் மச்சு அறையில் இருக்கும் போது ஸோல்ஜர்கள் வந்து வீட்டைச் சூழ்ந்து கொண்டார்களாம். பிறகு வெளியில் வரப் பயப்பட்டுக் கொண்டு மச்சு அறையிலேயே ஒளிந்து கொண்டிருந்தாளாம்.

இதை யெல்லாம் கேட்டபின், "உன் அப்பா — அம்மாவுக்குத் தெரிந்தவர்கள், சிநேகிதர்கள், இந்த ஊரில் யார் இருப்பார்களோ? அவர்களுடைய விலாசங்கள் ஏதாவது உனக்குத் தெரியுமா? ஒரு வேளை எந்த சிநேகிதர் வீட்டுக்காவது போயிருக்கலாமல்லவா?" என்று விசாரித்தேன்.

"போயிருக்கலாம்" என்று சொல்லி, கிழக்கு ரங்கூனில் இரண்டு மூன்று வீடுகளையும் அவள் சொன்னாள்.

உடனே, ஒரு முடிவுக்கு வந்தேன். என் கைப் பெட்டியை ஒரு கையிலே எடுத்துக் கொண்டு அவளை இன்னொரு கையினால் பிடித்துக் கொண்டு கிளம்பினேன். மச்சிலிருந்து கீழே இறங்கி வீட்டின் கொல்லைப் புறமாகச் சென்று காம்பவுண்டுச் சுவரின் மேல் முதலில் அவளை ஏற்றி விட்டுப் பெட்டியை எடுத்துக் கொடுத்தேன். பிறகு நான் ஏறிக் குதித்து, அவளையும் இறக்கி விட்டுப் பெட்டியை எடுத்துக்கொண்டு போய்க் காரில் வைத்தேன்.

டிரைவர் ஆசனத்தில் நான் உட்கார்ந்ததும், அவள் காரின் பின் கதவைத் திறந்துகொண்டு பின் ஸீட்டில் உட்கார்ந்தாள். இது எனக்கு மிகவும் மகிழ்ச்சி தந்தது. அரைப் படிப்புப் படித்து நாணம், மடம் முதலிய ஸ்திரீகளுக்குரிய குணங்களைத் துறந்த பெண் அல்ல அவள் என்பதற்கும் அது அறிகுறியாயிருந்தது.

அதிர்ஷ்டவசமாக, முதல் முதல் நான் காரைக் கொண்டுபோய் நிறுத்திய வீட்டிலேயே அந்தப் பெண்ணின் அப்பா, அம்மா இருந்தார்கள். ராவ்சாகிப் வீட்டு வாசலிலேயே நின்று கொண்டிருந்தார். அவருடைய பெண் காரிலிருந்து இறங்கியதும், அவர் வரவேற்புக் கூறிய விதம் எனக்குத் திகைப்பை அளித்தது.

"வந்து விட்டாயா! வஸந்தி! வா!" என்றார். உடனே வீட்டுக்கு உட்புறம் பார்த்து, "அடியே! தவித்துக் கொண்டிருந்தாயே? இதோ வஸந்தி வந்து விட்டாள்!" என்றார். ஒரு அம்மாள் உள்ளிருந்து வாசற்படியண்டை வந்து, "வந்து சேர்ந்தாயாடி, அம்மா! ஏதோ பகவான் இருக்கிறார்!" என்றாள்.

அந்தப் பெண் வீட்டுக்குள்ளே போனதும் அவளுடைய அப்பாவும் உள்ளே போய்க் கதவைப் படேரென்று சாத்தினார்.

பெண்ணை அழைத்துக் கொண்டு வந்தவனுக்கு ஒரு வார்த்தை வந்தனம் கூடச் சொல்லவில்லை!

## 4. மாந்தலே

★ ரங்கூனிலிருந்து இந்தியாவுக்கு வந்தவர் யாரை வேணுமானாலும் விசாரித்துப் பாருங்கள். "ரங்கூனுக்குச் சமானமான நகரம் உலகத்திலே உண்டா?" என்றுதான் கேட்பார்கள்.

அப்படிக் குதூகலத்துக்கும் கோலாகலத்துக்கும் பெயர் போனதாயிருந்த ரங்கூன் நகரம் மேற்படி டிசம்பர் 23௳ சம்பவத்துக்குப் பிறகு சில தினங்களில் அடைந்த நிலைமையை எண்ணிப் பார்த்தால் இப்போது கூட எனக்கு என்னமோ செய்கிறது.

கோலாகலம் குதூகலம் எல்லாம் போய்ச் சாவு நிறைந்த வீட்டின் நிலைமையை ரங்கூன் அடைந்து விட்டது. ஜனங்கள் அதி விரைவாக நகரைக் காலி செய்து போய்க் கொண்டிருந்தார்கள். மனுஷ்யர்களை நம்பி உயிர் வாழ்ந்த நாய்கள், பூனைகள், காக்கைகள் முதலிய பிராணிகளும் பட்சிகளும் உணவு கிடைக்காமையால் எலும்புக் கூடுகளாகி தீனக் குரலில் ஊளை யிட்டுக் கொண்டும் முனகிக் கொண்டும் அங்குமிங்கும் அலைந்த காட்சி பரிதாபகரமாயிருந்தது.

